கடவுள் துணை

காரியாசான் இயற்றிய

# சிறுபஞ்ச மூலம்

## மூலமும்,

மதுரை ஜில்லா சேம்பூர் வித்வான்

ஸ்ரீமத். வீ. ஆறுமுகஞ்சேர்வை அவர்களால்

எழுதப்பெற்ற

## விருத்தியுரையும்.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,
87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1923

விலை அணா 12

# முன்னுரை

"சிறுபஞ்சமூலம்" என்னும் இந் நூலானது, சங்க மருவிய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க் கணக்கு என்னும் மூவகைத் தொகை நூல்களுள் ஒன்றாகிய பதினெண் கீழ்க்கணக்குத் தொகை நூல்களுள் ஒன்றாகும். பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்:

> "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
> பால்கடுகங் கோவை பழமொழி—மாமூல
> மின்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
> கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு."

என்ற வெண்பாவிற் கூறப்பட்டவைகளாம். இச் செய்யுளின்படி நாலடியார்-1, நான்மணிக்கடிகை—1, நானாற்பது (நால்+நாற்பது)—நாற்பது செய்யுட்களில் அமைந்த நூல்கள்—4 (அவையாவன: இன்னாநாற்பது, இனியவை நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது), ஐந்திணை—திணையைப்பற்றிய நூல்கள்—5 (அவையாவன: ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, ..................), முப்பால் (அறம், பொருள், இன்பம் என்னும் முப்பால்களைக் கூறும் நூலாகிய திருக்குறள்)-1, கடுகம் (திரிகடுகம்)-1, கோவை (ஆசாரக்கோவை)-1, பழமொழி-1, மூலம் (சிறுபஞ்சமூலம்)-1, இன்னிலை-1, காஞ்சி(முதுமொழிக்காஞ்சி)-1, ஏலாதி-1, ஆக இந் நூல்கள் பதினெட்டாம்; இவற்றுள் திணையைப்பற்றிய

நூற்றைம்பது செய்யுட்களைக் கொண்ட நூலொன்றிற்குப் பெயர் விளங்கவில்லை. இந்நூல் காணக்கிடையா தென்பர் சிலர்; கைந்நிலை அல்லது இன்னிலை என்பர் சிலர்.

இத்தகைய கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய இச் சிறுபஞ்ச மூலமென்னும் இந்நூலானது, வாகட நூற்களிற் கூறப்பட்ட பஞ்சமூலங்கள் மானிடரின் பிணிகளைத் தீர்ப்பதுபோலத் தன்னில் அமைந்த ஒவ்வொரு செய்யுட்களிலும் அடங்கிய ஐந்து ஐந்து விஷயங்களாலும் தன்னைப் படித்துணர்வாரின் பிறவிப் பிணியை அகற்றத்தக்க நன்னீதி மார்க்கங்களை விளக்கிக் காட்டவல்லது. இதன் பெயர்க் காரணம் முதலியவற்றைப் பற்றிய இலக்கணக் குறிப்புக்கள் இரண்டாம் செய்யுளில் விசேடவுரையில் விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன.

இதனை இயற்றியவர் காரியாசான் என்பவராவர்; இந்நூலின் ஈற்றுச் செய்யுளால், இவர் மாக்காயனார் மாணாக்கர் என்பதும், முதற் செய்யுட்கண்ணுள்ள கடவுள் வாழ்த்து முதலிய சில குறிப்புக்களால் ஜைனமதத்தைச் சார்ந்தவரா யிருக்கலா மென்பதும் விளங்குகின்றனவே யன்றி, இவரைப்பற்றிய மற்றைய சரித்திரங்களை உணர்வதற்கு ஏது வொன்றுமில்லை. எனினும், இவரால் இயற்றப்பட்ட இந்நூல் சங்கமருவிய நூல்களுள் ஒன்றா யிருத்தலின், இவர் கடைச்சங்கப்புலவர் காலத்திலோ அதற்கு முன்னோ இருந்த ஒரு தமிழ்ப்புலவ ரென்பதுமட்டும் புலனாகின்றது.

இந்நூல் மானிடர்க்கு உறுதிப் பொருள்களை உணர்த்தும் உயர்ந்த பெற்றி வாய்ந்ததா யிருந்தும், செவ்வனே பொருள் விளங்குதற் கரிய பண்டைச் செய்யுட்களை யுடையதாயும், விளக்கமான உரையில்லாததாயும், ஏட்டுப்

பிரதிகளில் எழுதியவர்களால் நேர்ந்த பிழைகள் சரியான
படி களையப்படாமல் வியாபாரிகளால் அச்சிடப்பட்டதாயு
மிருந்ததால், இதன் செய்யுட்களில் பல, பொருட் பொரு
த்தமின்மை, பொருள் விளங்காமை, தளைத்தட்டு முதலிய
வழுக்கள் நிறைந்திருந்தன. உரையில் சிற்சில விடங்களில்
பொருள் இன்னதென விளங்காமலும், உலகவழக்கு நூல்
வழக்குக்களுக்கு மாறுபட்டும், நூற்பெயர்க்குத் தக ஐந்து
விஷயங்கள் வகுத்துக் காட்டப்படாமலும், இன்னுஞ் சில
வழுக்கள் நிறைந்து மிருந்தன. இக் காரணங்களால் தமிழ்
மக்கள் இந் நூற்பொருளை ஐயமற வுணர்ந்து இதன் பயனை
அடைதற் கேதுவில்லாம லிருந்தது. ஆதலின், இந் நூலு
க்குத் தெளிவான உரையொன் றெழுதி வெளியிடுமாறு
சில தமிழபிமானமுள்ள கனவான்கள் எனக்குக் கட்டளை
யிட்டார்கள். தெய்விகப் புலமை வாய்ந்த பேராசிரியர்க
ளால் இயற்றப்பெற்ற சங்கச் செய்யுட்களுக்கு உரை வகுக்
கும் ஆற்றல் என்பால் இலதெனினும், பெரியார் கட்டளை
யை மறுத்தற் கஞ்சியதாலும், தமிழ்த் தொண்டை
நான் மேற்கொண் டிருத்தலானும், அங்ஙனமே உரை
யெழுதத் தொடங்கி என் சிற்றறிவிற் கெட்டிய வரையில்
இந் நூலின் இவ் விரிவுரையை இப்போது இயற்றி வெளி
யிடலாயினேன். இவ் வுரை முழுவதையும் நோக்குவார்க்கு,
இதில் நான் எடுத்துக்கொண்டிருக்கும் அரும் பிரயாசை
நன்கு விளங்கும். இதில், வழுச்செறிந்து சிதைந்து கிடந்த
செய்யுட்க ளெல்லாம் பொருட் பொருத்தத்திற் கியைய
என்னால் நன்கு திருத்தி யமைக்கப்பட் டிருக்கின்றன.
சிறிய மாணவர்க்கும் சந்தேகமின்றிப் பொருள் விளங்கு
மாறு ஒவ்வொரு செய்யுட்களின் உரைகளும் உலகவழக்கு,
செய்யுள்வழக்கு முதலியவற்றிற்குத் தக விரித்து விளக்கி

எழுதப்பட் டிருக்கின்றன. நூலியற்கைக்குத் தக ஐந்து விஷயங்கள் விளக்கிக் காட்டப்படாமலிருந்த விடங்களில் வலிந்து பொருள் கொண்டு அவை விளக்கிக் காட்டப்பட் டிருக்கின்றன. இந் நூலாசிரியர் ஜைனராக விளங்குகின்ற மையின் பெரும்பான்மையும் இவ்வுரை ஜைனமதப்போக் கைத் தழுவியே சிற்சில விடங்களில் எழுதப்பட்டிருக் கின்றன.

இந் நூலின் பழைய பிரதிகளில் 85-வது செய்யுளுக்கு மேல் ஒரு செய்யுள் முழுவது மிருந்தும் வழுச்செறிந்து சிதைந்து எவ்விதத்தும் பொருள் கண்டு திருத்தியமைக்க முடியாமலும், அதன்மேல் 5-செய்யுட்கள் முழுவதும் இல்லாமலும், அவற்றிற்கப்பால் ஒரு செய்யுள் சிதைந்து போன மூன்றடிகளை யுடையதாயு மிருந்தபடியால் அந்த 7 செய்யுட்களையும் தள்ளி மற்றவைகளுக்குமட்டும் உரை யெழுதப்பட் டிருக்கின்றது. இவற்றை, இப் பதிப்புடன் சேர்த்துவிடுதற்கு முயன்று சிற்சில விடங்களிலுள்ள சுவடி களைத் தேடிப் பார்த்ததில் இவை அகப்படவில்லை. ஆத லின், எங்கேனும் கல்வியாளர்க்கு இச் செய்யுட்கள் அகப் படின் இவற்றை எனக்கெழுதி யனுப்புமாறு அவர்களை வணக்கமாகக் கேட்டுக்கொள்கிறேன். அங்ஙனம் இச் செய்யுட்கள் கிடைத்தால் இவற்றை மறு பதிப்பிற் சேர்த்து அச்சிடுவேன்.

இந்நூலில் பிழைபட்டுக் கிடந்த சில செய்யுட்களை நான் திருத்தி யமைத்ததற்கும், மாறுபாடாயிருந்த சில உரைகளைத் தள்ளி ஒழுங்கான உரைகளைச் சேர்த்ததற் கும், திருத்தமான வழிகளை விரும்பாத சில குதர்க்கவாதி கள், "பெரியோர் செய்யுட்களையும் உரைகளையும் இவர்

திருத்திக் கொடுத்துவிட்டார்; முந்தின உரைகளிருக்கும் புத்தகங்களுக்கு இவர் வேறு உரைகளை எதற்காக எழுத வேண்டும்? இவர் பழைய ஆசிரியர்களுடைய உரையை வைத்துக்கொண்டு புரட்டிப் புத்தகங்களுக்கு உரையெழுதுகிறவர்” என்று குறை கூறக்கூடும். இதற்கு முன் அத்தகைய சிலர் நான் செய்த உரைகட்கு இங்ஙனம் கூறியதாகவும் கேள்விப்பட்டிருக்கின்றேன். பண்டைக்காலத்து நூல்கள் பலவாலும் சுவடிகளில் பல்லாண்டுகளாக எழுதப்பட்டு வந்தமையால் அவற்றில் அநேகம் பிழைகள் நேர்ந்திருத்தல் கூடும். அவற்றைச் சிலர் நன்றாகப் பரிசோதிக்காமல் அச்சிட்டுவிடுவதால் பழைய செய்யுட்களினும் உரைகளிலும் உள்ள பிழைகள் அப்படியே இருந்துவிடல் கூடும். பண்டைத் தமிழ் நூல்களுக்குப் பிற்பட்ட காலத்தில் சாமானியர் மனம் போனபடி தப்பான உரைகளை எழுதி வைத்துவிடக் கூடும். உயர்ந்த வித்வான்கள் நல்ல உரைகளை எழுதிவைத் திருப்பினும் பிரசுரிப்பவரின் அசிரத்தையால் அவை பிழைபட்டுவிடுதலுங் கூடும். இத்தகைய நூல்களையும் உரைகளையும் வைத்துக்கொண்டு பெரியோர் வாக்கைத் திருத்தக் கூடாதென்றும், பெரியோர் உரையிருக்க வேறொருரை யெழுதக் கூடாதென்றும் சொல்லிக் கொண்டிருப்பதில் பயனென்ன? இவற்றால் பிழைபட்ட கல்வியன்றோ உலகத்திற் பரவும். பிழைபட்டவைகளைத் திருத்தி யமைத்து உலகிற்குப் பயன்படச் செய்தலே அறிஞர்க் கழகாம். ஆதலின், என்னாற் செய்யப்பட்டுவரும் இத்தகைய வேலைகளைப்பற்றி உண்மைக் கல்வி யபிமானமுள்ளார் ஒருபோதும் குறை கூறமாட்டார்கள். முன்னுரைத்தபடி குறை கூறுவோரும் என்னால் எழுதப்பட்டவைகளை நன்றாக ஆராய்ந்து பார்ப்பார்களாயின் அங்ஙனம் கூறமாட்

டார்கள். ஆதலின், அத்தகையினர் கூற்றால் எமக்கொரு குறைவு மின்று.

உலகிற்குப் பெரும் பயனைத் தரும் இந் நூலுரையை இங்ஙனம் நான் மிக்க பிரயாசையின்மேல் எழுதி முடித்து வெளியிட்டிருத்தலின், தமிழ் மாந்தர் எல்லோரும் இதனை ஆதரித்து எனக்கு மனக்களிப்பை யுண்டாக்குமாறு விரும்புகிறேன்.

என்னுடைய அறியாமையாலோ பிற காரணங்களாலோ இதிற் சில பிழைகள் நேர்ந்திருப்பினு மிருத்தல் கூடும். அங்ஙனம் குறைகள் காணப்படின் அறிவுடையோர் அவற்றை எனக்குத் தெரிவித்தால் இதன் மறு பதிப்பில் திருத்திக்கொள்வேன்.

"குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்."

இந் நூலை வெளியிடுவித்தவர்க்கும், வெளியிட்டவர்க்கும், படித்துப் பய னுணர்வார்க்கும் எல்லாம் வல்ல இறைவன் என்றென்றும் திருவருள் புரிவானாக.

இங்ஙனம்:

வீ. ஆறுமுகன்.



உ

சிவமயம்

## சிறுபஞ்சமூலத்தின்

# செய்யுள் முதற்குறிப் பகராதி.

செய்யுள் — பக்கம்


அரம்போற் 117
அழியாமை 95
அறனட்டா 64

ஆ

ஆணாக்கம் 66
ஆம்பல்வாய் 106

இ

இடரின்னா 31
இல்லியலார் 78
இன்சொலா 165

ஈ

ஈன்றெடுத்தல் 135
ஈவதுநன்று 174

உ

உடம்பொழிய 13
உடையிட்டார் 85
உண்ணாமை 102
உண்ணிடத்து 175
உயிர்நோய்செய் 70

ஏ

ஏலாமைநன் 116

ஒ

ஒத்தவொழுக்கம் 4
ஒருவனறிவானா 69

க

கண்ணாங்காற் 160
கண்வனப்பு 20
கதநன்று 38
கலங்காமை 139
கல்லாதான் 11
கழிந்தவை 152
கள்ளான் 49
கள்ளுண்டல் 59
கற்புடைய 9

கா

காடுபோற் 153

கு

குளக்தொட்டு 125

கோ

கொண்டான்கொ 105
கொண்டான்வழி 33
கொல்லாமை 101
கொன்றான் 132
கொன்றுண்பா 22

கோ

கோறலுஞ் 29

ச

சத்தமெய்ஞ் 159

சி

சிக்கர்சிதடர் 142
சிலம்பிக்கு 25
சிறைக்கிட 133

சூ

சூலாமை 140

த

தக்கதிளையான் 167
தக்கார்வழி 150
தன்னிலையர் 111

தா

தான்பிறந்த 128

செய்யுள் பக்கம்

தே
தேவரேகற்ற 46
தொ
தொழீஇயட 80
தோ
தோற்கன்று 155
ந
நகையொடு 157
நகைகொல்லார் 97
நட்டாரை 41
நல்லவெளிப்படு 110
நன்புலத்து 114
நா
நாணிலனாய் 161
நாணிலான் 27
நாணெளிது 163
நாள்கூட்ட 89
நீ
நீண்டநீர் 98
நீரறநன்று 120
நெ
நெடுக்கல் 130
நெய்தன்மூசிழ் 67
ப
பக்கம்படாமை 143
பஞ்சப்பொழுது 147
படைதனக்கு 16
பண்டாராம் 83
பத்தினி 178
பற்றினான் 18
பி
பிடிப்பிச்சை 121
பிழைத்தல் 36
பு
புண்பட்டார் 145
புல்லறத்தி 171
பூ
பூத்தாலுங்காயா 55
பூவாதாள் 87
பூவாதுகாய்க்கு 51
பெ
பெருங்குண 60
பே
பேணடக்கம் 91
பொ
பொச்சாப்பு 100
பொய்யாமைநன் 82
பொய்யாமைபொ 43
பொய்யாற்சுவர் 129
பொருளுடையான் 6
பொருள்போக 113
பொன்பெறுங் 108
போ
போர்த்துமுரி 126
ம
மக்கட்பெறுதன் 104
மயிர்வனப்பு 79
மல்லிகர்தோண் 181
மு
முழுதுணர்ந்து 1
வ
வடிவிளமை 57
வருவாய்க்கு 88
வலியழிந்தார் 137
வரைவில்லா 148
வழிப்படரல் 180
வா
வார்சான்ற 93
வான்குருவி 62
வெ
வெந்திக்காண் 123
வே
வேட்பவன் 72
வை
வைகதனானாகும் 76
வைப்பானே 74

சிறுபஞ்சமூலத்தின்

செய்யுள் முதற்குறிப் பகராதி முற்றிற்று.

---

கடவுள் துணை.

# சிறுபஞ்ச மூலம்

## மூலமும் உரையும்.

### சிறப்புப் பாயிரம்.

### கடவுள் வாழ்த்து.

நேரிசை வெண்பா.

1. முழுதுணர்ந்து மூன்றொழித்து மூவாதான் பாதம்
பழுதின்றி யாற்றப் பணிந்து—முழுதேத்தி
மண்பாய ஞாலத்து மாந்தர்க் குறுதியா
வெண்பா வுரைப்பன் சில.

(பதவுரை) முழுது உணர்ந்து - எல்லாவற்றையும் அறிந்து, மூன்று ஒழித்து-முக்குற்றங்களையும் நீக்கி, (இவற்றால்), மூவாதான்-முடிவில்லாதவனாகிய கடவுளின், பாதம் - திருவடிகளை, பழுது இன்றி - குற்றமில்லாமல், ஆற்ற - மிகுதியாக, பணிந்து - வணங்கி, முழுது எத்தி-(அவனுடைய கலியாண குணங்கள்) எல்லாவற்றையுங் கூறித் துதித்து, மண்-மண்ணானது, பாய-பரவி யிருக்கின்ற, ஞாலத்து - இப் பூமியிலுள்ள, மாந்தர்க்கு - மனிதர்க்கு, உறுதியா-நன்மையுண்டாகுமாறு, சில வெண்பா-சில வெண்பாக்களா லாகிய சிறுபஞ்சமூல மென்னும் இந்நூலை, உரைப்பன் - யான் சொல்லுவேன்.

(கருத்துரை) நிலைபெற்ற கடவுளின் பாதங்களை வணங்கித் துதிசெய்து இந் நில வுலகினர்க்கு நன்மை யுண்டாகுமாறு இந்நூலை யான் கூறுவேன் என்பதாம்.

(விருத்தியுரை) இச் செய்யுளில் தெய்வ வணக்கமும், செயப்படுபொருளும் உரைக்கப் படுகின்றன வாதலின், இது சிறப்புப் பாயிர மெனப்படும்.

"தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளும்
எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்"

என்றதால், இதனைச் சிறப்புப் பாயிரமெனக் கோடல் பொருந்துமென்க. தெய்வ கிருபை யின்றி, உலகில் எடுத்த காரியம் இடையூறகன்று இனிது முடிதல் அருமை யாகலான், ஆசிரியர் இந்நூலும் இடுக்கணின்றிப் பூர்த்தி பெறுமாறு தெய்வ வணக்கங் கூறினார்.

"வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து
மங்கல மொழிமுதல் வகுத்தெடுத்துக் கொண்ட
விலக்கண விலக்கிய
மிடுக்க ணின்றி யினிது முடியும்"

என்பது விதி. இதில், முதலில் வைத்த 'முழுது' என்னுஞ் சொல் பூரண மென்னும் பொருள் தருதலின், அது மங்கலச் சொல்லாம். முழுது முணர்தலை அனந்த ஞானம் என்பர் ஜைனர்; வடநூலார் சர்வஜ்ஞத்துவம் என்பர். முக் குற்றங்களாவன: காமம், வெகுளி, மயக்கம் என்பனவாம். இறைவன் மூடிவற்றவனாதலின், அவனை 'மூவாதான்' என்றார் ஆசிரியர்; இதில் மூ - பகுதி; இது முடிவை யுணர்த்தும்; இதனை "மூவா முதலா வுலகம் ஒரு மூன்று மேத்த" என்னும் ஜீவகசிந்தாமணிக் கடவுள் வாழ்த்துச் செய்யுளடியானு முணர்க. இறைவனுக்கு முழுதுணர்ச்சி எப்பொழுது முண்டு; முக் குற்றங்கள் இயல்பாகவே யில்லை. இங்ஙனம் அனந்த ஞானமும், முக்குற்ற மின்மையும் அமையவே, இவற்றால் அவனுக்கு என்றுமொரு தன்மையனா யிருக்கும் குணம் ஏற்பட்டது; இது பற்றியே ஆசிரியர் இறைவனை, 'முழுதுணர்ந்து மூன்றொழித்து மூவாதான்' என்றார். கட-

னுள் பாதத்தை பழுதோடு அசிரத்தையாகப் பணிந்தால் நற்பயன் சித்திக்காது; ஆதலின், 'பழுதின்றி ஆற்றப் பணிந்து' என்றார்; பழுதாவது: வழிபாடு செய்தலில் தவறுண்டாவது. பணிதல் - சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தல்; ஏத்தல்-இறைவன் குணங்களை வாயினால் ஸ்தோத்திரம் செய்தல். பணிதல் தேகத்தின்றொழில், துதித்தல் வாக்கின்றொழில், சிந்தித்தல் மனத்தின்றொழில்; கடவுளை மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று காரணங்களாலும் வழிபடல் முறைமையாயிருக்க, இங்கு இரண்டே கூறியதென்னையெனின், மனமின்றித் தேகத்தில் எத்தொழிலும் நிகழாதாதலின்; இவ் விரண்டுங் கூறவே மனத்தின் றொழிலாகிய சிந்தித்தலும் அமைந்திருத்தலின், இங்ஙனங் கூறி மூன்றனையும் விளக்கினாரென்க. இந்நூலைப் பார்த்த மாந்தர்க்கு நன்மையே உண்டாகுமாதலின், 'மாந்தர்க் குறுதியா வெண்பா வுரைப்பன் சில' என்றார். இங்கே நன்மையென்றது, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கையும் அடைதலாம். 'அறம் பொருளின்பம்வீ டடைதனூற் பயனே' என்றபடி, இதில் பாயிரத்திற் குரிய நூற்பயனும் அமைந்திருத்தல் காண்க. 'சில வெண்பா' என்பது கருவியாகு பெயராய்ச் சில வெண்பாக்களாலாகிய நூலை உணர்த்திற்று. உணர்ந்து, ஒழித்து என்பன வினையெச்சங்கள்; இவை மூவா என்னும் எதிர்மறை வினைகொண்டு முடிந்தன. மூவாதான் - வினையாலணையும் பெயர். பணிந்து, ஏத்தி என்னும் வினையெச்சங்கள் உரைப்பன் என்னும் வினைமுற்றோடு முடிந்தன. உரைப்பன் என்ற பயனிலைக் கேற்ப 'யான்' என்பது தோன்றா எழுவாயாக வருவித் துரைக்கப்பட்டது. உறுதியாக என்பதில் ககரம் தொக்கது.

'சிறுபஞ்சமூலம்' என்ற இந் நூற்பெயர்க் கேற்ப இதன் ஒவ்வொரு செய்யுளிலும் ஐந்து விஷயங்கள் அமைந்திருத்தல்வேண்டும். அம் முறைப்படி இச் செய்யுளில் அவை யாங்ஙனம் அமைந்திருக்

கின்றனவெனின்: முக்குற்ற மொழித்தலில் மூன்றும், மூழுதுணர் வொன்றும், மூவாமையொன்றும் ஆக ஐந்து அமைந்துள்ளன வெனக.

## நூல்.

சிறுபஞ்ச மூலத்தைச் சிறந்து கூறுங்கள் என்பது.

2. ஒத்த வொழுக்கங் கொலைபொய் புலால்களவோ
டொத்த வவையல வோர்நாலிட்—டொத்த
உறுபஞ்ச மூலந்தீர் மாரிபோற் கூறீர்
சிறுபஞ்ச மூலஞ் சிறந்து.

(ப-ரை.) ஒத்த - நீதியோடு பொருந்திய, ஒழுக்கம்- நன்னடக்கையையும், கொலை - உயிர்வதை செய்தல், பொய்-அபத்தங் கூறல், புலால் - மாமிச முண்ணுதல், களவோடு - திருட்டு ஆகிய இவற்றுடனே, ஒத்த - எதிரிடையாகப் பொருந்திய, ஓர் - ஒரு, நால் இட்டு- (கொல்லாமை, பொய்கூறாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை என்னும்) நான்கையுஞ் சேர்த்து, ஒத்த - உலகிற் பொருந்திய, உறு - மிகுதியாகிய, பஞ்சமூலம் - சிறுவிலைக் காலத்தின் காரணத்தை, (அதாவது பூமி வளங் குன்றியதை), தீர்-அகற்றுகின்ற, மாரிபோல்- மழையைப்போல, சிறுபஞ்ச மூலத்தை - (வியாதிகளை அகற்றும்) சிறுபஞ்ச மூலங்களைப்போன்ற இந்நூலினை, சிறந்து-(கல்வியாளரே! நீங்கள்) சிறப்புற்று, கூறீர்-(மானிடரின் தீக்குணங்களை யொழித்து அவர்கட்கு நற்குணங்களை யுண்டாக்குமாறு) சொல்லக்கடவீராக.

(க - ரை.) பஞ்சத்தின் காரணத்தை அகற்றும் மழையைப் போல, மானிடரின் தீமைகளை யொழித்து நன்மைகளை யுண்டாக்கும் சிறுபஞ்சமூலத்தை, கல்வியாளரே! நீங்கள் எவர்க்கும் எடுத்துக் கூறுங்கள் என்பதாம்,

(வி-ரை.) இந்நூலிற் பெரும்பான்மையும் ஒழுக்கம், கொலையின்மை, பொய்கூருமை, புலால்தின்னுமை, கள்ளாமை என்னும் ஐந்தைப்பற்றிய விஷயங்களே வருதலால், இவ் வைந்தையும் சேர்த்துச் சிறுபஞ்ச மூலத்தைக் கூறீர் என்ருர் ஆசிரியர். பஞ்சத்தின் காரணத்தைத் தீர்த்துத் தானியங்களின் விளைவை யுண்டாக்கும் மாரியைப்போல, வியாதிகளைத் தீர்த்துச் சுகத்தை யுண்டாக்கும் சிறுபஞ்ச மூலங்களை நிகர்க்கும் இந் நூலானது மானிடரின் தீமைகளை நீக்கி நன்மைகளை யுண்டாக்கக் கூடியதாதலால், இது மாரிக்கு நிகராகக் கூறப்பட்டது; இதனைக் கூறுவார்க்கு இது தொடங்கு முன்னரே சிறப்பு தானே உண்டாகு மாதலின், 'சிறந்து கூறீர்' என்ருர். இதனைக் கூறும் நூலாசிரியர் மானிடரை நோக்கி, 'நீங்கள் இதனை எடுத்துக் கூறுங்கள்' என்றது, 'இந்நூலைச் செய்வீராக' என்னும் கருத்துப்பற்றி வந்ததன்று; 'நீங்கள் இதனைப்பார்த்து இதன் கருத்துக்களை மற்றையர்க்கும் எடுத்துச் சொல்லுங்கள்' என்னும் பொருளில் வந்தது. ஒழுக்கமாவது சீலம்; இது ஜைனநூல் வழக்கின்படி நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் என்னும் இரத்தினத் திரயங்கள் மூன்றனுள் ஒன்ருகும்; இதைப்பற்றிய ஆசாரங்கள் சீலாசாரங்கள் எனப்படும்; அவை ஜைனர் கொள்கைப்படி பதினெண்ணுயிரமாம்; நான்காச்சிரமத்தார்களுக்கும் விதித்தன செய்தலும், விலக்கின ஒழித்தலுமே சீலாசாரங்களெனப்படும்; ஜீவகசிந்தாமணி நச்சினுர்க்கினியருரையில், "உலகில் அறஞ்செய்வார்க்குச் சீலமாவன: 'ஒழுக்கத்தைக் கெடுத்தலே யன்றி உணர்வையுங் கெடுக்கும் கள்ளையும், புழுப்பயின்ற தேனையும், பிறவிற்றின் புண்ணுகிய தசைகளையு மருந்தி வீடுபேற்றினை யிழக்கு மாந்தர், உணர்வில்லா விலங்குபோல்வரென்று உயர்ந்தோர் பழித்தவற்றை நுகர்தலைத் தவிர்தல்காண்,' என்ருன்" என்பதால், கொல்லாமை, பொய்யாமை, புலாலுண்ணுமை,கள்ளாமை முதலியனவும் சீலாசாரங்களில் அடங்கினவேனும், அவை அவற்றில் சிறந்த தர்மங்களாக நிற்றலின்,

அந்நான்கையும் ஒவ்வொரு தருமமாக எடுத்து, மற்ற ஆசாரங்களை யெல்லாம் ஒன்ருக்கி ஒழுக்க மெனக்கொண்டு, ஆக ஐந்தையுஞ் சேர்த்து ஆசிரியர் சிறுபஞ்ச மூலமெனக் கூறினுரென்க. இந் நூலாசிரியர் ஜைனராதலின், இந் நூலுக்கு ஜைனர் நூலின் கொள்கைப் படியே பொருளுரைத்தல் முறையாம்; ஆதலின், பாரபக்ஷமின்றி இங்கு இப் பொருள்கள் விரிக்கப்பட்டன. சிறுபஞ்ச மூலங்களாவன: சிறிய ஐந்து வேர்கள்; அவை: கண்டங்கத்திரிவேர், சிறுவழுதுணை வேர், சிறுமல்லிவேர், பெருமல்லிவேர், நெருஞ்சில்வேர் என்பனவாம்; இவை மானிட தேகத்திற்குப் பிணிகளை யொழித்துச் சுகத்தைக் கொடுக்கக் கூடியவை; இவற்றைப்போலவே, இந் நூலும் ஐந்து ஐந்து விஷயங்களைக்கொண்ட செய்யுட்களால் மானிடரின் தீயவொழுக்கங்களை நீக்கி, நல்லொழுக்கங்களை யுண்டாக்கக் கூடியதாதலின், இது சிறுபஞ்சமூல மென்னும் பெயரைக் கொண்டது; இப்பெயர் உவமையாகு பெயரெனப்படும். "கொலை, பொய், புலால், களவோடொத்த இவையல" எனவே, கொல்லாமை, பொய்யாமை, புலாலுண்ணுமை, கள்ளாமை என்பன தாமே ஏற்பட்டன. 'இவையல' என்றதனுல், 'ஒத்த' என்பதற்கு 'மாருகப் பொருந்திய' என்று பொருள் கொள்ளப்பட்டது. ஓர் நாலு - என்பது நான்கு கொண்ட ஒரு கூட்டம் என்னும் பொருள் தந்து நின்றது. தீர்க்கும் என்னும் பெயரெச்சம் விகுதி முதலியன குன்றிப் பகுதியளவாய்த் தீர் என நின்றது; தீர்மாரி - வினைத்தொகை.

"போகம் முதலியன பொருளுடையான் முதலியோரிடத்தில் உண்டெனல்.

3. பொருளுடையான் கண்ணதே போக மறனும்
அருளுடையான் கண்ணதே யாகும்—அருளுடையான்
செய்யான் பழிபாவஞ் சேரான் புறமொழியும்
உய்யான் பிறர் செவியிற் குய்த்து.

(ப-ரை:) போகம்-இன்பமானது, பொருளுடையான் கண்ணதே ஆகும்-ஐசுவரிய முடையவனிடத்தி லுள்ளதே யாகும், அறனும்-தருமமும், அருள் உடையான் கண்ணதே ஆகும் - கிருபையுடையவனிடத்தி லுள்ளதே யாகும், அருள் உடையான், அத்தகைய கிருபையுடையவன், பழிசெய்யான் - அபகீர்த்தியைத் தேடிக் கொள்ளமாட்டான், பாவஞ்சேரான் - அதர்மத்தை அடையமாட்டான், புறமொழியும் - (ஒருவரை அவரில்லாத) வேறொரிடத்தில் பழிக்கும் வார்த்தைகளை, பிறர் செவியிற்கு உய்த்து - வேறு மனிதர் செவிகளிற் செலுத்தி (அதாவது: பிறர் கேட்கச்சொல்லி), உய்யான் - பிழைக்கமாட்டான்.

(க-ரை.) பொருளுடையானுக்கே போகமுண்டாகும்; அருளுடையானுக்கே அறமுண்டாகும்; அருளுடையவன் பழி பாவங்களையும், புறங்கூறுதலையும் செய்யான் என்பதாம்.

(வி-ரை.) உலகத்திற் பொருளுடையவன்தான், அப் பொருளைச் செலவிட்டுத் தான் நினைத்த இன்பங்களை யெல்லாம் அனுபவிக்க முடியும்; அஃதில்லாதவனுக்கு எதுவும் கைகூடாது; ஆகவே, 'பொருளுடையான் கண்ணதே போகம்' என்றதனால், அப்போகத்தைத் தரக்கூடிய பொருளை அவசியம் தேடிக்கொள்ள வேண்டுமென்பதாயிற்று.

"அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு"

என்பது திருக்குறள். அருள்-ஜீவ தயை; இந்த ஜீவதயை ஒருவனுக்கிருந்தால் மாத்திரந்தான் அவன் ஒவ்வொரு ஜீவனுக்கும் இரங்கி, வேண்டிய உதவிகளைச் செய்தல் முடியும்; இங்ஙனம் ஜீவன்களுக்கு வேண்டியவற்றைச் செய்தலே தர்மமாம்; இது பற்றியே ஆசிரியர், 'அறனும் அருளுடையான் கண்ணதே யாகும்' என்றார். எப்பொழுது ஒருவனுக்கு ஜீவதயை ஏற்பட்டதோ, அப்பொழுதே அவன் பிற

ரால் பழிக்கப்படும் இழிவான காரியங்களையும், பாவச்செய்கைகளை யும், புறங்கூறுதலையும் அடையவே மாட்டான்; இது குறித்தே ஆசிரியர், 'அருளுடையான், பழிசெய்யான், பாவஞ்சேரான், புற மொழியும் பிறர் செவியிற்கு உய்த்து உய்யான்' என்றார். உல கத்திற் சிலர், ஒருவரைக் கண்டவிடத்து இனிமையாக வார்த்தை யாடி, அவரில்லாதவிடத்து வேறொருவரிடத்தில் அவரைப் பற்றி இழிவான வார்த்தைகளைக் கூறுவர். இவ்வித வார்த்தைகளைக் கேட்ப தில் சிலருக்கு விருப்பம் அதிகம். இத்தகையினர், ஒருவன் மற்றொரு வனைக் காணாதவிடத்து இகழ்ந்து கூறியவுடன், அவ்வாறு கூறியவ னிடத்தே நேசம் பாராட்டி அவனுக்கு வேண்டியவற்றைக் கொடுப்ப துண்டு; ஆதலால், அவன் இந்தப் புறங்கூறுதலையே தொழிலாகக் கொண்டு ஜீவிப்பான்; இது உலகத்திலுண்டான தீச்செயல்களி லெல்லாம் முதன்மை பெற்றதாகும்; ஆனது பற்றியே 'புறங்கூறி ஜீவியான்' என்றார் ஆசிரியர்.

கண்ணது இரண்டும் வினையாலணையும் பெயர்கள்; இவற்றி லுள்ள கண் இரண்டும் ஏழாம்வேற்றுமைச் சொல்லுருபுகள். அறன்- அறம் என்பதன்போலி. அறனும், புறமொழியும் என்பவற்றிலுள்ள உம்மைகள் இறந்தது தழுவியன. ஆகும் என்பது தீபகமாக இரண் டிடத்துங் கூட்டப்பட்டது. செய்யான், சேரான், உய்யான் என்பன உயர்திணை ஆண்பால் எதிர்மறைக் குறிப்பு வினைமுற்றுக்கள். புற மொழி - பக்கத்திற் கூறும் வார்த்தை; புறம் - பக்கம்; இங்கே பக்கம் என்பது ஒருவனுக்குப் பின்னே என்னும் பொருள் பயந்து நின்றது. உய்தல் - பிழைத்தல்; உய்த்தல் - செலுத்தல். செவியிற்கு - ஏழ னுருபு நான்கனுருபாக மயங்கி வந்த உருபு மயக்கம்; இதில், இன்- சாரியை; செவியில் என்னும் ஏழாம் வேற்றுமைவிரியே சந்தியால் ககரந் தோன்றப்பெற்றுப் புணர்ந்ததென்றாவது, குச் சாரியை பெற் றுப் புணர்ந்த தென்றாவது கூறினும் அமையும்.

இன்னவர்க்கு இன்னவரும், இன்னபொருளும்
அமிர்த மென்பது.

4. கற்புடைய பெண்ணமிர்து கற்றடங்கி னனமிர்து
நற்புடைய நாடமிர்தந் நாட்டுக்கு - நற்புடைய
மேகமே சேர்கொடி வேந்தமிர்து சேவகனும்
ஆகவே செய்யி னமிர்து.

(ப-ரை.) கற்பு உடைய - பதிவிரதா தர்மத்தையுடைய, பெண் - பெண்ணானவள், அமிர்து - (தன்னை மணந்தவனுக்கு) அமிர்தத்தைப் போல இனிமை செய்பவளாவாள், கற்று - (அறிவை யுண்டாக்கத் தக்க நூல்களைப்) படித்து, அடங்கினன் - (அவற்றின் வழியில்) அடங்கி நிற்பவன், அமிர்து - (உலகத்திற்கு) அமிர்தத்தைப் போலக் கொண்டாடத் தக்கவனாவான், நற்பு உடைய - நன்மையுள்ள, நாடு - நாடானது, அமிர்து - (அந் நாட்டையாளும் அ[illegible]னுக்கு) அமிர்தம் போன்று இனிமை செய்யக்கூடியதாம், அந் நாட்டுக்கு - அந்த நாட்டினுக்கு, புடை - பக்கத்தில், அம் - அழகிய, மேகமே - கொண்டலே, சேர் - சேர்ந்திருக்கின்ற, கொடி - வெற்றிக்கொடியையுடைய, நல்வேந்து - நல்ல அரசன், அமிர்து - அமிர்தத்தை நிகர்த்து இதஞ் செய்பவனாவான், சேவகனும் - அவ் வரசனுடைய பணிவிடைக்காரனும், ஆகு - நன்மையாகின்ற, அவே - அத் தொழில்களையே, செயின் - செய்வானாயின், அமிர்து - (அவ் வேந்தனுக்கு) அமிர்தம் போன்று நலஞ்செய்பவனாவான்.

(க-ரை.) கற்புடையவள் தன் கணவனுக்கு அமுதம் போல்வாள்; அறிவு நூல்களைக் கற்று அடங்கினவன் உலகத்தார்க்கு அமுதம் போல்வான்; நல்ல நாடு அரசனுக் கமுதம்; அந் நாட்டிற்கு நல்ல வேந்தன் அமுதம் போல்வான்; அவ் வேந்தனுக்கு நல்ல சேவகன் அமுதம் போல்வான் என்பதாம்.

(வி-ரை.) "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந், திண்மை யுண்டாகப் பெறின்" என்ற திருக்குறளின்படி, கற்புடைய மனையாளே கணவனுக்குச் சிறந்த பொருளாவளாதலின், 'கற்புடைய பெண் கணவனுக் கமிர்த' மென்றும், நல்ல அறிவு நூல்களைக் கற்று அவற்றின் வழியிலே அடங்கி நிற்பவன் உலகத்திற்கு இனிமை செய்யக் கூடியவ னாதலின், 'கற்றடங்கினான் உலகத்திற் கமிர்தம்' என்றும், நாடு வளமுடையதா யிருந்தால் மாத்திரமே அதனை ஆள்வோனுக் கினிமைசெய்யு மாதலின், 'நற்புடைய நாடு அந்நாட்டரசனுக் கமிர்தம்' என்றும், அரசன் நீதிமானா யிருந்தால்மாத்திரமே அவனால் ஆளப்படும் நாட்டினர்க்கு நன்மை யுண்டாகு மாதலின், 'நல்வேந்து அந் நாட்டிற் கமிர்தம்' என்றும், சேவகன் விசுவாசமுள்ளவனா யிருந்தால்மாத்திரம் அரசனுக்கு அவன்மீது பிரியமுண்டாகு மாதலின், 'சேவகனும் நன்மையாகும் அவற்லைறச் செய்தால் அரசனுக் கமிர்தம்' என்றும் கூறினார் ஆசிரியர்.

கற்பு - தொழிற்பெயர்; இது, 'கணவன் கட்டளைக்கடங்கி நடத்தலைக் கற்றல்' என்று பொருள்படும்; ஆதலினாலேயே கற்பு என்பது பதிவிரதா தர்மம் என்ற அர்த்தத்தில் வழங்கப்பட்டு வருகிறது. கற்றல் என்பது எல்லாக் கல்விகளையும் கற்றலுக்குப் பொதுவாகிய தொழிற்பெயராயினும், பெரும்பான்மையும் உத்தமியின் குணத்திற்கு உபயோகிக்கப்பட்டு வருதலின், இதற்குப் பதிவிரதா தர்மங்களைக் கற்றல் என்றே தொன்றுதொட்டுப் பொருள் கொள்ளப்பட்டு வருகின்றது. உடைய-பெயரெச்சம். கற்று, செய்யின் - என்பன வினையெச்சங்கள்; செய்யின் என்பது அமிர்து என்னும் பெயர் கொண்டிருப்பினும், அமிர்திற்குப்பின் ஆவன் என்னும் வினைமுற்று இசையெச்சமாக வருவித் துரைக்கப் படுதலின், அதனை வினையெச்சமெனத் தெளிக. கற்புடையவள் நாயகனுக்கே இனிமை செய்பவளாதலின், 'கற்புடைய பெண்' என்பதற்குப் பின் 'தன்னை மணந்தவனு

க்கு' என்னுஞ் சொல்லும், கற்றடங்கினவன் உலகிற்கெல்லாம் நலஞ் செய்பவ னாதலின், 'கற்றடங்கினன்' என்பதற்குப்பின் 'உலகத்திற்கு' என்னுஞ் சொல்லும், நல்ல நாடு அரசனுக்கே இனிமை செய்வ தாதலின், 'நாடு' என்பதற்குப் பின், 'அரசனுக்கு' என்னுஞ் சொல்லும், நற்சேவன் அரசனுக்கே இனியவனாதலின், 'சேவகனும்' என்பதற்குப் பின், 'அரசனுக்கு' என்னும் சொல்லும் இசையெச்சங்களாக வருவித் துரைக்கப்பட்டன. இசையெச்சமாவது, வாக்கியங்களில் அவ்வவ்விடத்திற் கேற்ப ஒரு சொல்லும், பல சொற்களும் வருவித் துரைக்கப்படுவது; இசையெச்சம் என்பதற்கு, இசைந்த எச்ச வாக்கியங்கள் என்றுபொருள். அமிர்து என்னுஞ் சொற்களுக்குப் பின் கூட்டிய ஆவள், ஆகும், ஆவன் என்னும் சொற்களும் இசையெச்சங்களே. நற்பு-நன்மை என்னும் பண்படி விகாரம். இரண்டாவதாகவரும் 'நற்புடை' என்பதிலுள்ள 'நல்' என்பதை வேந்தனொடு கூட்டுக. பக்கத்தில் அழகிய மேகம் சேர்கொடி எனவே, கொடியானது மேக மண்டலம்வரை அளாவி நிற்கும் என்பது பெறப்படும்; இங்ஙனம் கொடிச்சிறப்புக் கூறவே, வேந்தனது மிகுதிப்பாடு விளங்கும். அவே - என்பதில், அவ் - வகர மெய்யீற்று அஃறிணைப் பலவின்பாற் சுட்டுப்பெயர்; இதனோடு புணர்ந்த ஏகாரம் பிரிநிலைப் பொருளது.

### நல்லார் கேட்டு நகைக்கத் தக்கன.

5\. கல்லாதான் றான்காணு நுட்பமுங் காதிரண்டு
மில்லாதா ளேக்கழுத்தஞ் செய்தலு—மில்லாதா
னெல்லாப் பொருளில்லார்க் கீத்தளியா னென்றலு
நல்லார்கள் கேட்பி னகை.

(ப - ரை.) கல்லாதான் - முறைப்படி ஆசிரியனிடத்தே நூல்களைக்) கற்றுக்கொள்ளாத ஒருவன், தான்காணும் - தானே ஆராய்ந்

தறிகிற, நுட்பமும் - நுண்ணிய பொருளையும், காது இரண்டும் - இரண்டு காதுகளும், இல்லாதாள் - இல்லாத ஒருத்தி, எக்கழுத்தம் செய்தலும் - (நான் மிக்க அழகுடையவள் என்று) இறுமாப்படைதலையும், இல்லாதான் - கையிற் பொருளில்லாத தரித்திரன், இல்லார்க்கு - தன்னைப்போலவே பொருளில்லாது வறுமை யடைந்தவர்க்கு, ஒல்லாப்பொருள் - அவர்களின் விருப்பம் அடங்குவதற்குப் பொருந்தாத பொருளை (அதாவது பிறர்காணின் எள்ளனஞ் செய்யத்தக்க அவ்வளவு அற்பமான பொருளை), ஈந்து-கொடுத்து, அளியான் என்றலும் - (நான் யாசகரிடத்தே மிகவும்) அருளுடையவன் என்று தற்பெருமை கூறுதலையும், நல்லார்கள்-(அறிவுடையவர்களாகிய) நல்லோர்கள், கேட்பின் - கேட்டால், நகை - (அவர்கட்குச்) சிரிப்பே (உண்டாகும்).

(க-ரை.) நூற்களைக் கல்லாதவன் நுட்பமான பொருளை ஆராய்ந்து சொல்லுதல் முதலியவற்றை அறிவுடையோர் கேட்டால் நகைப்பர் என்பதாம்.

(வி-ரை.) நூற்களை முறையே ஆசிரியனிடத்துக் கல்லாதவன் நூற்களிலுள்ள நுண்ணிய பொருள்களை ஆராய்ந்து சொல்லப்புகின், நேரான பொருள்களை விட்டுத் தன் மனம் போனபடி இடக்கரான பொருள்களைக் கூறுவான்; அதனால் அறிவுடையோர் நகைத்தற்கிடமுண்டாம். பெண்களின் காதுகளே நகைகள் அணியப்பட்டு முகத்திற்கு அழகுசெய்யும் முக்கிய அவயவங்களாம்; அவைகள் இல்லாவிடின் பெண்களுக்கு அழகு குன்றிப் பார்ப்போர் நகைத்தற் கிடமுண்டாம்; அங்ஙனம் பரிகாசத்திற் கிடமாய்க் காதுகளை யிழந்தவள் 'என்னைப்போல் அழகிற்சிறந்தா ரொருவருமில்லை' என்று இறுமாப்புக் கொள்வாளேயானால், அது மேலும் பரிகாசத்திற் கிடமாம். நித்திய தரித்திரனு யிருக்குமொருவன், வறுமையுற்றுத் தன்னிடம் வரும் வித்வான் முதலிய யாசகர்க்குத் தகுதியான பொருள் கொடா

மல், ஒரு காசை இரகசியமாக அவர்கள் கையில்வைத்து மூடி அத னைப் பெரிய கொடையாகச் சொல்லி அவர்களை அனுப்புதல் பரிகா சத்திற் கிடமான காரியமாம்; அப்படி யிருந்தும் அவன் அவ்வாறு தர்மம் செய்ததைப் பலரிடத்துங்கூறி, 'என்னைப்போல் யாசகர்க்கு மிகுந்த கொடைகொடுப்பா ரெவருமிலர்; நான் யாசகரிடத்தே மிகுந்த அருளுடையவன்' என்று தன்னைப் பெருமைப்படுத்திக் கொள்ளுதல் மேலும் நகைத்தற் கேதுவாம். ஆதலின், இவர்கள் செய்கையைக் கேட்டு அறிவுடையார் நகைப்பர் என்றனர் ஆசிரியர். கல்லாதான் நுட்பம், காதில்லாள் இறுமாப்பு, இல்லாதான் ஒல்லாப்பொருளீதல், அளியானென்றல், நல்லார்கேட்டு நகைத்தல் ஆகிய ஐந்து விஷயங்கள் இதில் அமைந்திருத்தலை உய்த்துணர்க. 'ஈத்தளியானென்றல்' என்பதில், ஈதலும் பெருமை பேசுதலும் அடங்கி யிருத்தலால் இரண்டு செயல்கள் கொள்ளப்பட்டன. பசித்து வந்தார்க்கு வெறுந்தண்ணீர் வார்த்துவிட்டு அன்னதானஞ் செய்தேனென்று தற்பெருமை கூறுவது சிலருடைய வழக்கம்; இது மிக்க இழிவாமென்பதை அறிவுறுத்தற் பொருட்டே ஆசிரியர் இங்ஙனம், 'இல்லாதா னொல்லாப் பொருளில்லார்க் கீத்தளியா னென்றலு நல்லார்கள் கேட்பி னகை' என்றார்.

நுட்பம் - குணவாகு பெயராய் நுண்ணிய பொருளை யுணர்த்திற்று. உம்மைகள் எண்ணுப்பொருளன. காதிரண்டு மென்பதிலுள்ள உம்மை முற்றுப்பொருளது. ஈத்து - வினையெச்சம்; ஈ-பகுதி, உ-வினையெச்சவிகுதி, த்-இடைநிலை, த்-சந்தி. அளியான்-தன்மையிற் படர்க்கை வந்த இட வழுவமைதி. கேட்பின்-வினையெச்சம்.

இன்னது வேண்டின் இன்னது செய்யவேண்டு மென்பதும், இன்னது கூடாதேன்பதும், இவற்றல் வரும் பயனும்.

6. உடம்பொழிய வேண்டி னுயர்தவ மாற்றீண்
டிடம்பொழிப வேண்டுமே யீகை—மடம்பொழிய

வேண்டி னறிமடம் வேண்டேல் பிறர்மனை
யீண்டி னியையுந் திரு.

(ப-ரை.) உடம்பு-தேகம் உண்டாவதற்குக் காரணமாகிய பிறப்பானது, ஒழியவேண்டின் - நீங்க விரும்பினால், (நன்மையை நாடு பவனே!), உயர்தவம் - உயர்ந்த தவத்தினை, ஈண்டு - இவ்வுலகத்தில், ஆற்று - செய்வாயாக, இடம் - நீ யிருக்கும் இடமானது, பொழிய வேண்டுமேல் - புகழால் மேன்மையடைய வேண்டுமானால், ஈகை ஆற்று - (இரப்பார்க்கு வேண்டியவற்றைக்) கொடுத்தலைச் செய்வாயாக, மடம் - கபடின்மையானது, பொழியவேண்டின் - உன்னிடத்தில் வந்து நிறைய வேண்டுமானால், அறிமடம்-அறிந்தும் அறியாதிருக்கும் தன்மையை, ஆற்று-செய்வாயாக, பிறர்மனை - அன்னியருடைய மனையாளை, வேண்டேல் - விரும்பாதே, ஈண்டின் - இக்குணங்கள் உன்னிடத்தே பொருந்துமாயின், திரு - சிறப்பானது, இயையும் - உன்பாற் பொருந்தும்.

(க-ரை.) பிறவி யொழிய வேண்டின் தவஞ்செய்க; புகழை விரும்பின் ஈதலைச்செய்க; கபடின்மை வேண்டின் அறிந்தும் அறியாத தன்மையைக் கொள்க; பிறர் மனையாளை விரும்பா திருக்க; இவை யுண்டாயின் சிறப்புண்டாம் என்பதாம்.

(வி-ரை.) ஒருவனுக்குப் பிறப்பு நீங்கவேண்டு மாயின் தவத்தினாலேயே நீங்க வேண்டும்; வேறெதனாலும் நீங்காது; அங்ஙனம் வேறெதனாலும் நீக்க முடியாத பிறப்பை நீக்கும் ஆற்றல் தவத்திற்கே உண்டென்பதை விளக்கற் பொருட்டே, அதனை, 'உயர் தவம்' என்றார் ஆசிரியர். தேவரும் முத்தியடைய வேண்டுமாயின் நிலவுலகில் தவஞ்செய்தே அதனை அடையவேண்டு மாதலின், 'உயர்தவம் ஆற்று ஈண்டு' என்றார்.

"வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்"

"கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு"

என்னுந் திருக்குறட் செய்யுட்களே இத் தவத்தின் உயர்வினை விளக்கும். ஈகை யிருந்தால் மாத்திரமே ஒருவனுக்குப் புகழுண்டாகும். ஒருவன் மனதில் வஞ்சக மற்ற தன்மையை யுடையவேண்டுமானால், அவன் உலக விஷயங்களை அறிந்தாலும் அறியாதவன்போல் இருக்க வேண்டும்; அறிந்தும் அறியாதிருக்கும் தன்மையாவது, ஒரு கேடோ, நன்மையோ நடக்கக் கண்டால் அதில் புத்தியை நிலைக்கச் செய்யாமல் அதை மறந்து விடுதலாம். இதுதான் அறிமடையென்றும், அறிந்தும் அறியாதிருக்கும் தன்மை யென்றும் கூறப்படும். இத் தன்மை ஒருவனிடத்தில் அமைந்தால் அவனை எல்லோரும், 'இவன் பரமாத்மா, எள்ளளவேனும் கபடமில்லாதவன்' என்று புகழ்வர். இது பற்றியே ஆசிரியர், 'மடம் பொழிய வேண்டின் அறி மடம் ஆற்று', என்று கூறினர். இங்ஙன மின்றி ஒவ்வொன்றிலும் புத்தியைச் செலுத்துகிறவன், நலஞ் செய்வார்க்கு நன்மையையும், கேடு செய்வார்க்குக் கேட்டையும் செய்யத் துணிவான். அக் காரியங்களில் பல தந்திரங்களையும், கபடமான செய்கைகளையும் செய்ய ஏதுவாம்; அதனால் அவனிடத்தில் கபடம் வந்து சேரும். தீய காரியத்திற்றான் கபடம் செய்யப்படும், நன்மையான காரியத்தில் எங்ஙனம் கபடம் ஏற்படு மெனின், நன்மையான காரியத்தைச் செய்யும் போதும் அதனை முடித்தற் பொருட்டுப் பல தந்திரங்கள் செய்யப்படு மாதலின், அவை நன்மை பயப்பன வெனினும் கபடத்தின் பாற்படு மென்க. நன்மை தீமை இரண்டிலும் புத்தியை விசேஷமாக அழுத்திவிடாம லிருத்தலே கபடற்ற தன்மையாம். பிறர் மனை விரும்பல் எல்லாப் பாவங்களினும் சிறந்த பாவமாதலின், 'வேண்

டேல் பிறர்மனை' என்றார். "விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந் தாரிற், றீமை புரிந்தொழுகு வார்'' என்னுந் திருக்குறளானும் இஃது உணரப்படும். இந்த நற்குணங்கள் ஒருவனிடத்தில் இருக்குமானல் அவனிடத்தே முத்திபெறுஞ் சிறப்பும், ஈகையாலும், பிறர்மனை நயவாத நீதியாலும், கபடின்மையாலும் ஏற்படுஞ் சிறப்பும் வந்து நிறையும். இது பற்றியே, 'ஈண்டி னியையுந்திரு' என்றார்.

ஆற்று, வேண்டேல் என்னும் ஏவல் வினைகட்கேற்ப, 'நன்மையை நாடுபவனே' என்னும் விளி வருவித் துரைக்கப்பட்டது. ஆற்று என்பது தீபகமாக மூன்றிடங்களினுங் கூட்டப்பட்டது. இச்செய்யுளில், தவம்செய்தல், ஈதல், அறிந்தும் அறியாதிருத்தல், பிறர்மனை வேண்டாதிருத்தல் ஆகிய நான்கும், இவற்றாலுண்டாம் சிறப்பொன்றும் ஆக ஐந்து விஷயங்கள் அமைந்திருத்தல் காண்க.

இன்னதற் கின்னது வனப்பா மெனல்.

7. படைதனக்கு யானை வனப்பாகும் பெண்ணி
னிடைதனக்கு நுண்மை வனப்பா—நடைதனக்குக்
கோடா மொழிவனப்புக் கோற்கதுவே சேவகர்க்கு
வாடாத வன்கண் வனப்பு.

(ப-ரை.) படைதனக்கு - சேனைக்கு, யானை - யானையானது, வனப்பு ஆகும்-அழகாகும், பெண்ணின்-பெண்ணினுடைய, இடை தனக்கு - இடைக்கு, நுண்மை - மெல்லியதன்மை, வனப்பு ஆம் - அழகாகும், நடைதனக்கு - ஒருவனுடைய நடக்கைக்கு (அதாவது ஒழுக்கத்திற்கு), கோடா - ஒரு பக்கத்திலே சாயாத (அதாவது பாரபக்ஷமில்லாத), மொழி-சொல்லானது, வனப்பு-அழகாகும், கோற்கு-செங்கோலுக்கும், அதுவே - அந்தச் சாயாதமொழியே அழகாகும், சேவகர்க்கு - போர்வீரருக்கு, வாடாத - கெடாத, வன்கண் - வீரமானது, வனப்பு - அழகாகும்.

(க - ரை.) சேனைக்கு யானை அழகு; இடைக்கு மென்மை வனப்பு; ஒழுக்கத்திற்கும் செங்கோன்மைக்கும் சாயாதமொழி வனப்பு; சேவகர்க்கு வீரம் வனப்பு என்பதாம்.

(வி-ரை.) இரதம், கஜம், துரகம், பதாதி என்னும் நால்வகைப் படைகளினும் யானைப்படையே சிறந்ததாதலின், அது சேனைக்கு அழகாகும். பெண்களின் இடை மெல்லிதா யிருத்தலே சிறந்த தாதலின் அம்மென்மை இடைக்கழகாம். பாரபக்ஷமில்லாத வார்த்தையே ஒழுக்கத்திற்கும், அரசர் நடத்தும் செங்கோன் முறைமைக்கும் சிறப்புச் செய்வதாகும்; ஆதலின், மனிதர் ஒழுக்கத்திற்கும், அரசர் செங்கோலுக்கும் நடுவுநிலைமையான வார்த்தை அழகு செய்வதாம்.

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி."

என்பது திருக்குறள்.

வீரமுடைய சேவகனே சிறப்புடன் விளங்குவான்; ஆதலின், அவனுக்கு வீரம் அழகு செய்வதாகும்.

படை தனக்கு, இடை தனக்கு, நடை தனக்கு என்பவற்றில், தன், அ - சாரியைகள். இடை - உடம்பின் நடுப்பாகம். நுண்மை- பண்புச்சொல். ஆகும் என்பதில் கு - சாரியை. நடை - தொழிற் பெயர். கோல் - நேரான அரசாட்சியை நடத்தற் கறிகுறியாக அரசரால் கைக்கொள்ளப்படும் செங்கோல்; அஃது உவமையாகு பெயராய், அதைப்போல் நேரான அரசாட்சியை உணர்த்திற்று. சேவகம் - வீரம்; அதனை யுடையார் சேவகர். வன்கண்மை யென்னும் பண்புப்பெயர் மை யிறுதி கெட்டு 'வன்கண்' என நின்றது. சேவகர்க்கு என்பதில் இறந்தது தழுவிய எச்சவும்மை தொக்கது. மொழி வனப்பு, வன்கண் வனப்பு என்பவற்றி னீற்றில் ஆகும்

என்னும் வினை முடிக்குஞ் சொல் இசையெச்சமாகக் கூட்டி யுரைக்கப்பட்டது.

இன்னதுணை முடையவன், இன்ன தன்மையை அடைவா னென்பது.

8. பற்றினன் பற்றற்ரு னூறவசி யெப்பொருளு
முற்றினு னுகு முதல்வனூற் - பற்றினற்
பாத்துண்பான் பார்ப்பான் பழியுணர்வான் சான்றவன்
காத்துண்பான் காணுன் பிணி.

(ப-ரை.) பற்று அற்ருன்-பந்தம் நீங்கியவனுகிய கடவுளாற் கூறப்பட்ட, நூல் - நூலின் கருத்துக்களை, பற்றினன் - கடைப் பிடித்து அதன்படி நடப்பவன், தவசி - தவத்தையுடைய முனிவ னுவான்; எப்பொருளும் - எந்தப் பொருள்களும் (அதாவது, எல் லாப் பொருள்களிலும்), முற்றினன் - பூர்த்தி பெற்றவன் (அதா வது, எல்லாப் பொருள்களின் முடிவையும் உணர்ந்தவன்), முதல் வன் ஆகும் - எல்லோருக்கும் தலைவனுவான்; நூல் பற்றினல் - நூல்களிலுள்ள நீதிகளைக் கைக்கொள்வதனுலே (அதாவது, சாஸ் திரக் கிரமப்படி நடக்கவேண்டுமென்ற விருப்பத்தினுலே), பாத்து - தன்னிடமுள்ள பொருள்களைப் பிறருக்குப் பங்கிட்டுக் கொடுத்து, உண்பான் - உண்டு அனுபவிப்பவன், பார்ப்பான்-அந்தணனுவான்; பழி - பாவ காரியத்தை, உணர்வான் - இன்னதென்று ஆராய்ந் தறிந்து விலக்குபவன், சான்றவன் - உயர்ந்தவ னுவான்; காத்து - நோயுண்டாகக் கூடிய வஸ்துக்களை உட்கொள்ளாது தன் உடம்பைப் பேணி, உண்பான் - நல்ல ஆகாரங்களை உட்கொள்பவன், பிணி காணுன் - நோய்களை அறியாதவ னுவான், (அவனிடத்தே வியாதி கள் அணுகா என்றபடி).

(க-ரை.) பந்தமற்ற கடவுளின் நூன்முறையைப் பற்றி நடப் பவன் தவசியாவான்; எல்லாப் பொருள்களையு முணர்ந்தவன் தலைவ

னுவான்; தன் பொருளைப் பிறர்க்குப் பங்கிட்டுக் கொடுத்துண்பவன் பார்ப்பா னுவான்; பழியை அறிந்து விலக்குவோன் உயர்ந்தோ னுவான்; கெட்ட பொருள்களை நீக்கி நல்லன கொண்டு உடம்பைப் பேணுபவன் நோயில்லா னுவான் என்பதாம்.

(வி - ரை.) பற்றற்றவன் - கடவுள்; இவனுடைய நூல் வேதமாம்; இதைக் கற்றுக்கொள்ளுதலில் சிரத்தை யுடையவனே தவஞ் செய்து முத்தியடைதற் குரியவ னுவான்; ஆதலின், 'பற்றற்றான் நூல் பற்றினுன் தவசி' என்றார் ஆசிரியர். உலகத்தில் சகல பொருள்களையும் ஐயமற உணர்ந்தவன் சகலர்க்கும் நன்மை தீமைகளைப் பகுத்து எல்லோரையும் நல்வழிப்படுத்தும் ஆற்றலுடையவனுவான்; அதனுல் அவனை எல்லோரும் வணங்குவர்; ஆதலின், அவன் முதல்வன் எனப்பட்டான். பார்ப்பான், சகலரும் ஐயமின்றி உணவுண்ணத் தக்க வகுப்பைச் சார்ந்தவனுயிருத்தலால், பலர்க்கும் உணவைப் பகுந்திட்டு உண்ணத் தக்கவ னுவான்; இதனுனே பார்ப்பார்க்கு அந்தணரென்னும் பெயரும் அமைந்தது; அந்தணர் என்பதற்கு அழகிய தட்பத்தை யுடையவ ரென்பது பொருள்; தட்பமாவது குளிர்ச்சி; அஃது அன்பை யுணர்த்தும். ஆகவே, 'பாத்துண்பான் பார்ப்பான்' என்றதனுல், எக் காரணத்தை முன்னிட்டும் பிறர்க் கன்னமிட மறுப்பவன் பார்ப்பா னுகமாட்டான். பார்ப்பான் என்பதற்கு நோக்குவோன் என்று பொருள்; இது, தன்னிடம் உணவுக்கு வருவோர் முகத்தை இரக்கத்தோடு நோக்குபவன் என்று விரியும்; அதனுல் இப் பெயரும், பசித்து வந்தோர்க்கு அன்பான பார்வையோடு அன்னமிடுதல் குறித்தே வந்ததாகும்; ஆதலின், இவ்விதி அந்தணர்க்கு இன்றியமையாததாகும்; இக் காலத்தில் பார்ப்பாரில் இதனையுணராத சிலர், ஏதேதோ ஆசாரங் கூறிப் பிறர்க் கன்னமிடுதல் தோஷமெனச் சிற்சில சமயங்களில் அதனை மறுக்கின்றனர்; அத்தகையினர் இச்செய்யுட் கருத்தை உய்த்துணர்வாராக. பழியை அறிந்து நீக்குவோனிடத்தே எல்லோரும் கொண்டாடத்தக்க கௌரவம் ஏற்படும்; ஆதலின், அவன்

'சான்றோன்' எனப்பட்டான். கெட்ட வஸ்துக்களை நீக்கி நல்லன கொள்வானுக்குத் தேகத்தில் நல்ல இரத்தமே யுண்டாகு மாதலின் நோயணுகாது. 'நூல்' என்பது ஆகுபெயராய் நூலிலுள்ள பொருள்களை யுணர்த்தும். எப்பொருளும் என்பதிலுள்ள உம்மை முற்றுப் பொருளது. பகுத்து என்பது 'பாத்து' என மருவிற்று. சான்றவன்-கல்வி யறிவொழுக்கங்களா னிறைந்தவன். சாலுதல் - நிறைதல்.

இன்னதற் கின்னது அழகா மெனல்.

9. கண்வனப்புக் கண்ணோட்டங் கால்வனப்புச் செல்லாமை
எண்வனப் பித்துணையா மென்றுரைத்தல்-பண்வனப்புக்
கேட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் றன்னாடு
வாட்டானன் றென்றல் வனப்பு.

(ப - ரை.) கண் வனப்பு-கண்ணுக்கு அழகாவது, கண்ணோட்டம் - கடாட்சமாம்; கால் வனப்பு - பாதங்களுக்கு அழகாவது, செல்லாமை - (யாசகத்தின் பொருட்டுப் பிறரிடத்தில்) போகாதிருத்தலாம்; எண் வனப்பு-சிந்தனைக்கு அழகாவது, இத்துணையாம் என்று உரைத்தல் - (ஒரு காரியத்தை ஆராய்ந்து இது) இவ்வளவினையுடையதா மென்று துணிந்து கூறுதலாம்; பண் வனப்பு - இராகத்திற்கு அழகாவது, கேட்டார் - (அதனைக்) கேட்டவர்கள், நன்று என்றல் - இது நல்லது என்று புகழ்ந்துரைத்தலாம்; கிளர் - (உலகத்தில் புகழினால்) விளங்குகின்ற, வேந்தன் வனப்பு - அரசனுக்கு அழகாவது, தன் நாடு - தன்னுடைய நாட்டிலுள்ளவர்களை, வாட்டான் - (இவன்) வருத்தமாட்டான், நன்று - (இவனுடைய இத்தகைய குணம்) நல்லதாகும், என்றல் - என்று உலகத்தவர் அவனைப் புகழ்ந்து கூறுதலாம்.

(க - ரை.) கண்ணுக்கு வனப்பு கடாட்சம். காலுக்கு வனப்பு பிறரிடம் யாசிக்கச் செல்லாமை. ஆலோசனைக் கழகு ஒரு காரியத்

தை ஆராய்ந்து இஃதிவ்வளவினை யுடையதா மென்று துணிந்து கூறுதல். இராகத்திற் கழகு அதனைக் கேட்டவர் நன்றாயிருக்கின்ற தென்று புகழ்ந்து கூறுதல். அரசனுக் கழகு இவன் தன் நாட்டி லுள்ளவர்களை வருத்தமாட்டான் என்று உலகத்தவர் அவனைப் புகழ்ந்து கூறுதல் என்பதாம்.

(வி-ரை.) கண்ணோட்டம் - கண் பிறர்மேல் செல்லுதல்; அதாவது, அன்பாகக் கடைப் பாகத்தால் பார்த்தலாம்; கடைக் கண்ணால் பார்த்தலே அன்பிற் கறிகுறியாம்; ஆதலின், இது கடாட்ச மெனப்படும்; கடாட்சம் என்பதற்குக் கடைக்கண் என்று பொருள்; இது, அதனால் உண்டாம் பார்வையை யுணர்த்தும். இந்த அருட் பார்வை யில்லாத கண் கொடிய கண்ணென் றிகழப்படும். உலகத்தில் யாசகமே இழிந்த தொழிலாதலின், அதன்பொருட்டு நடந்து போகாத பாதங்களே சிறப்புடையனவாம்; 'செல்லாமை' என்பதற்குப் 'போகாமை' என்பது பொருள்; இது நற்காரியத்திற்கும் துர்க்காரியத்திற்கும் அமையும் எனினும், பதங்களுக்கு அழகு சொல்லுமிடத்துக் கெட்டதை நீக்கிக் கூறுதலே முறைமையாகலின், செல்லாமை என்பதற்கு யாசிக்கச் செல்லாமை என்று பொருள் கூறப்பட்டது. இனி இதற்குத் தரையில் நடவாமல் ஊர்திகளில் ஏறிச் செல்லுதல் என்றும் பொருள் கூறலாம்; தரையிற் செல்லும் பாதங்கள் குளிர்ச்சி, வெப்பம், ஆபாசம் முதலியன சேர்தலால் அழுக்கடைந்து வெடிப்புண்டு விகாரப்பட்டிருத்தலும், அவ்வாறு செல்லாதவைகள் மாசடையாது அழகுடன் விளங்குதலும் இயற்கை. ஒரு காரியத்தைப்பற்றி ஆலோசிக்குமிடத்து அதன் முடிவுகண்டுரைத்தலே அச் சிந்தனைக்குச் சிறந்ததாம்; முடிவுகண்டுரையாத ஆலோசனையில் ஒரு பயனு மின்றாம். சுருதியோடு இலயமாக வேறு இராகம் கலக்காமல் சுத்தமாகக் கேட்போர் செவிக்கின்பம் பயக்குமாறு பாடப்படும் இராகமே அழகிதாகும்; இதனையே யாவரும் கொண்டாடுவர். குடிகளை வருத்தாமல் ஆட்சி புரியும் அரசனே சிறந்தவனாவான்;

கொடுங்கோன் மன்னன் பலராலும் இகழப்படுவான்; ஆதலின், மன்னனாயிருப்பவன், 'இவன் குடிகள்மீ தன்புடையவன்' என்று பலராலும் கொண்டாடப்படுதலே அவனுக்கழகாகும்.

கண்வனப்பு, கால்வனப்பு, எண்வனப்பு, பண்வனப்பு, வேந்தன்வனப்பு என்பன நான்காம் வேற்றுமைத் தொகைகள். "வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி." என்னும் (நன்-உயி-பு-௩௧.) ஆம் சூத்திர விதியால், அல்வழிப் புணர்ச்சியில் வனப்பு என்பதன் முன் வலி மிக்கது. கண்ணோட்டம், செல்லாமை, உரைத்தல், என்றல், என்பன தொழிற்பெயர்கள்; இவற்றின் முன் ஆம், ஆகும் என்ற முடிக்குஞ் சொற்கள் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டன. நன்று - நன்மை யென்னும் பண்புச்சொல் விகாரம். கிளர் - பெயரெச்சம். கேட்டார் - வினையாலணையும் பெயர். நாடு-இடவாகு பெயர்; அதிலுள்ள மனிதரை யுணர்த்தும். ஈற்றிலுள்ள வனப்பு என்பதை வேந்தனோடு கூட்டி, 'வேந்தன் வனப்பு தன்நாடு வாட்டான் நன்று என்றல்' என உரைத்தல் வேண்டும்; இது கொண்டு கூட்டுப்பொருள்கோளென்று சொல்லப்படும்; கொண்டுகூட்டாவது பல அடிகளில் சிதைந்து கிடந்த சொற்களை எடுத்து வரிசைப்பட அநுவயித்துப் பொருள் கொள்வதாம்; "யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை, ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே." என்பது (நன்-பொ-கூ௭) ஆம் சூத்திரம்.

இன்ன இன்னவர் நாக்கள் இன்ன இன்ன விடத்
தடங்து மெனல்.

10. கொன்றுண்பா னுச்சாங் கொடுங்கரிப்போ வானுச்சாம்
நன்றுணர்வார் முன்கல்லா னுவுஞ்சா-மொன்று னும்
கண்டுழி நாச்சாங் கடவான் குடிப்பிறந்தான்
உண்டுழி நாச்சா முணர்ந்து.

(ப-ரை.) கொன்று - ஒரு பிராணியைக் கொலை செய்து, உண்பான்-அதன் தசையைத் தின்பவனுடைய, நா-நாவானது, சாம்-அழியும்; கொடும்-தீமையாகிய, கரி-சாக்ஷிக்கு, (அதாவது பொய்ச் சாக்ஷி கூறுவதற்கு) போவான்-(நியாயஸ்தலத்தில்) செல்லுகிறவனுடைய, நா - நாவானது, சாம் - கெடும்; நன்று - நன்மார்க்கங்களை, உணர்வார் முன் - கற்றறிந்தவர்களுக் கெதிரில், கல்லான் - (அவற்றைக்) கற்றுணராதவனுடைய, நாவும்-நாவானதும், சாம்-அடங்கும்; கடவான்-ஆணை கடவாத உத்தமனது, நா.-நாவானது, ஒன்றான்-(இவனுக்குக் கடன் கொடுத்து இவனைக் கெடுக்கக் கருதிய) பகைவனை, (அவன் ஒரு தவணையை ஏற்படுத்தி இதிற் கொடுத்துவிட வேண்டுமென்று கூறி இவனுச்குக் கடன் கொடுத்து இவன் அக் கெடுவின்படி பணம் கொடுக்க முடியாமலிருக்கும் நிலைமையில் அக் கடனைக் கேட்டு இவனை வருத்துதற்கு வர) கண்டுழி - இவன் பார்த்தவிடத்து, சாம் - (ஒன்றுங் கூறமுடியாமல்) அடங்கும்; குடிப்பிறந்தான்-உயர்ந்த குடும்பத்திற் பிறந்தவனது, நா - நாவானது, உண்டுழி-(அவனிடத்தே ஒரு குற்றம்) உண்டானவிடத்து, உணர்ந்து - (அதனை அவன்) உணர, சாம்-(அவமானத்தால் ஒரு வார்த்தையும் கூறாமல்) அடங்கிவிடும்.

(க - ரை.) புலா லுண்பவனுடைய நாவும், பொய்ச்சாக்ஷி கூறுவோனுடைய நாவும், கற்றோர் முன் கல்லாதவனுடைய நாவும், கடன் கொடுத்தவனைக் கண்டபோது ஆணை கடவாதவனுடைய நாவும், தன்னிடத்தே ஒரு தவறுண்டானபோது உயர்குடியிற் பிறந்தவனுடைய நாவும் அடங்கு மென்பதாம்.

(வி-ரை.) ஒரு பிராணியைக் கொன்று அதன் தசை யுண்பது மிகப் பாவமாதலால், அவனிறந்த பின் அப் பாவத்திற்காக அவனைக் காலதூதுவர் எமலோகத்திற்குக் கொண்டுபோய் அவனுடைய நாவை அறுப்பர்; அதனுல் அவனுடைய நாவானது அழியும்.

பொய்ச் சாக்ஷி கூறுவோனுக்கும் அத் தண்டனையே கிடைக்கும்; ஆதலின், அவனுடைய நாவும் கெடும். கற்றோர்முன் கல்லாதவன் எதையும் பேசுவதற்கு அஞ்சுவான்; அங்ஙனம் அஞ்சாது பேசினும் அவனுரை பலராலும் இகழப்பட்டு அவனுடைய நா அடக்கப்படும். ஆதலின், அவனுடைய நாவும் அவ்விடத்தில் அடங்கும். ஆணை கடவாத ஒருவனுக்கு வஞ்சனையாகக் கடன் கொடுத்து அவனைக் கெடுக்கக் கருதிய மற்றொருவன், கடன்பட்ட அம் மனிதன் அதனைக் கொடுக்க முடியாத நிலைமையி லிருக்கும்போது அவனிடத்தே வந்து கடின மொழிகளைக் கூறிக் கடன் கேட்பான்; அப்போது அவன் அதற்கு மறுமொழி யொன்றுங் கூற வகையறியாமல் விழிப்பான்; அதனால் அவனுடைய நாவும் அத்தருணத்தில் அடங்கும். நற்குடியிற் பிறந்தவனிடத்தே ஒரு குற்றமுண்டாகிவிட்டால் அவன், அதைப்பற்றித் தனக்குண்டாகும் இழிவைக் கருதி மனவேதனையடைந்து, எவரிடத்தும் கூசாமற் பேசுதற்கு அஞ்சுவான்; அந்த மானக்கேடானது அவனைப் பேசவொட்டாமல் அவனுடைய நாவை அடக்கிவிடும்; ஆதலின், அவனது நாவும் அப்போது அடங்கியிருக்கும். இங்ஙனம் கூறியதனால், இவ்வாறு நாவடங்கிப்போதல் இழிவாமென்பதும், இத்தகைய இழிவை உண்டாக்கத்தக்க அச் செய்கைகளை மனிதர் செய்யலாகாதென்பதும் பெறப்படும். இவ்விழிவை உண்டாக்கத்தக்க அச்செய்கைகளாவன: புலாலுண்ணுதலும், பொய்ச்சாக்ஷி கூறுதலும், கல்வி யில்லாதிருத்தலும், குடிகெடுக்கும் வஞ்சனைக்காரரிடத்தே கடன்பட்டிருத்தலும், குடிப்பிறந்தார் இழிவான காரியங்களைச் செய்தலுமாம்; இவற்றை நீக்குவோர்க்கு நற்புகழும் நற்கதியு முண்டாகும். கல்வியின்மையை நீக்குதலாவது கல்வி கற்றலாம்.

'கொன்றுண்ணல்' என்பது தசை தின்பதையே உணர்த்துமாதலின், 'கொன்றுண்பான்' என்ற தொடரில், 'ஒரு பிராணியை'

என்னும் சொல்லும், 'அதன் தசையை' என்னும் சொல்லும் இசையெச்சங்களாகக் கூட்டி யுரைக்கப்பட்டன. கடன் கொடுத்து ஒருவனைக் கெடுப்பவன் அவனுக்குப் பகைவனே ஆதலின், அங்ஙனங் கெடுப்பானை 'ஒன்ருன்' என்ருர் ஆசிரியர்; ஒன்ருன் - பகைவன். 'நாச்சாங்கடவான்' என்பதை 'கடவான் நாச்சாங்' என மாற்றுக. "ஒன்ருனுங் கண்டுழி நாச்சாங் கடவான்" என்ற தொடருக் கிடையிலும் பொருண் முடிபுக்குத் தகப் பல வாக்கியத் தொடர்கள் இசையெச்சமாகக் கூட்டி யுரைக்கப்பட்டன. இங்குத் தீச் செயல்களே முன்னர் அடுக்கிச் சொல்லப்பட்டிருக்கும் முறைமை நோக்கி 'உண்டுழி' என்றவிடத்தும் 'அவனிடத்தே ஒரு குற்றம்' என்ற தொடரும் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. உழி இரண்டும் ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபுகள். கண்டவழி, உண்டவழி என்பன அகரந் தொகுத்தலாய்க் 'கண்டுழி,' 'உண்டுழி' என வந்தன.

### இன்னவற்றிற்கு இன்னவை கூற்றமெனல்.

11. சிலம்பிக்குத் தன்சினை கூற்றநீள் கோடு
விலங்கிற்குக் கூற்ற மயிர்தான்—வலம்படா
மாவிற்குக் கூற்றமா ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை.

(ப-ரை.) சிலம்பிக்கு - சிலந்திப்பூச்சிக்கு, தன் சினை - தன்னுடைய கருவாகிய முட்டையே, கூற்றம் - யமனாகும்; விலங்கிற்கு - எருதுமுதலிய மிருகங்களுக்கு, நீள் கோடு - நீண்ட கொம்புகளே, கூற்றம் - யமனாகும்; வலம்படா - தன்னிடத்தே இதர மிருகங்களை வெல்லும் வலிமை யுண்டாகாத, (அதாவது வலிமையற்ற) மாவிற்கு - கவரிமா என்னும் மிருகத்திற்கு, மயிர் - அதன் உரோமமே, கூற்றம் - யமனாகும்; ஞெண்டிற்கு - நண்டுக்கு, தன் பார்ப்பு - தன்னுடைய குஞ்சுகளே, (கூற்றம்) - யமனாகும்; நாவிற்கு - ஒருவனு

டைய நாவினுக்கு, நன்று அல் - நன்மையல்லாத, வசை - ஏச்சான மொழிகள், (கூற்றம்) - யமனாகும்.

(கு-ரை.) சிலந்திப்பூச்சிக்கு அதன் முட்டையும், மிருகங்களுக்கு அவற்றின் நீட்சியான கொம்புகளும், கவரிமாவிற்கு அதன் மயிரும், நண்டுக்கு அதன் குஞ்சுகளும், ஒருவனுடைய நாவிற்கு வசைமொழியும் யமனாகும் என்பதாம்.

(வி-ரை.) சிலந்திப்பூச்சி கருக்கொண்டு முட்டை யிட்டவுடன் அழிந்துபோகும். மிருகங்களுக்கு நீண்ட கொம்பிருந்தால் அவை மரம் முதலியவற்றில் அகங்காரங்கொண்டு பாய்ந்து கொம்பு சிக்கிக் கொள்ள அதனைப் பிடுங்கிக்கொள்ள முடியாமல் அவ்விடத்திலேயே நின்று அழிவனவாம்; அல்லது, அவற்றைப் பிடித்துக் கொல்லக் கருதுவோர் கயிறுகளைச் சுருக்கு முடிபோட்டுக் கொம்பின்மேல் வீச அது அக்கயிற்றில் மாற்றிக்கொள்ள அவை அவரிடம் அகப்பட்டழியும். கவரிமா, தன்னுடைய மயிரானது எதிலேனும் சிக்கிக் கொண்டால் அம் மயிர் அறுபடும்படி அதனை யிழுத்தறுத்துவிட்டுப் போகமாட்டாது; தன்னுடைய மயிரொன்றுக்கு அழிவு நேர்ந்தால் அது தனக்கு மிகுந்த மானக்கேடென்பது அதன் துணிபு; ஆதலின், அவ்வாறு தன் மயிர் சிக்கிக்கொள்ளு மிடத்தில் அது நின்று உயிரை விட்டுவிடும். நண்டு குஞ்சுகளை யீன்றவுடனே அழிந்துபோகும்; இது, "நண்டுசிப்பி வேய்கதலி நாசம்வருங் காலத்தில், கொண்ட கருவைக்கும்" என்பதனாலும் உணரப்படும். இவை தம்மிடத்திலேயே உண்டாகும். இவற்றால் அழிந்துபோவது இயற்கை யாதலின் இவைகளை இவற்றிற்கு யமன் என்றார் ஆசிரியர். இவை உடன்பிறந்த இவற்றை அழிப்பதுபோல ஒருவனுடைய நாவிலுண்டாகும் வசைமொழியும் அவனை யழித்துவிடும்; எங்ஙனமெனில், ஒருவன் பிறரைப் பற்றி வசைமொழி கூறிக்கொண்டிருப்பானாயின் அவனுக்குப் பல பகைவர்கள் ஏற்பட்டு அவனை அடியோடு அழித்தேவிடுவர்; அத

னால் அந் நாவும் அழிந்துவிடும்; அன்றியும், அவன் இறந்த பிறகு யமனுலகில் அவனுடைய நா அரியப்படும்; இதுபற்றியே 'நாவிற்கு நன்றல் வசை கூற்றம்' என்றார் ஆசிரியர். ஆகவே, பிறரைப் பழித்துக் கூறுதல் தீமை பயக்குமென்பது இதனாற் பெறப்படும்.

மயிர்தான் என்பதில் தான் - அசை. கவரிமாவானது எதற்கு மஞ்சும் மெல்லிய மிருகமாதலின், அது, 'வலம்படாமா' என்று கூறப்பட்டது. ஈற்றிலுள்ள கூற்றம் தீபகமாக்கி ஞெண்டிற்கும், நாவிற்கும் கூட்டப்பட்டது. ஞண்டு, ஞெண்டு எனப்போலியாயிற்று; இதில் மொழி முதல் அகரத்திற்கு எகரம் போலி; ஞண்டு என்பதும் நண்டு என்பதன் போலியெனக் கொள்ளப்படும். வசை - பழிப்பு; அஃதாகுபெயராய்ப் பழிப்பாம் மொழிகளை யுணர்த்திற்று.

### நகைத்தற் கேதுவானவை.

12. நாணிலான் சால்பு நடையிலா னன்னோன்பும்
ஊணிலான் செய்யு முதாரதையும் - ஏணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்றான் கவிசெயலும்
நாவகமே நாடி னகை.

(ப - ரை.) நாண் இல்லான் - வெட்க மில்லாதவனுடைய, சால்பும் - பெருமையையும் (அதாவது தற்பெருமையையும்), நடை இல்லான் - நல்ல நடக்கையில்லாதவனுடைய, நல் நோன்பும் - நல்ல விரதத்தையும், ஊண் இல்லான் - உணவில்லாதவன், செய்யும் - செய்கின்ற, உதாரதையும் - உதாரத்துவத்தையும், (அதாவது, அவன் ஈகைக்குணம் காட்டிக்கொள்ளுதலையும்) ஏண் இல்லான் - வல்லமை யில்லாதவனுடைய, சேவகமும் - வீரத்தையும் (அதாவது, வீரத்தோடு செய்யும் சேவகத் தொழிலையும்), செந்தமிழ் - செவ்விய தமிழில், தேற்றான் - தன் மனத்தைத் தெளியச் செய்யாதவன்

(அதாவது, செந்தமிழை ஐயமறக் கற்றுக்கொள்ளாதவன்) கவி செய்யலும் - பாட்டுக்களைச் செய்தலையும், (அறிவுடையோரின்) நா அகம் - நாவினிடமானது, (அதாவது: நாவானது) நாடின் - (பேச) விரும்பினால், நகை - (அவர்க்குச்) சிரிப்பாகும்.

(க - ரை.) வெட்கங் கெட்டவன் பெருமை பாராட்டுதலையும், நன்னடை யில்லாதவன் விரத மனுஷ்டித்தலையும், உணவில்லாதவன் உதாரத்துவம் காட்டிக்கொள்ளுதலையும், வலிமையற்றவன் வீரம் பேசுதலையும், செந்தமிழுணர்ச்சி யில்லாதவன் கவி செய்தலையும் அறிஞர் நாவினிடமாக ஆராய்ந்து பேசப் புகுந்தால் அவரிடத்தே மிகுதியும் நகைப்பே யுண்டாகு மென்பதாம்.

(வி-ரை.) தனக்கு வரும் இழிவைச் சிறிதும் கருதாமல் எதை யும் செய்பவனே நாணமில்லாதவனும்; அவன், பிறர் பார்த்து நகைக் கும் காரியங்களையும் உயர்ந்தனவாக நினைத்துச் செய்து அவற்றால் தற்பெருமை பேசிக்கொள்வான்; அவ்வாறு அவன் கூறும் தற் பெருமையை அறிஞர் பேசத் தொடங்கினால் அவர்க்கு நகைப்பே யுண்டாகும். நல்ல நடக்கை யில்லாதவன் மேலுக்கு நடிப்பாகவே விரதங்களை யனுஷ்டிப்பான்; இங்ஙனம் செய்யும் நோன்பால் ஒரு பயனுமில்லை யாதலின் இதனைப் பேசுமிடத்துப் பலரும் நகைப்பர். தனக்கே உண்பதற்கு உணவில்லாதவன் மகா கொடையாளன் போல நடித்து அநேக தான தருமங்களைச் செய்வதாகப் பேசுவது அவனைப் பார்த்தோ ரெல்லாரும் பரிகசித்துச் சிரித்தற்கேதுவான காரியமாம். எதையும் செய்ய வல்லமை யில்லாதவன் சேவகத் தொழிலில் அமர்ந்து வீரம் பேசுவானே யாகில் அவனைக் கண்டவ ரெல்லோரும் நகைப்பர். செந்தமிழில் தேர்ச்சி யில்லாதவன் இயற் றும் செய்யுள் எதுகை மோனையின்றியும், பொருளமைதி யின்றியும் இருக்கு மாதலின், கல்வியறிவுடையோர் அதனைப்பற்றிப் பேசப் புகுமிடத்தில் மிகுதியும் நகைப்பார்கள்.

சால்பு - மாட்சிமை, உயர்வு; இஃதிங்கே பெருமையை உணர்த்திநின்றது. நடை - நன்னடை, துன்னடை இரண்டுக்கும் பொதுவெனினும் நன்னேன்பிற்குப் பொருத்தமானது நன்னடையே யாதலின், பின்னே நன்னேன்பு என வருதல் குறித்து அது நன்னடை யெனக் கொள்ளப்பட்டது; இனி, "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே." என்பதுபோலப் பலபொருள் குறித்து வரும் ஒரு சொல் உயர்வுக்கே கொள்ளப்படுதல் முறைமையாதலின் இங்ஙனங் கொள்ளப்பட்டதெனினுமாம். செந்தமிழ் தேற்முன் - ஏழாம் வேற்றுமைத் தொகை; தேற்முன் பிறவினை யாதலின் அதற்கேற்பச் செயப்படுபொருளாகிய மனம் இசையெச்சமாகக் கூட்டியுரைக்கப்பட்டது. நாவகமே என்பதில் ஏ - அசை. இலான், செயல் என்பவற்றில் விகாரத்தால் இடை யொற்றுக்கள் கெட்டன. நகை என்பதற்குப் பின் கூட்டிய ஆகும் என்பது இசையெச்சமெனப் படும். நாடின் என்பதற்கு முன் 'பேச' என்னுஞ் சொல்லும் இசையெச்சமாக வருவிக்கப்பட்டது.

## நஞ்சை நிகர்த்த செயல்கள்.

13. கோறலு நஞ்சூனைத் துய்த்தல் கொடுநஞ்சு
வேறலு நஞ்சுமா றல்லானைத்—தேறினு
னீடாங்கு செய்தலு நஞ்சா மிளங்கிளையை
நாடாதே தீதுரையு நஞ்சு.

(ப-ரை.) கோறலும்-ஒரு பிராணியைக் கொல்லுதலும் நஞ்சு - (ஒருவனுக்கு) விடமாகும்; ஊனை - (அவ்வாறு கொன்ற பிராணியின்) தசையை, துய்த்தல் - தின்னலும், கொடு நஞ்சு - கொடிய விடமாகும்; மாறு அல்லானை-பகையல்லாதவனை, வேறலும் - எதிர்த்து வெல்லுதலும், நஞ்சு - விடமாகும்; தேறினன் - (ஒருவனை மோசக்காரனென்று) தெரிந்தவன், ஆங்கு - (அத்தீயன் கடன்

முதலிய இடரில் சிக்கிய) அவ்விடத்தில், ஈடு செய்தலும் - அவ னுக்குத் தன்னைப் பிணையாகும்படி செய்தலும், நஞ்சாம் - (தனக்கு) விடமாகும்; இளம் கிளையை-இளமையான சுற்றத்தாரை, நாடாது- (காப்பாற்ற) நினைக்காமல், தீதுரையும் - (ஒருவன் அவர்களுடைய தாழ்ந்த நிலைமையைப்பற்றித்) தீங்கான மொழிகளைக் கூறுதலும், நஞ்சு - (அவனுக்கு) விடமாகும்.

(க-ரை.) ஒருயிரைக் கொல்லுதலும், அதன் தசையைத் தின்னுதலும், பகைவனல்லாதவனை எதிர்த்து வெல்லுதலும், மோசக்காரனென்று தெரிந்த ஒருவனுக்குப் பிணைப்படுதலும், சுற்றத்தாரை ஆதரிக்காது நிந்தித்துத் தீமொழிகளைக் கூறுதலும் ஒருவனுக்கு நஞ்சுபோன்றனவா மென்பதாம்.

(வி - ரை.) ஒன்றனுயிரைக் கொல்லுதலும், ஊனைத் தின்னுதலும் பஞ்சமாபாதகத் தொழில்களிற் சார்ந்த கொலையின்பாற்பட்டன வாதலின், இவற்றைச் செய்த மனிதனை இவை இவ்வுலகத்திலும் நஞ்சுபோல் அழித்து மறுமையிலும் நரகத்திற் சேர்த்துத் துயர் செய்வனவாம். ஒருவனுக்குப் பகைவனல்லாதவன், வல்லமையிற் குறைந்தவனுவான்; ஆதலின், அவனை வென்று அவன் உரிமைகளைக் கவர்தல் மிக எளிதாம்; அங்ஙனம் எளியனைத் துன்புறுத்தல் மகா பாதகமாம்; இப் பாதகத்தைச் செய்தானை இது விஷம்போல அழித்துவிடும்; இனி, இதற்குப் 'பகைவனல்லாத சிநேகிதனை' எனப் பொருள் கோடலு மொன்று. ஒருவனுக்குச் சிநேகனு யிருப்பவன் அவனை முற்றிலும் நம்பியே யிருப்பான்; ஆதலின், இவனை வெல்லுதல் அவனுக்கெளிதாம்; ஆகவே இதுவும் மகா பாதகமாம். ஒருவனை மோசக்காரனென்று தெரிந்துகொண்டிருக்கும் மற்றொருவன் அவனுக்கு ஆபத்து நேர்ந்த காலத்தில் பிணைப்படுவானேல் அவன் இவனை அந்த ஆபத்திற் சிக்கவைத்துவிட்டுத் தான் தப்பித்துக் கொள்வான்; ஆதலின், இச்செய்கை நஞ்சுபோல இவனை அழிக்

கத்தக்கதாம்; இனி, 'தேறினு னீடாங்கு செய்தலும்' என்பதை 'தேறினுன் நீடு ஆங்கு செய்தலும்' எனப் பிரித்து, "ஒருவனுல், 'இவன் இக் காரியத்தை முடிக்கத்தக்கவன்' என்று ஆராய்ந்து தெளிந்து தனக்குதவியாகத் தன்னிடம் சேர்த்துக்கொள்ளப்பட்டவனுகிய ஒருவன் அக் காரியத்தை விரைந்து முடிக்காமல் காலத்தை நீட்டித்தல் செய்தலும்" எனப் பொருள் கோடலு மொன்று; இக் குணம் இவனை நம்பிச் சேர்த்துக்கொண்டவனுக்கு விடம்போலக் கொடுமை செய்வதாகும்; இங்ஙனம் பொருள் செய்யுமிடத்து நீடு என்பதை முதனிலைத் தொழிற்பெயராகவும், ஆங்கு என்பதை அசையாகவும் கொள்ளவேண்டும். சுற்றத்தாரைப் பாதுகாவாமல் கைவிடுதல் பாதகமாம்; அதனேடு அவர்களைப் பழித்தல் மகா பாதகமாம்; இந்தப் பாதகமானது மனிதரை இருமையினும் விடத்தைப் போலக் கெடுத்து அவர்க்கு மிகுதியும் துன்பத்தைச் செய்யும்.

கோறல், துய்த்தல், வேறல், செய்தல், என்பன தொழிற்பெயர்கள். உரை-முதனிலைத் தொழிற்பெயர். கோறல் என்பதில், கொல் - பகுதி. வேறல் என்பதில், வெல் - பகுதி. கிளை - உறவு; அஃதாகுபெயராய் உறவாந் தன்மையராகிய சுற்றத்தாரை யுணர்த்திற்று. இளங்கிளை என்பதில் இளமை இங்குச் சிறுமையை உணர்த்தும்; ஆதலின், 'இளங்கிளை' என்பதற்கு வறிஞராகிய சுற்றத்தார் எனப் பொருள் கோடல் வேண்டும்; இளைத்த சுற்றத்தாரிடமே சிலர் புறக்கணித்தலும், பழித்தலும்செய்வர்; ஆதலின், இங்ஙனம் பொருள் கோடல் சிறப்புடைத்து.

இன்னவை தீயன வென்பது.

14. இடரின்னு நட்டார்க ணீயாமை யின்னு
தொடர்பின்னு நள்ளார்கட் டூயோர்ப்-படர்பின்னு
கண்ட லவிர்பூங் கதுப்பினு யின்னுதே
கொண்ட விரதங் குறைவு.

(ப - ரை.) கண்டல் - தாழைமலர், அவிர் - (முடிக்கப்பட்டு) விளங்காநின்ற, பூம் - அழகிய, கதுப்பினாள்-கூந்தலை யுடையவளே! நட்டார்கண் - சிநேகிதரிடத்து, (செய்யும்) இடர்-துன்பம், இன்னா-கெட்டதாம்; (நட்டார்கண்)-சிநேகிதரிடத்தே, (அவர் வறுமையுற்ற காலத்தில்) ஈயாமை - (வேண்டும் பொருளைக்) கொடாதிருத்தல், இன்னா - கெட்டதாம்; நள்ளார்கண் - உறவு கொள்ளாதவரிடத்தே, தொடர்பு - சிநேகங் கொள்ளுதல், இன்னா - கெட்டதாம்; தூயார்-மனப் பரிசுத்த முடையவரை, படர்பு - விட்டு நீங்குதல், இன்னா - கெட்டதாம்; கொண்ட - (ஒருவன் முக்கியமானதாக எடுத்துக்) கொண்ட, விரதம் குறைவு - விரதத்தில் குறைவுபடல், இன்னாது - கெட்டது.

(க - ரை.) சிநேகிதரிடத்தே துன்ப முண்டாகச் செய்தலும், வறுமையுற்ற காலத்தில் அவர்க்குப் பொருளீந்து உதவி செய்யா திருத்தலும், பொருத்த மல்லாதவரோடு சிநேகஞ் செய்தலும், தூயா ரைப் பிரிதலும், கொண்ட விரதத்தை முடிக்காது விடலும் தீமை பயப்பனவாம் என்பதாம்.

(வி - ரை.) ஒரு மனிதனோடு சிநேகஞ் செய்தவர் அவனைச் சகலவிதத்திலும் தீங்கு செய்யமாட்டா னென்று நம்பியிருப்பர்; அவரிடத்தே அம்மனிதன் செய்யும் தீமை எளிதாக நிறைவேறி விடும்; ஆதலின், அத்தகைய நேயரிடத்தில் தீங்கு செய்தல் மகா பாதகமாம், "விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற், றீமை புரிந்தொழுகு வார்." என்பதால் இஃதுணரப்படும். ஒருவன், தன் சிநேகிதனுக்கு வறுமைக்கஷ்டம் நேர்ந்த காலத்தில் தன்னாலியன்ற வரை பொருளுதவி செய்யவேண்டும்; அங்ஙனம் செய்யாவிடில் அது தோஷமாம். மனிதர், நன்றாக ஆராய்ந்து பார்த்து உத்தம மானவரோடு சிநேகஞ் செய்யவேண்டும்; அங்ஙனமின்றி உறவு கொள்ளத் தகாத தீயரோடு சிநேகஞ் செய்தால் அவரால் பல

விதத்திலும் தீங்கே யுண்டாகும். தூயாரோடு ஒருவன் சேர்ந்திருந்தால் அவர் அவனுக்குப் பலவிதத்திலும் நன்மையே புரிவர்; ஆதலின், அவன் அத் தூயார் சிநேகத்தை விட்டுவிடுவானாயின் அந் நன்மையை இழந்தவனாவான். ஒருவன் கொண்ட விரதத்தைப் பூர்த்தியாக முடிப்பானாயின் அவனுக்கு நற்பயன் கிடைக்கும்; அதை அரைகுறையாக விட்டுவிட்டால் அப்பயன் கிட்டாது.

'கண்டலவிர் பூங்கதுப்பினாய்' என்பது மகடூஉ முன்னிலை. 'நட்டார்கண்' என்பது தீபகமாக இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. ஈயாமை, தொடர்பு, படர்பு, குறைவு என்பன தொழிற்பெயர்கள். தூயார்ப்படர்பு-ஐந்தாம் வேற்றுமைத் தொகை. 'பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்.' என்ற விதிப்படி பூகதுப்பு, பூங்கதுப்பு என்றாயது. இன்றாமே என்பதில், ஏ-அசை; தேற்ற மெனினுமாம்.

நந்தண முள்ளவை இன்னவை யென்பது.

15. கொண்டான் வழியொழுகல் பெண்மகன் றந்தைக்குத்
தண்டான் வழியொழுக றன்கிளையஃ—தண்டாதே
வேல்வழி வெம்முனை வீடாது மன்னொடு
கோல்வழி வாழ்தல் குணம்.

(ப-ரை.) பெண் - (இல்லறத்திற் கிசைந்த) பெண்ணாயிருப்பவள், கொண்டான் வழி - தன்னை மனைவியாகக் கொண்ட கணவனுடைய மார்க்கத்திலேயே (அதாவது அவன்கூறும் நெறிப்படியே), ஒழுகல்-நடத்தலும்; மகன்-(ஒருவனுக்குப்) புத்திரனாயிருப்பவன், தந்தைக்கு - அத் தகப்பனுக்கு, தண்டான் - (அவனது கட்டளையை விட்டு) நீங்காதவனாய், வழி - அவனுரைக்கும் மார்க்கத்திலேயே, ஒழுகல்-நடத்தலும்; தன் கிளை-அவனுடைய சுற்றத்தார்க்கு, அஃது - அக்குணமே பொருந்தியிருத்தலும், (அதாவது: அச்சுற்றத்தார் அவன்

வழிப்படியே நடத்தலும்); மன்-அரசனுடைய, வெம்முனை-வெவ்விய போரைச்செய்யும் யுத்தவீரர்கள், அண்டாது - பகைவரோடு சேர்ந்து கொள்ளாமல், (மன்) வேல்வழி - அரசன் பகைவர்மீது எவுகின்ற வேல்செல்லும் வழியேபோய்ப் பகைவரை வெல்லலும்; நாடு - ஒரு அரசனுடைய தேசமானது, கோல்வழி-அவனுடைய செங்கோலின் வழியிலேயிருந்து, (அதாவது: அவனுடைய ஆட்சிக்கடங்கி), வாழ்வல்-வாழ்தலும், குணம் - நற்குணமான செய்கைகளாம்.

(க-ரை.) பெண், புருஷன் இட்ட கட்டளைப்படி நடத்தலும், தந்தை சொற்படி மகன் நடத்தலும், ஒருவனுடைய சுற்றத்தார் அவன் மனதிற்கிசைய நடத்தலும், படைவீரர் எதிரிகளுடன் சேர்ந்துகொள்ளாமல் அரசனுடைய வேல் பாயும் வழியே சென்று பகைவரை வெல்லலும், நாடு அரசனுடைய செங்கோலுக் கடங்கி வாழ்தலும் குணமான செய்கைகளாம் என்பதாம்.

(வி-ரை.) கணவன் மனதிற்கிசைய நடப்பவளே பதிவிரதையாவள்; "கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி" என்பது இதனை வலியுறுத்தும். தகப்பன் சொற்படி அடங்கி நடப்பவனே புத்திரரிற் சிறந்தவனாவான்; அங்ஙனம் நடவாதவன், 'அடங்காப் பிள்ளை' என்று பலராலும் இகழப்படுவான். ஒருவனுடைய சுற்றத்தார் அவனுக்கிசைந்து நடந்தால் மாத்திரந்தான் அவனுக்கும் அவர்களுக்கும் நலமுண்டாகும்; இன்றேல் இருபாலார்க்கும் எப்பொழுதும் குறைகூறுதலே ஏற்பட்டு அதிருப்தியான வாழ்க்கையே உண்டாகும். படைவீரர், பகைவர் செய்யுந் தானோபாயத்தால் அவர்களோடு சேர்ந்துகொள்ளாமல் அரசன் அப்பகைவர்மீ தேவும் வேற்படை செல்லும்வழியே அதைப்போல வேகமாகச் சென்று அப்பகைவரை வெல்லின் அதனால் அரசனுக்கு வெற்றியுண்டாய்த் தங்களுக்கும் எப்பொழுதும் நீங்காத சுகவாழ்வேற்படும்; அங்ஙனமின்றிப் பகைவர்செய்யும் அற்பப்பொருளுதவியை விரும்பி அவர்களோடு சேரின், அவர்கள் ஜெயங்கொண்ட பிறகு இவர்களைப் பழம் பகைவர்களெ

ன்ற எண்ணத்தால் ஆதரிக்காமல் கைவிடுவர்; மேலும், "இவர்கள் நெடுங்காலம் தங்களுக்கு இதஞ்செய்துவந்த அரசனுக்கே மோசஞ் செய்து நம்மோடு சேர்ந்தவர்களாதலின் நமக்கும் ஒரு சமயத்தில் இத்தகைய தீங்கைச் செய்வார்களென்பதில் எட்டுணையும் சந்தேக மில்லை; ஆதலின், இவர்களை ஒழித்தேவிடவேண்டும்" என்றும் வருத்துவர்; பின்னர் இவர்கள் தங்களுடைய அரசனிடத்திலும் சேர்ந்துகொள்ள முடியாமல் மிக்க துன்பத்திற் குள்ளாவர்; அரசனு டைய ஆயுதம் செல்லும் வழியிலேயே தொடர்ந்து பகைவர்மேற் பாய்தல் வீரர்களுக்கு ஒரு சிறந்தகுணம்; ஆதலின் ஆசிரியர், 'வேல் வழி வெம்முனை வீடாதுகுணம்" என்றார். நாட்டி லுள்ளவர்கள் அரசனுடைய செங்கோலுக்கடங்கி அவனால் ஏற்படுத்தப்படும் நீதிக ளைப் பின்பற்றி நடப்பார்களேயானால் நல்ல வாழ்வை அடைவர்; அவனுக்கு விரோதம் புரியின் தீங்கினுக்குள்ளாவர்; "கோனோக்கி வாழுங்குடி" என்பது ஆன்றோர் வாக்கு.

ஒழுகல், அஃது, வீடாது, வாழ்தல் என்பவற்றில் எண்ணும் மைகள் தொக்கன. தட்டான் என்பது தண்டான் என மெலித்தல் விகாரம் பெற்று வந்தது; தண்டுதல் - தடைசெய்தல், விலகுதல். முனை - போர்; அஃதாகுபெயராய்ப் போர்செய்யும் வீரர்களை யுண ர்த்திற்று. வீடாதது என்பது தகரந் தொகுத்தலாய் 'வீடாது' என வந்தது. மன் - தீபகமாக இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. நாடு - இடவாகுபெயர்; நாட்டிலுள்ள மனிதரை யுணர்த்தும். 'வேல்வழி' என்பதற்கு 'வெல்லும் வழியில்' எனப் பொருள் கொண்டு, 'வேல் வழி வெம்முனை வீடாது' என்ற தொடருக்கு "வெவ்விய போர் வீரர்கள் வெல்லும் வழியில் கெடாமல் மேற்செல்லுதல்" எனப் பொருள் விரிப்பினும் அமையும்; இங்ஙனம் பொருள் விரிக்குமிட த்து, 'வெல்' என்பது 'வேல்' என முதல் நீண்டு வந்ததெனக் கொள்ளவேண்டும்; வீடல்-என்பதற்குக் 'கெடுதல்' எனப் பொருள்

கொள்ளவேண்டும்; முன் உரையிற் கொண்ட பொருளில் விடாது என்பது வீடாது என முதல் நீண்டு வந்ததாகக் கொள்ளவேண்டும்.

பெருமையும், சிறுமையும், நல்லனவும்.

16. பிழைத்தல் பொறுத்தல் பெருமை சிறுமை
யிழைத்ததீங் கெண்ணி யிருத்தல்—இழைத்த
பகைகெட வாழ்வதும் பல்பொருளார் நல்லார்
நகைகெட வாழ்வது நன்று.

(ப - ரை.) பிழைத்தல்-பிறருடைய தவறுதலை, பொறுத்தல்-பொறுத்துக்கொள்ளுதல், பெருமை - (மனிதர்க்குப்) பெருமையாகும்; இழைத்த-தனக்கொருவன் செய்த, தீங்கு-தீமையை, எண்ணி இருத்தல் - நினைத்துக்கொண்டே யிருப்பது, சிறுமை - சிறுமையாகும்; இழைத்த - ஒருவன் செய்த, பகை கெட - விரோதமானது நீங்க, வாழ்வதும் - வாழ்தலும், பல் பொருளார் - பல பொருள்களை யுடைய தனவந்தர்களது, நகை கெட - பரிகாசச் சிரிப்பானது நீங்க, (அதாவது: தனவந்தர்கள் பார்த்துத் தன்னை எளனஞ்செய்து நகைப்பது நீங்க) வாழ்வது - வாழ்தலும், நல்லார் - நல்லார்களது, (நகை கெட) - எளன நகைப்பானது நீங்க, (அதாவது: நல்லோர்கள் பார்த்துப் பரிகசித்து நகைப்பது நீங்க) (வாழ்வது) - வாழ்தலும், நன்று - நன்மையாம்.

(க-ரை.) பிறருடைய தவறுதலைப் பொறுத்தல் மனிதர்க்குப் பெருமையாகும்; பிறன் செய்த தீமையை எண்ணிக்கொண்டே யிருப்பது சிறுமையாகும்; பிறர்செய்த விரோதம் நீங்கும்படி வாழ்தலும், ஐசுவரியமுடையார் தம்மைப் பார்த்துப் பரிகசித்துச் சிரிக்காமல் வாழ்தலும், நல்லோர் எளனஞ்செய்து நகைக்காமல் வாழ்தலும் நன்மை யுடையனவாம் என்பதாம்,

(வி-ரை.) தவறுதலாவது - ஒருவன் அறியாமற் செய்த குற்றமாம்; இதனை மனிதர் பொறுத்துக்கொள்ளவேண்டும்; அங்ஙனம் பொறுத்துக் கொண்டால் 'இவர் பொறுமையுடைய பெரியார்' எனப் பலருங் கொண்டாடுதலாற் பெருமை யுண்டாகும்; "பொறுத்தார் அரசாள்வார், பொங்கினார் காடுறைவார்" என்பது பழமொழி; இது, பாண்டவர் பொருட்டும், துரியோதனாதியர் பொருட்டும் ஏற்பட்டது. பொறுமையால் பாண்டவர் ஈற்றில் அரசாண்டனர்; பொறுமையின்மையால் துரியோதனாதியர் இடுகாடெய்தினர். பிறர் செய்த தீங்கை உடனே மறந்துவிடாமல் நினைத்துக்கொண்டேயிருந்தால் பகை அதிகரிக்கும்; அப்பகையால் அவனுக்குத் தீங்கு செய்ய மனம் நாடும்; அவ்வாறு நாடித் தீங்குகளைச் செய்யும்போது பலரும் பார்த்து 'இவன் துஷ்டன்' என்றிகழ்வர்; அதனால் சிறுமை யுண்டாகும்;

"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று."

என்பது திருக்குறள். பிறர் விரோதங் கொண்டபோது, அறிஞராயிருப்பவர்கள், சாமம், பேதம், தானம், தண்டம் என்னும் நான்கு வகை உபாயங்களில் எதையேனுங் கொண்டு அப் பகையை நீக்கி வாழவேண்டும்; அங்ஙனம் அதனை நீக்காவிடின் எப்பொழுதும் நிர்விசாரமான வாழ்க்கை ஏற்படவேமாட்டாது. தனவந்தர்கள், தன்னிடம் ஒருவன் யாசிக்க வந்தால் அவனைப் பார்த்து 'இவன் ஒரு தொழிலைச் செய்யக்கூடாதா? யாசகத்தையே தனக்குரிய தொழிலாகக்கொண் டிருக்கின்றானே' என்று பரிகசித்து நகைப்பார்கள்; ஈகைக்குண முடையவருங்கூடப் பெரும்பான்மையும் இவ்வாறு சிறிது நகைத்தே அவனுக்குப் பொருளைக் கொடுப்பர்; இன்னும் ஒரு வறிஞனைக் கண்டவிடத்தும், 'இவன் ஏதேனும் ஒரு தொழிலைச் செய்து பொருளைத் தேடலாகாதா? அரையில் நல்ல வஸ்திரமும் இல்லாது திரிகின்றானே' என இகழ்ந்து நகைப்பர்; இங்ஙனம் ஏழைகளைப் பார்த்து நகைப்பது கெட்டகுணமே யெனினும் அவர்

முயற்சிக் குறைவைக் குறித்துப் பெரும்பான்மையோர் நகைப்பது உலகவியற்கை. ஆதலின், மனிதனுயிருப்பவன் இவர்கள் பார்த்து நகைக்காவண்ணம் வாழவேண்டும்; அதாவது: யாசகத்தையும், தரித்திரத்தையும் நீக்கி நன்முயற்சிகளைச் செய்து பொருளைத்தேடி வாழவேண்டும். நல்லோர்கள், தீயரைக் கண்டால், 'இவர்கள் என் உலகினுக்குச் சுமையாகத் திரியவேண்டும்' என்று பரிகசித்து நகைப்பார்கள்; ஆதலின், மனிதஜன்ம மெடுத்தவன் அங்ஙனம் நல்லோர் பார்த்து நகைத்தற் கேதுவான தீக்குணங்களை அகற்றிப் புகழ் உண்டாகுமாறு வாழவேண்டும்.

பிழைத்தல், பொறுத்தல், இருத்தல், வாழ்வது என்பன தொழிற்பெயர்கள். பெருமை, சிறுமை, நன்று என்பன பண்புப் பெயர்கள். பகை, நகை என்பன ஈறுகெட்ட தொழிற்பெயர்கள். ஈற்றிலுள்ள வாழ்வது என்பதில் எண்ணும்மை தொக்கது. ஐந்து விஷயங்கள் வகுத்துக் காட்டற்பொருட்டு 'நகைகெட வாழ்வது' என்ற தொடர் தீபகமாக இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. பிழைத்தல் பொறுத்தல், இழைத்ததீங் கெண்ணியிருத்தல், பகைகெட வாழ்தல், பல்பொருளார் நகைகெட வாழ்தல், நல்லார் நகைகெட வாழ்தல் என ஐந்து விஷயங்கள் இச்செய்யுளில் அடங்கியிருத்தல் காண்க.

இன்னவை இன்னவிடத்து நல்லன வென்பதும்,
இன்னது இன்னவிடத்துத் தீதென்பதும்.

17. கதநன்று சான்றாண்மை தீது கழிய
மதநன்று மாண்பில்லார் முன்னர் - விதநன்றாற்
கோய்வாயிற் கீழுயிர்க்கி ளூற்றுக் குரைத்தெழுந்த
நாய்வாயு ணல்ல தசை.

(ப - ரை.) மாண்பு இல்லார் முன்னர் - நற்குண மில்லாதவர்க்கெதிரில், கதம் - கோபஞ் செய்தல், நன்று - நல்லதாம்; சான்றாண்

மை - ஞானம் போதித்தல், (அதாவது அறிவு புகட்டும் வார்த்தைகளைக் கூறுதல்) தீது - கெட்டதாகும்; கழிய - மிகுதியாக, மதம் - வல்லமை செய்தல் அல்லது செருக்குச் செய்தல், நன்று - நல்லதாம், குரைத்து எழுந்த - கோபத்தால் கடித்தற்குக் குரைத்துக்கொண்டே எழுந்தோடி வந்த, நாய் வாயுள் - நாயின் வாயினிடத்தே, தசை - மாமிசத்தைக் கொடுத்தல், நல்ல - நல்லதாகும்; (இதுபோல) சோய் வாயின் - கள் முகக்கும் பாத்திரத்தைப் போன்ற வாயினையுடைய, கீழ் உயிர்க்கு - கீழ் மக்களுக்கு, ஈ - கொடுக்கின்ற, துற்றுவிதம் - உணவின் வகைகள், நன்று - நல்லனவாம்.

(க - ரை.) நற்குண மில்லாதவர்க் கெதிரில் கோபஞ் செய்தல் நன்று; சாந்தமாக ஞானம் போதித்தல் தீது; மிகுந்த வல்லமை காட்டுதல் நன்று; கோபித்துக் கடித்தற்குக் குரைத்து வந்த நாயின் வாயில் மாமிசத்தைக் கொடுத்தல் நல்லது; அதேபோல், கீழ்மக்களுக்குக் கொடுக்கும் உணவு விதங்களும் நல்லன என்பதாம்.

நற்குண மில்லாத மூர்க்கரிடத்தில் அறிவுடையார் சாந்தமாகப் புத்திகளைக் கூறினால் அவர்கள் கேட்டு அவற்றின்படி நடக்க மாட்டார்கள்; அவர்களைத் தண்டித்துவிடுவதாக வல்லமையான பேச்சுக்களைப் பேசிக் கோபித்தால் மாத்திரந்தான் அவர்கள் அடங்கி நல்வழிக்குத் திரும்புவார்கள். நாய் குரைத்துக்கொண்டு கடிக்க வரும்போது அதன் வாயில் மாமிசத்தைக் கொடுத்தால் அது சந்தோஷமாக வாங்கித் தின்று வாலை ஆட்டிச் சிநேகத்தைக் காட்டும். இதைப் போலத் தீங்கு செய்ய வரும் கீழ்மக்களுக்கு நல்ல உணவுகளைக் கொடுத்தால் அவர்கள் மிக்க ஆனந்தத்தோடு உண்டு தங்கள் விரோத எண்ணத்தை விடுத்து அங்ஙனம் உணவு கொடுத்தார்க்கு நலமே புரிவர். சில திருடருங்கூடத் தங்கட்கு உணவளித்தவர் வீட்டில் திருடாமல் அவர்மீது விசுவாசஞ் செலுத்துதலை அனுபவத்திற் காணலாம். முன்னுரைத்த மாண்பில்லார் - எவ்வழியினாலேனும்

பிறர் பொருளை அபகரித்துத் தின்று கொழுத்து மூர்க்கராய்த் திரியும் தீயர்கள்; பின்னுரைத்த கீழ்மக்கள், தாழ்ந்த வகுப்பினராய்க் கையிலொன்று மில்லாமல் உணவுக்கு வருந்திப் பசிப்பிணியால் திருட்டு முதலிய தீயகாரியங்களைப் புரிவோர். ஆதலின், அவர்க்குக் கோபம் முதலியனவும், இவர்க்கு உணவு வகைகளும் நல்லன வென்று கூறப்பட்டன.

(வி-ரை.) கதம், சான்றாண்மை, மதம், துற்றுவிதம், தகை என்பனவற்றோடு இசை யெச்சச் சொற்கள் வருவித் துரைக்கப்பட்டன. சான்ற+ஆண்மை=சான்றாண்மை; சாலுதல் நிறைதல்; அதாவது உயர்வு; ஆண்மை-ஆண் தன்மை; ஆகவே, சான்றாண்மை யென்பது உயர்ந்த ஆண் தன்மை யெனப் பொருள்படும்; ஆண்தன்மைக்கு உயர்வாவது சிறந்த அறிவோடு அல்லது வல்லமையோ டிருத்தலாம்; ஆதலின், சான்றாண்மை யென்பதற்கு அறிவு எனப் பொருளுரைக்கப் பட்டது; பொறுமையும் ஆடவர்க்குரிய சிறந்த குணமாதலின், சான்றாண்மைக்குப் பொறுமை செய்தல் எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். மாண்பு-அழகு; அஃதிங்கே நற்குணத்தை உணர்த்தி நின்றது. முன்னர்-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. "நன்றால்" என்பதில் ஆல்-அசை. கோய்-கள்முகக்கும் பாத்திரம்; இது வாயகன்றதாய் விகார வடிவம் பெற்றிருக்கும்; கீழ்மக்களுடைய வாய் அதிக உணவை உருட்டிப் போடுதற் கேதுவாய் அகன்றதாயும், விகார வடிவம் பெற்றதாயும், கெட்ட மொழிகளே வெளிப்படத் தக்கதாயும், அருவருக்கத் தக்கதாயு மிருக்குமாதலின், அருவருப்பான கள்ளையே அடிக்கடி முகக்கக் கூடியதும், விகார வடிவம்பெற் றகன்றிருப்பது மாகிய இந்தக் கள்முகக்கும் பாத்திரம் அதற்கு உவமை கூறப்பட்டது. இதனால் அவர்கள் எவரும் பார்த்தவுடன் அருவருக்கத்தக்க வகுப்பினர் என்பது பெறப்படும். இது குறித்தே ஆசிரியர் இவர் குணத்தினையும் நாயின் குணத்தினையும் ஒரு தன்மையன

வாகக் கூறினர். உயிர் - ஆகுபெயராய் அதனையுடைய மனிதரை யுணர்த்திற்று. கீழ்மக்கள் மிகத் தாழ்ந்தவர்களாதலின் அவர்களை உயர்திணையாகக் கூருமல் இவ்வாறு 'உயிர்' என்று அஃறிணையாகக் கூறினர் ஆசிரியர் எனினும் அமையும். கழிய - கழியென்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம். குரைத்தல் - நாய் முதலிய மிருகங்கள் வாயாலிடு மொலி. வாயுள் - என்பதில் உள்-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. நல்லது என்பது, துவ் விகுதி குன்றி நல்ல என நின்றது. எழுந்த-பெயரெச்சம்.

## மக்கட் பிறப்பின் பயன்கள்.

18. *நட்டாரை யாக்கிப் பகைபணித்து வையெயிற்றுப்*
*பட்டா ரகலல்கு லார்ப்படிந்—தொட்டித்*
*தொடங்கினு ரில்லகத் தன்பிற் றுறவா*
*வுடம்பினு னாய பயன்.*

(ப-ரை.) உடம்பினுன் - இந்த மானிட தேகத்தினுல், (அதாவது மனிதனுய்ப் பிறந்ததனுல்) ஆய - உண்டாகிய, பயன் - பிரயோசனமாவது, நட்டாரை - சிநேகஞ்செய்தவரை, ஆக்கி - செல்வத்தில் விருத்தி யடையச்செய்து, பகை - பகைவரை, பணித்து - அடக்கி வணங்கச் செய்து, வை - கூர்மையுள்ள, எயிற்று - பற்களை யுடையவரும், பட்டு ஆர் - பட்டாடை அணியப்பெற்ற, அகல் - அகன்ற, அல்குலார் - அல்குலை யுடையவருமாகிய இல்லக் கிழத்திகளை, படிந்து-சேர்ந்து, ஒட்டி-குடும்ப காரியங்களிற் பொருந்தி, தொடங்கினுர் - தன்னேடு முயற்சி செய்தவர்களின், (அதாவது தன்னேடு சேர்ந்து குடும்ப விஷயங்களில் ஒத்து உழைக்க முயன்றவர்களாகிய சுற்றத்தார்களின்மீ தேற்றப்பட்ட) அன்பின்-அன்பினின்றும், இல்லகத்து-தன் வீட்டினிடமாக உள்ளவர்களின், (அதாவது தன் வீட்டிலுள்ளவர்களாகிய தாய்தந்தையர் மக்கள் முதலியோர்களின்மீ தேற்பட்ட) அன்பின் - அன்பினின்றும், துறவா - நீங்காமையாம்.

(க-ரை.) மானிடதேக மெடுத்ததன் பயனாவது: நண்பினரைச் செல்வ முதலியவற்றில் விருத்தியடையச் செய்தலும், பகைவரை அடக்குதலும், இல்லக்கிழத்திகளோடு கூடி வாழ்தலும், சுற்றத்தாரின்மீதும் தன் வீட்டிலுள்ள தாய்தந்தையர் முதலியவர்களின் மீதும் அன்பு செலுத்தலுமாம் என்பதாம்.

(வி-ரை.) சிநேகிதரைச் செல்வத்தில் விருத்தியடையச் செய்தால் அவர் எப்பொழுதும் உதவியாயிருப்பர். பகைவரை அடக்கிவிட்டால் துன்பம் நேருவதற் கேதுவிராது. மனைவியரோடு மனமொத்துக் கூடிவாழ்ந்தால் செவ்வனே இல்லறம் நடத்துதற்கும், நற்சந்ததிகளைப் பெறுதற்கும், இம்மை மறுமையென்னும் இரண்டிடத்துப் பயன்களை அடைதற்கும் ஏதுவுண்டாம். சுற்றத்தாரின்மீது அன்பு செலுத்திவந்தால் அவர்கள் எப்பொழுதும் கூடியிருந்து பலவுதவிகளைச் செய்துவருவர்; அதனால் உலகத்தில் மிக்க சிறப்புண்டாம். வீட்டிலுள்ள தாய்தந்தையர் மக்கள் முதலியவர்களிடத்தில் விசுவாசங் காட்டிவந்தால் மிக்க புகழும் புண்ணியமும் உண்டாம்; ஆதலின், இவ்வைந்து செய்கைகளும் மனிதஜென்மத்தா லேற்படும் பயனாகக் கூறப்பட்டன.

'ஆக்கி' என்பதன்முன் 'செல்வத்தில்' என்னுஞ் சொல் இசையெச்சமாகக் கூட்டி யுரைக்கப்பட்டது. பகை - விரோதம்; இஃது ஆகுபெயராய் அதனை யுடையாரை யுணர்த்திற்று. பணிவு - தாழ்வு; பணித்தல்-தாழ்த்தல். ஒருவனுடைய சுற்றத்தார் அவனோடு நன்மையாகிய காரியங்களிற் சேர்ந்து உதவிசெய்ய முயலுகின்றவராதலின் அவரை 'ஒட்டித் தொடங்கினார்' என்றார் ஆசிரியர். இல்லகம்-வீட்டிடம்; இல்-வீடு, அகம்-இடம்; அகம் என்பது ஏழாம்வேற்றுமைச் சொல்லுருபாகக் கொள்ளப்படும்; இல்லகம் என்பது இடவாகுபெயராய் அதிலுள்ளவர்களை உணர்த்திற்று. 'அன்பின்' என்பது தீபக

மாக இரண்டிடத்தும் கூட்டப்பட்டது. துறவாமை என்னும் தொழிற்பெயர் மையீறு கெட்டுத் துறவா என நின்றது. உடம்பு - ஆகுபெயராய் மனிதனை உணர்த்தும்.

### பிறவியை நீக்குஞ் செயல்கள்.

19. பொய்யாமை பொன்பெறினுங் கள்ளாமை மெல்லிய
வையாமை வார்குழலார் நச்சினு—நையாமை [லார்
யோர்த்துடம்பு பேருமென் றூனவா யுண்ணேற்
பேர்த்துடம்பு கோட லரிது.

(ப-ரை.) பொன் பெறினும் - (ஒருவன்) பொன்னைப் பெற்றாலும், பொய்யாமை - பொய் சொல்லாமலும், கள்ளாமை - (பிறர் பொருளைக்) களவுசெய்யாமலும், மெல் இயலார்-மெல்லிய தன்மையுடையாராகிய எளியாரை, வையாமை - தூஷணையாகப் பேசாமலும், வார்-நீண்ட, குழலார்-கூந்தலை யுடையவர்களாகிய அன்னிய மாதர்களே, நச்சினும் - விரும்பினாலும், நையாமை - மனவுறுதி கெட்டுத் தளராமலும், (அதாவது மோகத்தால் மனந்தளர்ந்து பரதார இச்சை கொள்ளாமலும்), உடம்பு பேரும் என்று - தன் தேகம் மெலியுமென்று, ஓர்த்து - தெரிந்து, (அதைக் காப்பாற்றிக்கொள்ளும்பொருட்டு) ஊன்-(வேறொரு பிராணியின்) தசையை, அவாய்-விரும்பி, உண்ணேல்-உண்ணுதிருப்பாஞயின், (அவன் இத்தேகத்தை விட்டபின்பு) பேர்த்து - மீண்டும், உடம்பு கோடல் - (வேறொரு) உடம்பைக் கொள்ளுதல், (அதாவது) இந்த ஜன்மம் போனபின் வேறு ஜன்மம் எடுத்தல்) அரிது - இல்லை.

(க - ரை.) ஒருவன் பொன்னைப் பெறுவதாயிருப்பினும், பொய் கூறாமலும், பிறர் பொருளைத் திருடாமலும், எளியாரை நிந்தித்துப் பேசாமலும், பெண்களே விரும்புவதா யிருந்தாலும் மன

வுறுதி கெட்டுப் பாதார இச்சை கொள்ளாமலும், தன் உடம்பு மெலியுமென்று வேறொரு பிராணியின் தசையை விரும்பி உண்ணுதிருப்பானாயின் அவனுக்கு ஜன்ம மில்லை யென்பதாம்.

(வி-ரை.) ஒருவன் தன் எளிய விரோதிகளைக் கெடுத்தற் பொருட்டு வேறு சிலரிடத்தில், "நான் அதிகப் பொன் தருகிறேன்; நீ எனக்காகப் பொய்ச் சாக்ஷி கூறி என் விரோதிகளின் வழக்கில் அவர்களுக்கு அபஜெய முண்டாகும்படி செய்யவேண்டும்; அவர்கள் வீட்டில் பொருள்களைத் திருடி அவர்களுக்கு நஷ்ட முண்டாக்க வேண்டும்; அவர்களை வைதல் வேண்டும்." என்று கூறினால், அவர்கள் அவ்வாறே அப் பொன்னிற் காசைப்பட்டுப் பொய் கூறுதலும், பொருளைத் திருடுதலும், அவரை வைதலும் செய்வர்; ஆதலின், இதுபற்றியே ஆசிரியர், "பொன் பெறினும் பொய்யாமை, கள்ளாமை, மெல்லியலார் வையாமை" என்றார். 'பொன் பெற்றாலும் இவற்றைச் செய்தல் கூடாது' எனவே, 'இவை மனிதர்க்கு அறவே கூடா' என்பது பெறப்படும். பொய் கூறுதலும், பிறர் பொருளைத் திருடுதலும், எளியாரை வைதலும் மகாபாதகச் செயல்களாம். இவை போலவே, பிறர்மனை விரும்புதலும், ஒரு பிராணியைக் கொன்று அதன் தசையைத் தின்னுதலும் மிகுந்த பாவச் செய்கைகளாம்; இவற்றையும் எக்காரணத்தைக்கொண்டும் செய்தல் கூடாது; ஆதலின், 'வார்குழலார் நச்சினு நையாமை' என்றும், 'உடம்பு பெருமென் றூனவாயுண்ணனேல்' என்றும் கூறினார் ஆசிரியர். இச் செயல்கள் இகத்திற் பல துன்பங்களை யுண்டாக்கிப் பரத்திலும் துர்க்கதிகளுட் செலுத்திப் பல பிறவிகளை யுண்டாக்கி மனிதரை வருத்துவனவாம்; ஆதலின், இவற்றைச் செய்வோர் இத் துன்பங்களையடைவர்; செய்யாதார் பிறவித் துன்பத்தினின்றும் நீங்கி முத்தியின்பத்தை யெய்துவர்; இது குறித்தே ஆசிரியர், '.....உண்ணனேற் பேர்த்துடம்பு கோடலரிது' என்றார்.

பொய்யாமை, கள்ளாமை, வையாமை, நையாமை என்பன மையீற்று வினையெச்சங்கள்; உண்ணான் என்ற வினைமுற்றோடு முடிவனவாம்; இனி இவற்றை மையீற்று வியங்கோள்களாகக் கொண்டு இவற்றிற்கு, "பொய் கூறாதிருக்க, திருடாதிருக்க, வையாதிருக்க, நையாதிருக்க" எனவும் பொருளுரைக்கலாம். இங்ஙனம் உரைக்குமிடத்து, இச் செய்யுள் முழுவதிற்கும், "ஒருவன் பொன் பெறுவதா யிருந்தாலும் பொய் கூறாதிருக்க, திருடாதிருக்க, எளியாரை வையாதிருக்க, பெண்களை விரும்பினாலும் மனவுறுதி கெட்டுப் பிறர்மனை விரும்பாதிருக்க; இவற்றோடு அவன், உடம்பு மெலியு மென்றறிந்து ஒரு பிராணியின் தசையை உண்ணாமலிருப் பானாயின் வேறு ஜன்ம மெடுத்தல் இல்லை" என்று அன்னுவயங் கொள்ள வேண்டும். இவற்றை மையீற்று வியங்கோள்களாகக் கொள்வது (நன்-வினை-கக - ஆம்) சூத்திர வுரைப்படி, உரையிற் கோடலால் அமையும், முன்னுரைத்தபடி வினையெச்சங்களாகக் கொள்ளுதல் (நன் - பத - கரு - ஆம்) சூத்திர வுரையால் அமையும். பொய்யாமை, கள்ளாமை முதலியவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. பொன் பெறினும் நச்சினும் என்பவற்றிலுள்ள உம்மைகள் இழிவுசிறப்புப் பொருளன; இவைகளை அடையினும் அவற்றைச் செய்தல் தீங்காமென இவற்றின் முகமாக அவற்றின் இழிவை விளக்கின்றன. மெல் இயல் - மெலிந்த தன்மை; அதனையுடையார் மெல்லியர்; ஏழைகள் மெலிவுற்றிருப்பாராதலின் இப் பெயர் பெற்றார். வார்குழல் - வினைத்தொகை. பேருதல் - நிலைமை மாறுதல்; அதாவது முன்னிருந்த இயல்பு வேறுபடல் எனப் பொருள் படும்; ஆதலின், அது, தேகம் முன்னிருந்த வலிமை கெட்டு மெலிதலுக்குக் கொள்ளப்பட்டது. ஓர்ந்து என்பது ஓர்த்து என வலித்தல் விகாரம் பெற்றது. உண்ணானேல் என்பதில், ஏல் எனின் என்பதன் மரூஉவெனக் கொள்ளப்படும். கொள்தல் என்பது

கோடல் என்றாயது; இதில் கொள் - பகுதி. அரிது என்பது இன்மைப் பொருள் தந்து நின்றது, அருங்கேடன் என்பது கேடில்லாதவனை யுணர்த்திநின்றதுபோல.

இன்னார் இன்னதன்மை யுடையவரேனல்.

20. தேவரே கற்றவர் கல்லாதார் தேருங்காற்
பூதரே முன்பொருள் செய்யாதா - ராதரே
துன்ப மிலேம்பண் டியாமே வனப்புடையே
மென்பா ரிருகா லெருது.

(ப - ரை.) கற்றவர் - நல்ல சாஸ்திரங்களைப் படித்தவர்கள், தேவரே - தேவர்களே யாவர்; தேருங்கால் - ஆராயுமிடத்து, கல்லாதார் - அவற்றைப் படிக்காதவர்கள், பூதரே - பூதங்களின் வகுப்பைச் சார்ந்தவராவார்கள்; முன் - (விருத்தாப்பியம் வருவதற்கு) முந்தியே, பொருள் செய்யாதார் - பொருளைத் தேடிக்கொள்ளாதவர்கள், ஆதரே - அறிவில்லாதவரே யாவர்; (நெடுங்காலத்திற்கு முன் செல்வமுடையவராயும் அழகுடையவராயு மிருந்து பின்னர் அவற்றை யிழந்து, 'நாம் உயர்ந்த அந்தஸ்தி லிருந்துவிட்டு இப்பொழுது ஏதேனுமொரு தொழிலைச் செய்வது தாழ்வாம்' என்று ஒரு தொழிலும் செய்யாமல் ஜீவனத்திற்கு வழியின்றித் தேக மிளைத்து வருந்திக்கொண்டு) பண்டு - முற்காலத்தில், யாமே - நாமே, (மிக்க செல்வமுடையோமா யிருந்ததனாலே) துன்பம் இலேம்- துன்பமில்லாதவர்களா யிருந்தோம், என்பார் - என்று வீண் பெருமை பேசுகின்றவர்கள், இருகால் எருது-இரண்டு கால் மாடுகளாவர்; (பண்டு) - முன்னே, (யாமே) - நாமே, (மிக்க இளமை யுடையோமா யிருந்ததனாலே) வனப்புடையேம் - அழகுடையவர்களா யிருந்தோம், (என்பார்)-என்று வீண் தற்பெருமை கூறுவோர், (இருகால் எருது) - இரண்டுகால் மாடுகளாவர்.

(க - ரை.) நல்ல சாஸ்திரங்களைக் கற்றவர்கள் தேவருக்கு நிகராவார்கள்; கல்லாதவர் பூதங்களுக்கு நிகராவர்; இளமையிற் பொருளைத் தேடிக்கொள்ளாதவர் அறிவில்லாதவ ராவர்; முன்னிருந்த பொருளையும் அழகையும் காப்பாற்ற முடியாமல் இழந்துவிட்டு விருத்தாப்பியம் வந்தபோது வேறு தொழிலைச் செய்தால் தங்கள் மதிப்புக்குக் குறைவாகு மென்று ஒரு தொழிலையும் செய்யாமல் ஜீவனத்திற்குக் கஷ்டப்பட்டுத் தேகம் வாடி வருந்திக் கொண்டு, 'முன்னே நாங்கள் ஐசுவரியமுடையவர்களா யிருந்தபடியால் மிகவும் சௌக்கியமுடையவர்களா யிருந்தோம், அழகுடையவர்களா யிருந்தோம்' என்று வீண்பெருமை பேசுவோர் இரண்டு கால் மாடுகளாவர் என்பதாம்.

(வி-ரை.) உயர்ந்த சாஸ்திரங்களைக் கற்றறிந்தவர்கள் இவ்வுலகில் நீதிப்படி நடந்து தான தருமங்களைச் செய்து புண்ணியமடைந்து அப் புண்ணியப் பயனால் தேவலோக பதவியை அடைவார்கள்; அதனால் அவர்கள் தேவர்களாவார்கள். கல்லாதவர் அறிவின்றிப் பல துர்க்கிருத்தியங்களைச் செய்து இவ்வுலகத்தில் பழிப்பை யடைந்து இறந்தபின் பைசாசங்களாகப் பிறப்பர்; அதனால் அவர் பூதராவர். இளமைப் பருவமே எத் தொழிலையும் ஊக்கத்தோடு செய்தற்கும், அத் தொழிலின் மூலம் பொருளைச் சம்பாதித்தற்கும் ஏற்ற காலமாம்; ஆதலின், அப் பருவத்தில் விரைந்து பொருளைத் தேடிக்கொண்டால் அது, தொழில் செய்ய முடியாது தளர்ந்து வயோதிக மடைந்த காலத்தில் உதவியா யிருக்கும்; இதுபற்றியே ஆன்றோர் "முப்பது வயதிற்குள், கல்வி, செல்வம், சந்ததி ஆகிய முப்பொருள்களில் ஒரு பொருளைத் தேடிக்கொள்ள வேண்டும்" என்று கூறியிருக்கின்றனர். ஆகவே, அறிவுடையார் இளமையிலேயே பொருளைத் தேடி வைத்துக்கொள்வர்; அறிவில்லாதவர்கள், 'நாளைக்கிருப்பதை எவரறிந்தவர்? ஆதலின், கையிற் கிடைக்கும்

பொருளை அப்போதைக் கப்போதே செலவு செய்து வேண்டிய வற்றை யெல்லாம் அனுபவித்துவிடுதலே நாம் உலகிற் பிறந்ததற் கேற்பட்ட பயன்' என்று மூடஞானம் பேசிக்கொண்டு இளமையில் தேடும் பொருள்களை யெல்லாம் வீண்செலவு செய்துவிட்டு விருத் தாப்பியம் வந்தவுடன், உண்ணும் உணவிற்கும், உடுத்தும் ஆடைக் கும் வழியின்றி விழித்துக்கொண்டிருப்பர்; ஆதலின், இவர்கள் முழுமூடர்களே யாவர்கள். சிலர், தங்கள் பெரியோர்கள் தேடி வைத்த பொருள் அதிகமா யிருப்பினும் அவற்றைப் போற்றி வாழா மல் இளம்பருவத்திலேயே இடம்பவழிகளிற் பிரவேசித்துச் செலவு செய்து அழித்துவிட்டு முதுமைப் பருவம் வந்தவுடன் கையிலொ ன்று மில்லாமற் கஷ்டப்படுவார்கள்; அப்படிக் கஷ்டப்பட்டாலும் 'நாம் முன்னே உயர்ந்த பதவியிலிருந்தபடியால் இப்பொழுது ஏதே னு மொரு தொழிலைச் செய்தால் மிக்க இழிவுண்டாகும்' என்று ஜீவனத்திற்கான ஒரு தொழிலையும் செய்யாம லிருந்துகொண்டு, தங்களிடம் எதிர்ப்பட்டவர்க ளிடத்திலெல்லாம், "நாங்கள் முன்னே மிக்க செல்வமுடையவர்களாய் அப்படி யிருந்தோம், இப்படி யிருந் தோம்" என்று வீண் பெருமையே பேசிக் கேவலமான நிலைமை யுடனே காலத்தைக் கழிப்பர்; ஆதலின், இவர்கள் அறிவற்ற மிருக மாகிய எருதையே நிகர்ப்பார்கள். இன்னும் சிலர், இளமையில் தேகக் கட்டோடிருக்கும்போது சரியான வழியில் நடந்து அதனைக் காப் பாற்றிக்கொள்ளாமல் துர்க்கிருத்தியங்களிற் பிரவேசித்து அழகு குன்றி அதி சீக்கிரத்தில் கொடுநோய்க்குட்பட்டுக் கூராங்குபோல் உட்கார்ந்துகொள்வர்; அப்படி யிருந்தாலும் இவர்கள் அவ் வியாதி நீங்கி உடம்பில் வலிமை யுண்டாகும்படியான முயற்சிகளைச் செய்ய மாட்டார்கள்; அவ்வாறு செய்தால் தாங்கள் முன்னிருந்த உயர்ந்த நிலைமைக்குப் பங்கம் வருமென்று கருதி ஒன்றுஞ் செய்யாமல் அப் பரிதாபமான நிலைமையிலேயே இருந்துகொண்டு எதிர்ப்பட்ட

வர்களிடத்திலெல்லாம், "நான் இளமையில் மன்மதனைப்போல் அழகு பெற்றிருந்தேன்" என்று பழங்கதை கூறித் தம்மைப் பெருமைப் படுத்திக்கொண் டிருப்பர்; இவர்களும் அறிவற்ற மிருகங்களுக்கு நிகராவ ராதலின் இரண்டுகால் எருதே யாவர்.

, தேவரே, பூதரே, ஆதரே என்பவற்றிலுள்ள எகாரங்கள் தேற்றப் பொருளனவாம்; பிரிநிலைப் பொருளன வெனினும் அமையும். செய்தல் - உண்டாக்குதல்; அஃதிங்கே தேடுதற் பொருளில் வந்தது. யாமே - என்பதிலுள்ள எகாரம் பிரிநிலைப் பொருளது. ஈற்றிற் கூறியவர் இரண்டு கால்களையுடைய மனிதரா யிருப்பினும் மாட்டின் தன்மை அவர்கள்பால் அமைந்திருத்தலின் 'இருகால் எருது' எனப்பட்டார்.

### மனிதன் இன்னவை செய்தால் பிறப்பெடுக்க மாட்டான் என்பது.

21. கள்ளான்சூ தென்றுங் கழுமான் கரியாரை
நள்ளா னுயிரிரங்க நாவாடான்—நள்ளானு [னுங்
யூன்மறுத்துக் கொள்ளானே லூனுடம் பெஞ்ஞான்
தான்மறுத்துக் கொள்ளான் றளர்ந்து.

(ப - ரை) (ஒரு மனிதன்) கள்ளான் - (பிறர் பொருளைக்) களவு செய்யாதவனும், என்றும் - எக்காலத்தும், சூது - சூதாட்டத்தில், கழுமான் - கலக்காதவனும், கரியாரை - கள்வரோடு, நள்ளான் - சிநேகங் கொள்ளாதவனும், உயிர் - பிற மனிதர்கள், இரங்க - பயந்து வருந்தும்படி, நா ஆடான் - நாவினால் அதட்டிப் பேசாதவனும், ஊன்-(பிற வுயிர்களின்) தசையை, நள்ளான் ஆய் - விரும்பாதவனாய், மறுத்து-(அதனை யுண்ணுந் தொழிலைத்) தடுத்து, கொள்ளானேல் - அதனை உட்கொள்ளா திருப்பானாயின், தான் - அவன்றான், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், ஊன் உடம்பு - மாமிசத்

தோடு கூடிய இத் தேகத்தை, மறுத்து - மீட்டும், தளர்ந்து - (பிற வித் துன்பத்தால்) தளர்ச்சி யடைந்து, கொள்ளான் - அடையமாட் டான்.

(க - ரை) ஒருவன் பிறர் பொருளைத் திருடாமலும், சூதாட் டத்திற் சேராமலும், கள்ளத்தனமுடைய கீழ்மக்களோடு சிநேகஞ் செய்யாமலும், பிற மனிதர் வருந்தும்படி கடின மொழிகளைப் பேசாம லும், புலா லுண்ணாமலு மிருப்பானாயின் அவன் மீண்டும் பிறவி யெடுக்கமாட்டான் என்பதாம்.

(வி-ரை) திருட்டுப் பலர் பொருள்களை அபகரித்து அவர்களை மிக வருந்தச் செய்யும் கொடுந் தொழிலாம். சூது, ஒருவனுடைய கைப்பொருளை யிழக்கச் செய்து மேலும் சூதாடுதற்குப் பொரு ளில் லாமற் போகவே அதன் பொருட்டு அவனை மேற்கூறிய திருட்டுத் தொழிலிற் புகுத்தத் தக்கதாம். கள்வர் மேற்கூறிய சோரமாகிய கொடுந் தொழிலையே எப்பொழுதும் செய்துகொண் டிருக்கக் கூடியவர்களாதலின், அவர்களோடு ஒருவன் சிநேகஞ் செய்தால் அவனும் அம் மகா பாதகத் தொழிலைப் பழகிக்கொள்வான். பிறர் மனந் திடுக்கிடும்படி பேசுதல் அவர் மிகவும் வருந்துதற் கேதுவாத லின், அது கொலையை நிகர்த்த பாதகச் செயலே யாகும். பிற வுயி ரைக் கொன்று அதன் தசையைத் தின்னுதல் எல்லாப் பாதகங் களினு மேற்பட்ட பாவச் செயலாம். ஆதலின், இவற்றைச் செய்ப வன், இவ் வுலகத்திலும் பல துன்பங்களுக்காளாகி யிறந்த பின்னரும் அநேக தாழ்ந்த பிறவிகளை யெடுத்தெடுத்துத் தீக் கதிகளிலேயே போய்ச் சேருவான்; இவற்றைவிட் டொழிப்பவன், இம்மையிலும் சீர்த்தி கீர்த்தியுடனிருந்து நல்ல தவங்களைச் செய்து பிறப்பு நீங்கி முத்தி யடைவான். இவற்றை ஒருவன் நீக்கிய மாத்திரத்தில் அவ னிடத்தில் நல்லொழுக்கங்கள் சேரும்; அவற்றால் அவன் நல்ல தான தருமங்களைச் செய்து உலக நிலையாமையை யுணர்ந்து தவத்தைச்

செய்ய முயலுவான்; அத் தவம் அவனுடைய பிறப்பை யொழித்து அவனை முத்தியிற் சேர்த்துவிடும். ஆகவே, மேற்கூறிய செயல்கள் பிறவிக்கு வித்தும், அவற்றை நீக்குதல் முத்திக்கு வித்துமாம் என்றுணர்க.

கள்ளான், கழுமான், நள்ளான், நாவாடான் என்பன முற்றெச்சங்கள். கழுமுதல்-கலத்தல்; அதாவது சேரல்; அஃதிங்கு செய்தற் பொருளில் வந்தது; கரியார்-கருமையை யுடையவர்; அதாவது, மனவிருள் (அஞ்ஞானம்) அதிகரித்திருப்பவர்; திருடர், மனத்தில் நல்லறிவாகிய தெளிவின்றி அஞ்ஞான விருளே மிகுந்திருப்பவ ராதலின், அவருக் கிப்பெயர் கூறப்பட்டது. நா ஆடல் - நா அசைதல்; நா அசைவே பேச்சாதலின், அதற் கிப்பெயர் கூறலாயிற்று. உயிர் - ஆகுபெயராய் அதனையுடைய மனிதரை யுணர்த்திற்று; உயிர் என்பதில் மனிதரையும், பிற பிராணிகளையுஞ் சேர்த்து மனிதரும், மற்ற பிராணிகளும் அஞ்சும்படி நாவாடான் எனப் பொரு ளுரைப்பினும் அமையும்; ஆடு, மாடு முதலிய மிருகங்களும், பக்ஷி முதலியவைகளும் அஞ்சும்படி அவற்றைக் கோரமாக அதட்டுதலும் பாதகமாம். "ஊன் நள்ளானாய் மறுத்துக்கொள்ளானேல்" என்பதற்கு, "ஊனை விரும்பாதவனாய் அதனை உண்ணும் பிறரையும் தடுத்துத் தானும் உட்கொள்ளானேல்" எனப் பொரு ளுரைப்பினும் அமையும்; பிறரைத் தடுத்தலும், தான் உண்ணாதிருத்தலும் இரண்டு செய்கைகளெனினும், இவ் விரண்டும் கொலையின்பாற் பட்ட ஒன்றே யாகி மற்ற நான்கு விஷயங்களோடு சேர்ந்து ஐந்தே யாகு மென்க.

இளமை யுடையாநும், அறிவினாலும் நூலுணர்ச்சியாலும்
பெரியோராவ ரென்பதும், அறிவுடையானுக்கு
இயற்கையிலேயே அறிவுண்டா மென்பதும்.

22. பூவாது காய்க்கு மரமுள நன்றறிவார்
மூவாது மூத்தவர் நூல்வல்லார்—தாவா

விதையாமை நாறுவ வித்துள மேதைக்
குரையாமை செல்லு முணர்வு.

(ப - ரை) பூவாது - பூவாமலே, காய்க்கும் - காய்க்கின்ற, மரம் உள - மரங்களும் உண்டு; (இவைபோல), நன்று அறிவார் - நன்மையை உணர்பவர்கள், (வயதால் மூவாதவர்களாயினும் அங்ஙனம்), மூவாது - இயற்கையில் மூவாமல், மூத்தவர்-(அறிவுடைத்தா யிருத்தலென்னும் செயற்கையினாலே) முதியோ ராவர்; நூல் வல்லார் - நூலில் வல்லவர்கள் (அதாவது அறிவு நூல்களைக் கற்றுணர்ந்தவர்கள்), மூவாது மூத்தவர் - அங்ஙனமே இயற்கையால் மூவாமல் செயற்கையால் மூத்தவ ராவார்கள்; விதையாமை-(நிலத்தை உழுது அதில் மனிதரால்) விதைக்கப்படாமல், நாறுவ - முளைப்பனவாகிய, தாவா - கெடாத, வித்து உள - விதையும் உண்டு; (இதேபோல), மேதைக்கு - மேலோனாகிய அறிவுடையவனுக்கு, உரையாமை - பிறர் எடுத்துக் கூறாமலே, உணர்வு - அறிவானது, செல்லும் - தோன்றி நடக்கும்.

(க - ரை) பூவாமற் காய்க்கும் மரங்களைப்போல இயற்கையில் நன்மையை உணர்ந்தவர்களும், நூல்களைக் கற்றுணர்ந்த வல்லவர்களும் வயதால் மூவாது அறிவால் முதிர்ந்தவர்க ளாவார்கள்; மனிதரால் நிலத்தில் உழுது விதைக்கப்படாமலே முளைக்கிற வித்தைப் போல உயர்ந்தோர், பிறர் எடுத்துக் கூறாமலே அறிவை விருத்தி செய்துகொள்வர் என்பதாம்.

(வி - ரை) உலகத்தில் மரங்கள் முதலில் மலரைத் தோற்றுவித்துப் பின்னர் காய்ப்பது வழக்கம்; அங்ஙன மிருப்பினும், அவற்றுட் சில மரங்கள் பூவாமலே காய்ப்பதுண்டு; அவை, அத்தி, ஆல், அரசு முதலியனவைகளாம்; இங்ஙனம் அத்தி முதலியன பூவாவென்பதை,

"அத்தி மலரும் அருங்காக்கை வெண்ணிறமும்
கத்துபுனன் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
கானூர் தெரியற் கடவுளருங் காண்பரோ
மானூர் விழியார் மனம்."

என்னும் செய்யுளா னுணரலாம். இவைபோலவே மனிதர், வயது அதிகமாந் தன்மையினாலேயே மூப்பை அடைவது வழக்கம்; அங்ஙன மிருப்பினும் அவர்களுட் சிலர் நன்மைகளை அறியுந் தன்மையினாலும், அறிவு நூல்களைக் கற்றுணர்ந்த தன்மையினாலும் இளமைப் பருவ முடையவர்களா யிருப்பினும் முதியோர்களைப் போலவே கௌரவ முடையவர்க ளாய்விடுவார்கள்; எங்ஙனமெனில், நன்மை மார்க்கங்களை யுணர்ந்தவர்க ளிடத்தில் தாமே பெருந் தன்மையான குணங்கள் உண்டாய்விடும்; நூலுணர்ச்சி யுடையவர்க ளிடத்தும் அங்ஙனமே ஏற்படும்; ஆதலின், இவர்களிடத்தில், வயது செல்லச் செல்லச் சிறிது சிறிதாக வந்தடையும் முதியோர் தன்மையானது இளமையிலேயே வந்தடைகின்றது. உலகத்தில் வயது முதிர்ந்தவர்கள் உலக அனுபவங் கண்டு, நன்மை தீமைகளைப் பகுத்துணர்ந்து, அடக்கம் பொறுமை முதலிய சாந்த குணங்களோடு பொருந்தியிருப்பர்; இதனானே இவர்கட்கு இயற்கையில் பெருந்தன்மையுண்டு; "ஆயிர மிருந்தாலும் பெரியவர் பெரியவர்தாம்" என்று பலராலுங் கொண்டாடப்படுவர்; இளம்பருவ முடையவர்கள் அந்த வயதின் சுபாவத்தால் சற்று பொறுமை யற்றவராயும், உலக அனுபவ மில்லாதவராயுமே காணப்படுவார்கள்; இதனானே, "எவ்வள விருந்தாலும் சிறுபிள்ளை சிறுபிள்ளைதானே" என்று பலராலும் சிறிது தாழ்த்திக் கூறவும்படுவார்கள். ,ஆதலின், முதியோரைப் பெருந் தன்மை யுடையவராகவும், இளைஞரைச் சிறுதன்மை யுடையவராகவும் கூறுதல் உலக வியற்கை. எனினும், சில இளைஞரும் நன்மை யுணர்ச்சி நூலுணர்ச்சி முதலியவற்றால் அப்பெரியோர் தன்மையை அடைதலும் கூடும்; அப்பொழுது இவரே சிறந்தவ ராவார்;

அப் பெரியோருக்கும் இக் குணங்கள் அனுபவத்தால் வந்தேற் படுவதனாலேயே கௌரவ முண்டாகின்றது. இக் குணங்கள் இல் லாதவர்கள் கௌரவ முடையவராக உலகத்தவரால் கொண்டா டப்படமாட்டார்கள். ஆகவே, முதிய தன்மை அறிவினாலேயே ஏற் படுமென்க; அறிவற்றவர் இளைஞராயினும் முதியோராயினும் பெரி யோ ராகமாட்டார். இதுபற்றியே ஆசிரியர், 'நன்றறிவார் நூல் வல்லார் மூவாது மூத்தவர்' என்றார். வயது சென்று பெருந் தன் மையை அடையும் கிரம மின்றியே சிலர் இளமையில் அறிவால் பெருந் தன்மையை அடைந்துவிடுகின்ற தன்மையினாலே, பூத்துக் காய்க்குங் கிரம மின்றியே பூவாமற் காய்க்கும் மரங்கள் இவர்க்கு உவமை கூறப்பட்டன.

சில வித்துக்களுக்கு முளைக்குந் தன்மை சரியாக அமைந்திருத் தலினாலே அவைகள் மனிதரால் நிலத்தில் உழுது விதைக்கப்படா விடினும் தாமே தரையிற் கிடந்து மழை பெய்த காலத்தில் முளைக் கும்; இவைபோலப் பிறப்பிலேயே பெருந்தன்மை அமைந்தவர் கட்குப் பிறர் எடுத்துக் கூறாமலே அறிவுண்டாய் வளரும். விதை யாமல் முளைக்கும் வித்துக்கள், காடுகளில் மரம், செடி முத லியவைகளிலிருந்து தாமே உதிர்ந்து நிலத்திற் கிடப்பவை. முளைக்கும் தன்மை சரியாக அமையாத சில வித்துக்கள், மண்ணை உழுது செம்மைப் படுத்திப் பாத்தி கட்டி அதில் விதைத்தாலும் முளைக்கமாட்டா; இவைபோலப் பிறப்பில் பெருந் தன்மை அமை யாதவருக்குப் பிறர் எவ்வளவு நீதிகளை எடுத்துக் கூறினும் அறி வுண்டாக மாட்டாது.

இச் செய்யுள் எடுத்துக்காட்டுவமை யணியாக அமைந்தது; எடுத்துக்காட்டாவது: உபமானத்தையும் உபமேயத்தையும் தனி வாக்கியங்களாக நிறுத்தி இடையில் உவமவுருபு சேர்க்காமற் கூறுவது. 'பூவாது காய்க்கு மரமுள, விதையாமை நாறுவ வித்

துள' என்பன உபமானங்கள்; மற்றைய உபமேயங்கள். மரமுள வித்துள என்பவற்றில் உயர்வு சிறப்பும்மைகள் தொக்கன. மூவாது, மூத்தவர் என்பவற்றில் மூ - பகுதி. விதைக்காமல் முளைக்கும் வித்து உயர்ந்த தென்பது தோன்ற 'தாவா' என்னும் அடைமொழி சேர்த்துக் கூறப்பட்டது. விதையாமை, உரையாமை என்பன ஸீயீற்று வினையெச்சங்கள். மேதை - உயர்வு; அது பண்பாகு பெயராய் அதனை யுடையானை யுணர்த்திற்று. செல்லுதல்-நடத்தல்; அஃதிங்கே வளர்தலின்மே னின்றது. 'மூவாது மூத்தவர்' என்பது தீபகமாக இரண்டிடத்துங் கூட்டப்பட்டது.

முதியோரும் அறிவின்மையானும் நூலுணர்ச்சி யின்மை யானும் சிறியோராவ ரேன்பதும், மூடனுக்குப் பிறர் உரைத்தாலும் அறிவுண்டாகா தென்பதும்.

23. பூத்தாலுங் காயா மரமுள நன்றறியார்
மூத்தாலு மூவார்நூ றேற்றாதார்—பாத்திப்
புதைத்தாலு நாறாத வித்துள பேதைக்
குரைத்தாலுஞ் செல்லா துணர்வு.

(ப-ரை) பூத்தாலும் - மலர்களைத் தோற்றுவித்தாலும், காயா-காய்களைத் தோற்றுவிக்காத (அதாவது: காய்க்காத), மரமும் உள-மரங்களும் உண்டு; (இவைபோல), நன்று அறியார் - நன்மையை அறியாதவர், மூத்தாலும் - வயதால் முதிர்ந்தாலும், மூவார் - (அறிவொழுக்கங்களா னிறைந்த) முதியோ ரல்லாதவரே யாவர்; நூல் - அறிவு நூல்களில், தேற்றாதார் - (தங்கள் மனதைத்) தெளியச் செய்யாதவர்கள், (அதாவது: அறிவு நூல்களைக் கற்றுத் தேறாதவர்கள்), மூத்தாலும் மூவார்-வயதால் முதிர்ந்தவர்களே யாயினும் அறிவால் முதிராதவரே யாவர்; பாத்தி - (நிலத்தை உழுது மண்ணிற்

கட்டிய) பாத்தியில், புதைத்தாலும்-விதைத்து மூடினாலும், நாறாத-முளைக்காத, வித்து உள-விதையும் உண்டு, (இதுபோல), பேதைக்கு-பிறப்பிலேயே அறிவமையாதவனுக்கு, உரைத்தாலும் - (பிறர் நீதிகளை எடுத்துச்) கூறினாலும், உணர்வு-அறிவானது, செல்லாது - (அவனிடத்தே) தோன்றி நடை பெறாது, (அதாவது: அறிவு தோன்றி வளராது).

(க - ரை) பூத்தாலும் காய்க்காத மரங்களும் உண்டு; அவற்றைப் போல நன்மை யறியாதார் வயதில் முதிர்ந்தாலும் அறிவில் முதிராதவ ராவர்; நூற்களைப் படித்துணராதவர்களும் அங்ஙனமே யாவர். பாத்தி கட்டி மண்ணிற் புதைத்தாலும் முளைக்காத வித்துக்களும் உண்டு; அவைபோல, அறிவில்லாதவனுக்குப் புத்தி கூறினாலும் அஃதவன் மனத்திற் புகாது என்பதாம்.

(வி - ரை) பூத்தாலும் காய்க்காத மரங்கள் பாதிரி முதலியவை. நன்று - நற்செய்கை; அதனை யறியாதவர்கள் விருத்தாப்பியத்தை யடைந்தபோதிலும் பேதையர்களாகவே அறியாப் பருவமுள்ள சிறு பிள்ளைகளைப் போன்றே யிருப்பார்கள். நூலுணர்ச்சியில்லாதவர்களுக்கும் விசேஷ ஞானம் ஏற்படா தாதலின், அவர்களும் பகுத்தறி வற்றவர்களாகவே விளங்குவர். முளைக்கும் தன்மை கெட்டுப்போன வித்துக்களை மண்ணிற் புதைத்துத் தண்ணீர் வார்த்தாலும் முளைக்க மாட்டா. இயற்கையறிவு உண்டாகும் தன்மை பிறப்பிலேயே அமைந்தவனுக்கு அறிவு புகட்டினால் அவ்வறிவு எளிதில் விருத்தி யடையும். இயற்கை யறிவின் முளை இல்லாத பேதைக்கு எவ்வளவு அறிவுரைத்தாலும் அஃதவன் மனத்தி லேறாது. ஆகவே, நன்றறியாதவர்களும், நூலுணர்ச்சி யில்லாதவர்களும் பெரியோராகா ரென்பதும், பேதைக்கு அறிவுண்டாகா தென்பதும், அவனுக்கறிவுரைத்தலாற் பயனில்லை யென்பதும் இதனாற் பெறப்படும். இச் செய்யுளும் எடுத்துக் காட்டாகவும், முன் செய்யுளுக்கு எதிர்

மறையாகவும் அமைந்தது. மரம் வித்து என்பன சாதியொருமைகள். 'மூத்தாலு மூவார்' என்பது தீபகமாக இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது.

உலகவின்பங் கருதி இளமையிற் றுறவாதார்
உயர்நிலை காணு ரேன்பது.

24. வடிவிளமை வாய்த்த வனப்பு வணங்காக்
குடிகுலமென் றைந்துங் குறித்து — முடியா
துளங்கா நிலைகாணுர் தொக்கீர் பசுவால்
இளங்காற் றுறவா தவர்.

(ப - ரை) வடிவு என்று - உருவமும், இளமை என்று - இளமையும், வாய்த்த - பொருந்திய, வனப்பு என்று - அழகும், வணங்கா - குறைவுபடாத, குடி என்று-உயர் குடியும், குலம் என்று-உயர்ந்த வமிசமும், (ஆகிய) ஐந்தும்-ஐந்தையும், குறித்து-எண்ணி, (அதாவது, இவற்றை அனுபவிக்கக் கருதி), இளங்கால் - இளமைப் பருவத்திலேயே, துறவாதவர்-அவற்றை நீங்கித் தவஞ் செய்யாதவர், தொக்கு - கூடி, ஈர் - பாரத்தை இழுக்கின்ற, பசு - பசுவாவார்கள், (அதாவது, அப் பசுவை நிகர்த்துக் குடும்ப பாரத்தை இழுத்துக் கொண்டு திரிபவ ராவர்; அங்ஙனம் இழுத்துக்கொண்டு திரியினும், மேற்கூறிய வடிவிளமை முதலியவைக ளெல்லாம்), முடியா - (அனுபவித்தும்) முடியமாட்டா, (அதாவது அவை மேலும் மேலும் தங்களிடத்தில் விருப்பத்தை அதிகரிக்கச் செய்துகொண்டே யிருக்கும்; ஆதலின், அதனுல் அவர்கள்), துளங்கா-கெடாத, நிலை-முத்தி நிலையை, காணுர்-காணவு மாட்டார்கள்.

(க - ரை) வடிவிளமை முதலியவற்றை அனுபவிக்கக் கருதி இளம்பருவத்திலேயே துறவடையா திருப்பவர்கள், பாரத்தை யிழுக்கின்ற பசுவை நிகர்த்துக் குடும்பபாரத்தை யிழுத்துக்கொண்டே

திரிந்து அவ் வனுபவங்களும் முடியப்பெறாமல் முத்திப் பேற்றினை யும் இழப்பர் என்பதாம்.

(வி - ரை) முத்தி யடைய விரும்புவோர் இளம்பருவத்தி லேயே உலக விருப்பத்தைத் துறந்து தவஞ் செய்தல் வேண்டும். அங்ஙன மின்றி வடிவு, இளமை முதலியவற்றால் ஏற்படும் இன்பங் களை யெல்லாம் அனுபவித்துப் பின்னர் துறப்போமென நினைப்பா ராயின், அவ் வின்பங்கள் முடிவு பெறாமல் 'இன்னும் கொஞ்சம் அனு பவிப்போம், இன்னுங் கொஞ்சம் அனுபவிப்போம்' என்ற எண்ணத் தை அவர்கட் குண்டாக்கி அவர்களின் மனத்தை யிழுத்துக்கொண் டே செல்லுமாதலின் அவர்கள் ஆயுட்கால மெல்லாம் அவற்றிலே யே சிக்குண்டு பாரம் இழுக்கும் பசுவைப்போலக் குடும்ப பாரத்தை இழுத்துக்கொண்டே திரிந்து மரணமடைவர்; இதனால் அவர்கட்கு முத்தி கைகூடாது. வடிவு-அவயவக் குறைவற்ற உருவம். வனப்பு - தேகத்தி லுண்டாம் அழகு. 'வணங்காக் குடிகுலம்' என்பதற்குப் பிறரை வணங்காத உயர் குடியும் குலமு மெனப் பொரு ளுரைத்தலு மொன்று. அத்தகைய குடிகுல மாவன, இராஜ குடும்பம் குலம் அல் லது பிரபு குடும்பம் குலம் எனப்படும். என்று என்னும் இடைச் சொல் எண்ணி நிற்றற் பொருளதாதலின், ஐந்திடத்துங் கூட்டப் பட்டது. வடிவு முதலிய ஐந்திலும் எண்ணும்மைகள் தொக்கன. என்று-எண்ணி நிற்றற் பொருளதென்பதை, "வினைபெயர் குறிப் பிசை யெண்பண் பாறினும், எனவெனு மொழிவரு மென்று மற்றே." என்னும் (நன்-இடை-டு-) சூத்திரத்தா லுணர்க. ஆல்- அசை. கால்-ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு. வடிவு முதலிய ஐந்துங் குறித்தல் ஒன்று, அவை முடியா வென்பதொன்று, துளங் கா நிலை காணாததொன்று, தொக்கீர் பசுவாத லொன்று, இளங்காற் றுறவாததொன்று, ஆக ஐந்து விஷயங்கள் அமைந்தன வெனக் கொள்க.

## தீய மாதின் தொழில்கள்.

25. கள்ளுண்டல் காணிற் கணவற் பிரிந்துறைதல்
வெள்கில ளாய்ப்பிற ரிற்சேற - லுள்ளிப்
பிறர்கரும மாராய்தல் தீப்பெண் கிளைமைத்
திறமதுதீப் பெண்ணின் றொழில்.

(ப-ரை) காணில் - (பெண்கள் குணத்தைப்பற்றி) ஆராய்ந்து பார்க்குமிடத்து, கள் உண்டல்-மதுபானம் செய்தலும், கணவன் பிரிந்து - (சேர்ந்து வாழாமல்) கணவனை விட்டு நீங்கி, உறைதல்-வேற்றிடத்தில் தங்குதலும், வெள்கிலளாய் - வெட்கத்தை அடையாதவளாய், பிறர் இல் - அன்னியர் வீட்டில், சேறல் - செல்லுதலும், பிறர் கருமம் - அன்னியருடைய காரியங்களை, உள்ளி - நினைத்து, ஆராய்தல்-ஆராய்ந்து பார்த்தலும், தீப்பெண் - கெட்ட பெண்ணினுடைய, கிளைமைத் திறமது-சிநேக உறுதிப்பாடும் (அதாவது, கெட்ட பெண்களோடு உறுதியான சிநேகஞ் செய்தலும்), தீப் பெண்ணின்-கெட்ட மாதின்,தொழில் - செய்கைகளாம்.

(க-ரை) மதுபானஞ் செய்தலும், கணவனைப் பிரிந்து வாழ்தலும், அன்னியர் வீட்டிற்கு நாணமின்றிச் செல்லலும், பிறர் செய்கையை ஆராய்தலும், கெட்ட மாதர்களோடு சிநேகஞ் செய்தலும் தீய பெண்களின் செய்கைகளாம் என்பதாம்.

(வி - ரை) கள்ளுண்டல் பஞ்சமாபாதகத் தொழில்களில் முதன்மை பெற்றதும், மற்ற பாதகங்களை யெல்லாம் உண்டாக்கத் தக்கதுமாதலின் அது மாதர்க்குக்கொடிதாம். கணவனோடு வீண் சண்டையிட்டுக்கொண்டு அவனைப் பிரிந்து வேற்றிடத்தில் தங்குதல் பதிவிரதைக் கடுத்த குணமன்றாதலின், அது முன்னையதினும் தீதாம். அன்னியர் வீட்டுக்கேகுவதால் பலர் சகவாசமும் ஏற்பட்டுக் கற்புக்கேடு நேரிடுமாதலின் அதுவும் தீமை யுடையதாம். பிறர் செய்கையை

ஆராய்வதால் பலர் விரோதமும் தீய எண்ணங்களு முண்டாமாதலின் அதுவும் மாதர்க்கிழிவான குணமாம். தீய பெண்களின் சிநேகம் தம்மையும் அத்தீமைக் குள்ளாக்கிவிடு மாதலின் இதுவும் பெண்கட் கேற்றதன்றாம். இக் குணங்களையுடைய பெண்கள், மிகவும் இழிந்தவர்களாய்ப் பலராலும் தூற்றப்பட்டு இம்மையிலும் மறுமையிலும் இடருறுவார்கள். உண்டல், உறைதல், சேறல், ஆராய்தல் என்பன தொழிற்பெயர்கள். வெள்கு - முதனிலைத் தொழிற்பெயர். கணவற் பிரிந்து - இரண்டாம் வேற்றுமை யுருபு தொக்கதொகை. சேறல் - செல்லல் என்பதன் திரிபு. கிளைமை - தொழிற்பண்புப்பெயர். திறமது என்பதில் அது - சாரியை.

## நீக்கத்தக்கனவும் கொள்ளத்தக்கனவும் இன்னவை யெனல்.

26. பெருங்குணத்தார்ச் சேர்மின் பிறன்பொருள்வெள வன்மின்
கருங்குணத்தார் கேண்மைகழிமி—னொருங்குணர்ந்து
தீச்சொல்லை காமின் வருங்காலன் திண்ணிதே
வாய்ச்சொல்லை யன்று வழக்கு.

(ப - ரை) (மானிடர்களே!) காலன் வரும் - உங்க ளுயிரைக் கொண்டு செல்ல எமன் வருவான், (ஆதலின், அங்ஙனம் நீங்கள் காலன் கையிற் சிக்கி மரணமடையு முன் நற்கதி யடைய வேண்டின்), பெரும் குணத்தார் - உயர்ந்த நற்குண முடையவர்களை, சேர்மின் - சேருங்கள்; பிறன் பொருள் - அன்னியனுடைய பொருளை, வெளவல்மின் - கவராதீர்கள்; கரும் குணத்தார்-புத்தியில் இருண்ட தன்மையை யுடையாராகிய அஞ்ஞானிகளது, கேண்மை - சிநேகத்தை, கழிமின் - நீக்கிவிடுங்கள்; ஒருங்கு உணர்ந்து - நன்மாக்கம் முழுவதையும் அறிந்து, தீச் சொல்லை-கெட்ட சொல் ஒன்றையே, காமின் - நாவில் வாராமல் காத்துக்கொள்ளுங்கள்; (இவ்வாறு செய்யின் நற்பய னடைவீர்கள்; இக் நீதியானது), திண்ணிதே - உறுதி.

யானதே, (அன்றியும் இது), வாய்ச் சொல்லே அன்று-வாய்ச்சொல் மாத்திரமே யன்று, வழக்கு-உலக வழக்காம் (அதாவது, உலகத்தில் நிச்சயமாக நடந்து வருவதாம்).

(கு - ரை) மனிதர்களே! காலன் வருவது உறுதி யாதலால், நீங்கள் மரணமடைவதற்குள் பெருங் குணத்தாரைச் சேருங்கள், பிறன் பொருளை அபகரியா திருங்கள், அஞ்ஞானிகளுடைய சிநேகத்தை விட்டுவிடுங்கள், நன்மார்க்கத்தை உணர்ந்து தீச்சொல் நாவில் வாராமல் காத்துக்கொள்ளுங்கள்; இவ்வாறு செய்தால் நற்கதி யடைவீர்கள்; இந்நீதி உறுதியானது; வாய்ச்சொல் மாத்திரமன்று; உலக வழக்கில் நடை பெறுவது என்பதாம்.

(வி - ரை) பெருங்குணத்தர் - நல்ல குணங்களை யுடையவர்கள்; அவர்களோடு சேர்ந்தால் அந்த நல்ல குணங்களே உண்டாகும். பிறன் பொருள் வௌவுதல் பஞ்சமா பாதகங்களுள் ஒன்றாதலால். அதனால் தீக்கதி யுண்டாகும்; ஆதலின், அதனை நீக்கவேண்டும். அஞ்ஞானம் இருள்மய மாதலின் அது கருங்குண மெனப்பட்டது. இக் குணத்தாரோடு சேரின் அஞ்ஞானமே மிகும்; ஆதலின், இதனையும் நீக்குதல் வேண்டும். நன்மை முழுவதையும் உணர்வதால் இம்மை மறுமை இரண்டிடத்தும் இன்ப முண்டாகும். தீச் சொற்களை நீக்காவிட்டால் இகத்தில் பலர் நிந்தனை யேற்படும்; பரத்திலும் சுக மின்றாம். இதுபற்றியே திருக்குற ளாசிரியரும்,

"யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

என்றார். இந் நற்குணங்களை யெல்லாம் விரைந்து செய்துவரின் நற்கதிக் கேது வுண்டாகும்; இல்லையெனில், திடுமென மரணங் குறுகத் தீக்கதி சித்திக்கும். ஆதலால், ஆசிரியர், 'வருங்காலன் நிண்ணிதே, வாய்ச்சொல்லே யன்று வழக்கு' என்று கூறியதன்.

மூலம் 'மரணம் வருமுன் இவற்றை விரைந்து செய்மின்' என்று குறித்தார். மின் - பன்மை முன்னிலை விகுதி. வெளவல் - என்பதில், வெளவு-பகுதி, அல்-எதிர்மறை வியங்கோள் விகுதி; இவ் விரண்டும் ஓர் பகுதியாய் மின் விகுதியை ஏற்றன. சொல்லே-என்பதில் ஏகாரம் பிரிநிலை. 'திண்ணிதே' என்பது இங்கு உளதென்னும் பொருளில் நின்றது; இதிலுள்ள ஏகாரம் தேற்றம். காலன்-ஜீவன்களின் ஆயுட்காலத்திற் குரியவன். பெருங்குணத்தார்ச் சேர்தல் ஒன்று, பிறன் பொருள் வெளவாதிருத்தல் ஒன்று, கருங்குணத்தார் கேண்மை கழிதலொன்று, ஒருங்குணர்தல் ஒன்று, தீச்சொல் காத்தல் ஒன்று, ஆக ஐந்து.

## ஒவ்வொருவர்க் கொவ்வொன் றெளிதெனல்.

27. வான்குருவிக் கூடரக்கு வாலுலண்டு கோறருதல்
தேன்புரிந்தி யார்க்குஞ் செயலாகா—தாம்புரீஇ
வல்லவர் வாய்ப்பன வென்னுமொரோ ரோவொருவர்க்
கொல்காதோ ரொன்று படும்.

(ப - ரை) ஒரோ வொருவர்க்கு - ஒவ்வொருவர்க்கு, ஒல்காது-குறைவுபடாது, ஓரொன்று - ஒவ்வொரு காரியம், படும் - (உலகத்தில்)எளிதில் முடியும்;(ஆனதுபற்றி), வான்குருவிக்கூடு- தூக்கணங்குருவியினாற் கட்டப்படும் கூடும், அரக்கு-(ஒருவகை எறும்புகளாற் செய்யப்படும்) செம்மெழுகும், வால் - சுத்தமான, உலண்டு - கீடமென்னும் ஒருவகை வண்டு, தருதல் - மரத்தைத் துளைத்துச் செய்யப்படுவதாகிய ஒருவகைக் கூடும், கோல் - கோற்புழுவால், தருதல்-செய்யப்படுவதாகிய கோற் கூடும், தேன் - ஈக்களால் செய்யப்படும் தேன் கூண்டும், புரிந்து - விரும்பி, யார்க்கும் - எவர்க்கும், செயல் ஆகா - செய்தல் முடியாதனவாம்; (இங்ஙனம் இவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தொழிலில் தாங்களே வல்லமை பெற்றவைகளா

யிருக்கின்றன; ஆதலின்), வல்லவர்-பற்பல தொழில்களில் வல்லவர்களா யிருப்பவர்கள், தாம் புரீஇ - தாம் விரும்பி, (எல்லாத் தொழில்களையுமே), வாய்ப்பன என்னார் - எமக்கு முடியக்கூடியன என்று சொல்லமாட்டார்கள்.

(க - ரை) உலகத்தில் ஒவ்வொருவர்க் கொவ்வொன்று எளிதாகும்; வான்குருவிக்கூடு முதலியன எவர்க்கும் செய்ய வியலாதனவாம்; அவற்றைச் செய்வதில் அக் குருவி முதலிய ஒவ்வொன்றும் சிறப்புற்றிருக்கின்றன; ஆதலின், எத்தகைய தொழில் வல்லாரும் 'எம்மால் எல்லாம் முடியும்' என்று தற்பெருமை கூறமாட்டார்கள் என்பதாம்.

(வி - ரை) வான்குருவி பற்பல நார்களைக் கொண்டு விசித்திரமான கூண்டைப் பின்னுவதில் சிறந்ததாம். செம்மெழுகைச் செய்வதில் ஒருவகைப் பேரெறும்புகள் சிறந்தனவாம்; கீடமென்னும் வண்டு மரத்தைத் துளைத்துக் கூண்டு செய்வதில் சிறந்ததாம். கோற்புழு மரக்கிளையில் துளையுண்டாக்கி விநோதக் கூண்டைச் செய்வதில் வன்மை பெற்றதாம். ஈக்கள் தேன் கூண்டை அறை யறையாகக் கட்டி அவற்றில் தேனைச் சேர்த்துச் சந்ததிகளை யுண்டாக்குவதில் மிக்க அறிவுடையவைகள். இத்தகைய அற்ப பிராணிகள் செய்யும் இத் தொழில்களை மனிதருள்ளும் எவராலும் செய்தல் இயலாது. ஆதலின், உலகத்தில் எத்தகைய வல்லமை பெற்றவர்களும்' நாங்கள் எல்லாத் தொழில்களிலும் வல்லவர்கள்' என்று தற்பெருமை கூறமாட்டார்கள்; ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொன்றெளிதென்று அடங்கி யிருப்பர். அறிவிலிகளே, தற்பெருமை பேசி அவமான முறுவர். இதனால், எவரும் தற்பெருமை பேசலாகாதென்பது பெறப்படும். வான்-சிறப்பு; தூக்கணங் குருவி அறிவிற் சிறந்ததாதலின் வான்குருவி யெனப்பட்டது. உவண்டு-கீடம்; இஃதொரு

வகை மரந் துளைக்கும் வண்டு; வண்டுகளுக்கு, "சரிகமே சாகமே சஞ்சாளிசஞ் சுரும்புகீடம்" என்ற சூடாமணி நிகண்டியில், 'கீடம்' என்பது பொதுப்பெயராக வருதலானும், கோற்புழுவாகிய உலண்டும் மரந்துளைத்தற் றொழிலையுடையதாதலானும், கோற்புழுவிற்கும் உலண்டு கீடம் என்னும் பெயர்கள் இருத்தலானும், அதிலும் வண்டினத்தைச் சார்ந்த ஒருவகை யிருத்தலானும், இவ்வொற்றுமை நோக்கி, உலண்டு என்பது கோற்புழுவுக்குரிய பெயரெனினும் அதற்கு வண்டெனப் பொருள் கொள்ளப்பட்டது. அன்றியும் கோற்புழு வேறு வருதலானும் இங்ஙனம் வேறு பொருள் கூறப்பட்டது. இவ்வண்டு பெரிய தும்பி யினத்தைச் சார்ந்தது. கோல்-மரக்கிளை; இஃது இடவாகுபெயராய் அதி லிருக்கும் புழுவை யுணர்த்திற்று. இந்த இரண்டு வகைப் பிராணிகளும் மரத்தைத் துளைத்துச் செய்யப்படும் அறைகளும் துவாரங்களும் விநோதமா யிருக்கும். தருதல் என்னும் தொழிற்பெயர், அத் தொழிலாலாகும் பொருளை யுணர்த்தி நின்றது. 'தருதல்' என்பது தீபகமாய் இரண்டிடங்களினும் கூட்டப்பட்டது. புரீஇ-சொல்லிசை நிறைக்க வந்த அளபெடை.

அறத்தை விரும்புவோனுக்கும், பாவ வினைகளை
விரும்புவோனுக்கும் உரிய செய்கைகள்.

28. அறனட்டா னன்னெறிக்க ணிற்க வடங்காப்
புறனட்டான் புன்னெறிப்போ காது—புறனட்டான்
கண்டெடுத்துக் கட்களவு சூது கருத்திலுற்
பண்டெடுத்துக் காட்டும் பயின்று.

(ப - ரை) அறன் - தருமத்தை, நட்டான் - விரும்பியவன், நல் நெறிக்கண் - நல்ல மார்க்கத்தில், நிற்க - நிற்பதற்கு, அடங்கா - நீதிக்கடங்காத, புறன் - அறத்துக்குப் புறம்பாகிய காரியத்தை, நட்டான் - விரும்பியவனுக்குரிய, புல் நெறி - அற்பமான வழிகளில், போகாது - செல்ல மாட்டான்; புறன் - அறத்துக்குப் புறம்பாகிய

காரியத்தை, நட்டான்-விரும்பியவன், கள் களவு சூது-கள்ளுண்டலையும் களவு செய்தலையும் சூதாடலையும், கருத்தினால்-தன் உள்ளத்தினாலே, கண்டு - பார்த்து, எடுத்து - நல்லனவென்று எடுத்துக்கொண்டு, பயின்று - அவற்றிற் பழகி, பண்டு - அவற்றால் நேர்ந்த பழய தன்மைகளை, காட்டும் - விளக்கிக் காட்டுவான்.

(க - ரை) தருமத்தை விரும்புவோன், தான் நன்னெறியினின் றொழுகும் பொருட்டு, கெட்ட காரியத்தை விரும்புவோனுக்குரிய அற்பமான வழிகளிற் புகமாட்டான். கெட்ட காரியங்களை விரும்புவோன் கள் களவு சூது முதலியவற்றை நல்லனவென்று தன் கருத்தினா லுன்னி அவற்றிற் பழகி, அவற்றால் பண்டுள்ளார் அடைந்த தீங்குகளை யெல்லாம் எடுத்துக் காட்டுவான் என்பதாம்.

(வி - ரை) அறத்தை விரும்புவோன், எப்பொழுதும் சன்மார்க்கத்திலேயே நிற்க விரும்பிக்கொண்டிருப்பா னாதலின், அதை விட்டு, கெட்டவர்களால் விரும்பப்படும் அற்ப மார்க்கங்களில் அவனுடைய புத்தி செல்லாது. கெட்ட காரியங்களை விரும்புவோனுக்குச் சன்மார்க்கம் இன்னதென்றே தெரியாது; கெட்ட காரியங்களே நல்லனவாகப் புலப்படும். ஆதலின், அவன், பஞ்ச மாபாதகத் தொழில்களைச் சார்ந்தவைகளாகிய கள், களவு, சூது முதலியவற்றை விரும்பிச் செய்து பல துன்பங்களை யடைவான்; அதனால், முற்காலத்தில் இத் தீச் செயல்களால் துன்ப மடைந்தவர்களுடைய தன்மை இன்னதென விளங்கும். அறன், புறன் என்பவற்றி னீற்றில் மகரத்துக்கு னகரம் போலியாக வந்தது; "மகரவிறுதி யஃறிணைப் பெயரின், னகரமோ டுறழா நடப்பன வுளவே." என்பது (நன் - எழுத் - கூஎ) சூத்திரம். நிற்க - பொருட்டுப் பொருளில் வந்த வினையெச்சம். புறன்-புறம்பு; இஃது தாகுபெயராய்ப் புறம்பே நிகழும் காரியத்தை யுணர்த்திற்று. நட்டான் புன்னெறி - ஆறும் வேற்றுமைத்தொகை. பண்டு - பழமை; அஃது தாகுபெயராய் முன்

னிகழ்ந்தவற்றை யுணர்த்தி நின்றது. போகாது-சிறப்பின் வந்த இணைவழுவமைதி. காட்டும் என்பது செய்யுமென்னும் முற்று. "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற், செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே." என்ற விதி பற்றி இங்கு ஆண்பா லொருமையில் வந்தது. அறனட்டான் புன்னெறிப் போகாததொன்று, புறனட்டான் கள் விரும்புதல் ஒன்று, களவு விரும்புதல் ஒன்று, சூது விரும்பல் ஒன்று, பண்டெடுத்துக் காட்டுதல் ஒன்று ஆக ஐந்து விஷயங்கள் அடங்கினமை காண்க.

ஆசா னியல்பும், மாணாக்க னியல்பும்.

29. ஆணாக்கம் வேண்டாதா னாசா னவற்கியைந்த
மாணாக்க னன்பான் வழிபடுவான்—மாணாக்கன்
கற்பனைத்து மூன்றுங் கடிந்தான் கடியாதா
னிற்பனைத்து நெஞ்சிற்கோர் நோய்.

(ப - ரை) ஆண் ஆக்கம் - ஆண்மகனுக் குரிய மிகுதிப்பாடு (அதாவது, பெண்ணாசை), வேண்டாதான் - விரும்பாத துறவியே, ஆசான் - ஆசிரிய னவான்; அவற்கு - அவனுக்கு, இயைந்த - பொருந்திய, மாணாக்கன்-மாணவனானவன், அன்பான் - அவன்மீது அன்பினை யுடையவனும், வழிபடுவான் - அவனுக்கு வழிபாடு செய்பவனும் (ஆவன்); மாணாக்கன் - அத்தகைய வித்தியார்த்தி, கற்பு அனைத்தும் - கற்றல் எல்லாம், மூன்றும் - (காமம் வெகுளி மயக்கம் என்னும்) மூக் குற்றங்களையும், கடிந்தான் - நீக்கியவன் (ஆதலாம்); கடியாதான் - அங்ஙனம் அவற்றை நீக்காதவன், நிற்பு அனைத்தும் - மாணாக்கன் நிலையில் நிற்பதெல்லாம், நெஞ்சிற்கு - ஆசிரியனுடைய மனத்திற்கு, ஓர் நோய் - ஒப்பற்ற நோயாகும்.

(க - ரை) பெண்ணாசை யற்ற துறவியே ஆசிரிய னவான்; அவன்மீது அன்புடையவனும், அவனை வழிபடுவோனுமே மாணாக்கனவான்; மாணாக்கன் கற்பதெல்லாம் முக்குற்றம் கடிதலேயாம்;

அங்ஙனம் கடியாதான் மாணுக்கன் நிலையில் நிற்பதெல்லாம் ஆசிரியன் மனத்திற்கோர் நோயாம் என்பதாம்.

(வி - ரை) உலகவாசை முற்றுந் துறந்தவனே தருமங் கூறுதற் குரியா னென்பதும், ஆசிரியனை வழிபடுவோனே மாணுக்கனென்பதும், அவன் மூக் குற்றங்களை யகற்றலே கற்குங் கல்வியென்பதும் ஜைன நூற்களின் றுணிபு; ஆதலின், ஆசிரியர் இங்ஙனம், முற்றத் துறந்தவனை ஆசிரிய னென்றும், அன்போடவனை வழிபடுவோனை மாணுக்க னென்றும், மாணுக்கன் கற்பதெல்லாம் மூக் குற்றங்களை யகற்றலே யென்றும், அங்ஙனம் நீக்காதவன் நிலையனைத்தும் ஆசிரியன் நெஞ்சிற்கு நோயெனவும் கூறினுர். மாணுக்கன் நன்னெறிக்க ணிற்காவிடின் ஆசிரியனுக்கு மனத்துயர் அதிகரித்தல் இயல்பு. அன்பான், வழிபடுவான் என்பவற்றுள் எண்ணும்மைகள் தொக்கன. ஆவன், ஆதலாம், ஆகும் என்பன இசை யெச்சங்களாக வருவித் துரைக்கப்பட்டன. கற்பு, நிற்பு - தொழிற்பெயர்கள். ஆணுக்கம் வேண்டாதான் ஆசான் என்பதொன்று, மாணுக்கன் அன்புடையனுதல் ஒன்று, வழிபடுதல் ஒன்று, கற்பனைத்தும் மூன்றுங் கடிந்தானுதல் ஒன்று, கடியாதான் நிற்பனைத்தும் நெஞ்சிற்கோர் நோயாதல் ஒன்று ஆக ஐந்து விஷயங்கள் வந்தமை காண்க.

மாணுக்கர் செயல்கள்.

30. நெய்தன் முகிழ்த்துணை யாங்குடுமி நேர்மயிரு
முய்த லொருதிங்கள் நாளாகுஞ்—செய்தல்
நுணங்குநூ லோதுதல் கேட்டல்மா ணுக்கர்
வணங்கி வலங்கொண்டு வந்து.

(ப - ரை) மாணுக்கர்-மாணுக்கருடைய, குடுமி-சிகையானது, நெய்தல் - கருநெய்தலின், முகிழ்த்துணை ஆம் - அரும்பி னளவாயிருத்தல் ஆகும்; நேர் - பொருந்திய, மயிர் உய்தலும் - மயிர் கழிதலும், (அதாவது சௌளமும்), ஒரு திங்கள் நாள் ஆகும் - ஒரு மாத

தினங்கள் ஆகும்; செய்தல் - அவர்கள் செய்தலும், வந்து - ஆசிரிய னிடத்தே வந்து, வணங்கி - (அவனைத்) தொழுது, வலம் கொண்டு - வலப்புறமாகச் சுற்றி வந்து, நுணங்கு - நுட்பமாகிய, நூல் - சாஸ் திரங்களை, ஓதுதல்-படித்தலும், கேட்டல்-கேட்டலும், ஆகும்-ஆம்.

(க - ரை) மாணுக்கனுக்குக் குடுமி கருநெய்தல் மொட்டுனி விருக்க வேண்டும்; அவன் மாதத்திற் கொருமுறை மயிர் கழிக்க வேண்டும்; ஆசிரியனை வணங்கிப் பாடம் படித்தலும் கேட்டலும் வேண்டும் என்பதாம்.

(வி - ரை) மாணுக்கனுக்குக் குடுமி பெரிதா யிருந்தால் அதில் பேன் முதலியன பிடித்து உபத்திரவ முண்டாவதோடு, அதனை அடிக்கடி கழுவிச் சிக்கெடுத் துலர்த்துதல் முதலியவற்ருல் வீண் நேரப் போக்குண்டாகும்; அதனுல் கல்வி கற்றலுக் கிடையூறும். அடிக்கடி சௌளம் செய்து கொள்வதாலும், படித்தற் காலம் அதில் வீணே கழியும்; இன்னும் உடம்பில் ஒருவிதச் சூடு கிளம்பிக் கெட்ட இச்சைகளை மனத்திற் கிளப்பிவிடும்; இஃதன்றியும் மயிரை அடிக்கடி கழிப்பதால் அவற்றி னிடையில் வசிக்கும் பேன் முதலிய வற்றிற்குக் கத்தியால் அபாய முண்டாகு மென்பதும், மயிர் ஒரு மாதத்தளவு சற்றே வளர்ந்த பின் சௌளம் செய்து கொண்டால் அந்த ஜீவன்கள் அவற்றில் ஒதுங்கிப் பிழைத்தற் கேதுவா மென்ப தும், குடுமி சிறிதா யிருந்தால் பேன் முதலியன சேர்தற் கிடமிரா தென்பதும் ஜைனுசாரங்களைச் சார்ந்தவைகளாம்; எவ்வகையிலும் ஜீவ ஹிம்ஸை நேரக்கூடா தென்பது ஜைனர்களுடைய முக்கிய கொள்கை. ஆதலின். அதனுலும், கற்றலில் எவ்விதத்திலும் இடை யூறு நேராதிருக்கும் பொருட்டும் ஆசிரியர் மாணுக்கர்க்கு இவ் வொழுக்கங்களைக் கூறினு ரென்க. நெய்தல் - உற்பல இனத்தைச் சார்ந்தது; இதில் கருநெய்தல் எனவும், வெண்ணெய்தல் எனவும் இர ண்டு வகை யுண்டு; கருநெய்தலுக்கு, நீலம், இந்தீவரம், உற்பலம்

என்றும், வெண்ணெய்தலுக்குக் குமுதம் என்றும் பெயர்களாம்; இவற்றுள் இங்கு நிறமும் உருவமும் நோக்கி உவமை கூறியது கருநெய்தலேயாம். இவற்றின் வகைகளைச் சூடாமணி நிகண்டு மாப்பெயர்த்தொகுதி 61 - ஆம் செய்யுளால் உணரலாம்; சிலர் நெய்தலை ஆம்பலென்பர்; நெய்தல் வேறு, ஆம்பல் வேறென வுணர்க. 'நேர் மயிரும் உய்தல்' என்பது 'நேர் மயிர் உய்தலும்' என மாற்றிக் கொள்ளப்பட்டது. உய்தல்-ஒழிதல்; இதில் வந்த உம்மை-இறந்தது தழுவியது. 'செய்தல்' என்பதில் இறந்தது தழுவிய எச்ச வும்மை தொக்கது. ஆகும் என்ற முற்று இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. செய்தல், ஓதுதல், கேட்டல் தொழிற் பெயர்கள். வணங்கி, வலங்கொண்டு, வந்து என்பன வினையெச்சங்கள். குடுமி வைத்தல், மயிர் கழித்தல், ஆசிரியனை வணங்கல், ஓதல், கேட்டல் ஆக ஐந்து.

### மனிதர் இயற்கை.

31. ஒருவ னறிவானு மெல்லாம்யா தொன்று
மொருவ னறியா தவனு—மொருவன்
குணனடங்கக் குற்றமில் லானு மொருவன்
கணனடங்கக் கற்றானு மில்.

(ப - ரை) எல்லாம் அறிவான் ஒருவனும்-யாவற்றையும் அறிபவனொருவனும், யாதொன்றும் அறியாதவன் ஒருவனும் - யாதொன்றையும் உணராதானொருவனும், குணன் அடங்க-நற்குண முழுதும், இல்லான் ஆம் ஒருவன் - இல்லாதவனாகிய ஒருவனும், குற்றம் இல்லான் ஆம் ஒருவன் - குற்ற மில்லாதவனாகிய ஒருவனும், கணன் அடங்க - சாஸ்திரக் கூட்டங்களை யெல்லாம், கற்றானும் - படித்தவனும், இல் - இவ் வுலகத்தில் இல்லை.

(க-ரை) உலகத்தில் முற்று முணர்ந்தவனும், ஏது மறியாதவனும், நற்குண மில்லாதவனும், குற்ற மில்லாதவனும், சகல கலைகளையும் கற்றவனும் இல்லை யென்பதாம்.

(வி - ரை) சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவனுக்கும் சிற்சில விஷயங்கள் தெரியாதிருத்தல் கூடும்; ஆதலின், ஒருவன் தன்னை முற்று முணர்ந்தவனென்று கூறுதல் இயலாது. ஒன்றையும் கல்லாதவனுக்கும் சிற்சில விஷயங்கள் இயற்கையில் தெரிந்திருத்தல் கூடும்; அதனால், ஒருவனை ஒன்றும் தெரியாதவனென்று சொல்லுதலும் இயலாது. கொடியரிடத்திலும் சில நற்குணங்கள் இருத்தல் கூடும்; ஆதலின், எவரையும் முற்றிலுமே நற்குணங்கள் இல்லாதவரென்று கூறல் முடியாது. பல நற்குணங்கள் பொருந்தியவரிடத்திலும் சிற்சில குற்றங்கள் காணப்படும்; அதனால் எவரையும் குற்றமேயில்லாதவரென்றும் கூறுதல் முடியாது. மனிதர் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்தல் இயலாது; அதனால், எத்தகைய கல்விமானையும் சகல கலா வல்லவனென் றுரைத்தல் முடியாது. இங்ஙனம் கூறியதனால் மனிதர்களில் ஒருவரை யொருவர் இழித்துக் கூறுதல் கூடாதென்பதும், எத்தகையரும் தற்பெருமை கூறலாகாதென்பதும் பெறப்படும். 'ஒருவ னறிவானு மெல்லாம்' என்பதை, 'எல்லாம் அறிவான் ஒருவனும்' எனவும், 'யாதொன்று மொருவனறியாதவனும்' என்பதை, 'யாதொன்று மறியாதவன் ஒருவனும்' எனவும், 'ஒருவன் குணனடங்க இல்லானும்' என்பதை, 'குணனடங்க இல்லானும் ஒருவன்' எனவும், மாற்றிக் கொள்க. 'குணனடங்க இல்லானு மொருவன்,' என்பதிலும், 'குற்ற மில்லானு மொருவன்' என்பதிலும் எண்ணும்மைகள் தொக்கன. 'இல்லானும்' என்பது தீபகமாக இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. குணன், கணன் என்பவற்றினீற்றில் மகரத்துக்கு னகரம் போலியாகவந்தது.

## தவத்திற் குரிய செய்கைகள்.

32. உயிர்நோய்செய் யாமை யுறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கட்செய் யாமை—செயிர்நோய்

விழைவு வெகுளி யிவைவிடுவா னாயின்
இழிவன் றினிது தவம்.

(ப - ரை) (ஒருவன்), உயிர் நோய் செய்யாமை - பிறிதோ ருயிர்க்குத் துன்பஞ் செய்யாமலும், உறு நோய் - தனக்குப் பிறரால் வரும் துன்பத்தை, மறத்தல் - மறந்துவிடுதலோடு, செயிர் நோய் - கோபத்தா லுண்டாம் துன்பத்தை, பிறர்கண் - பிறரிடத்தே, செய் யாமை - செய்யாமலும், செயிர் நோய் - குற்றம் பொருந்திய துன் பத்தைத் தருகிற, விழைவு - ஆசை, வெகுளி - கோபம், (ஆகிய), இவை-இவற்றையும், விடுவான் ஆயின் - விட்டுவிடுவானே யானால், தவம் - (அவனால் செய்யப்படும்) தவமானது, இழிவு அன்று - தாழ்ந்ததன்று, இனிது - இனிமை யுடையதாகும்.

(க - ரை) ஒருவன், பிற வுயிர்க்குத் துன்பஞ் செய்யாமலும், மற்றையரால் தனக்கு வந்த துன்பத்தைச் சகித்தும், கோபத்தால் பிறர்க்கு த் தீங்கு செய்யாமலும், இருந்து, ஆசையையும்,கோபத்தை யும் நீக்கிவிடுவானானால், அவனால் செய்யப்படும் தவமானது இனி மை யுடையது என்பதாம்.

(வி - ரை) தவத்திற் கிடையூறு உயிர்க் கொலையும், பிறரால் செய்யப்படும்துன்பத்தைச் சகிக்காமையும், கோபமும், அக் கோபத் தால் விரோதஞ் செய்தார்க்குத் துன்பியற்றலும், ஆசையும் ஆதலின், அவற்றை விட்டான் தவமே சிறந்ததென்றார் ஆசிரியர். உயிர் நோய் செய்தலாவது ஊன் விருப்பு முதலியவற்றால் செய்யும் உயிர்க்கொலை முதலியனவாம். பிறர் செய்யுந் துன்பத்தைப் பாராட்டினால் அவர் மீது கோப முண்டாம்; அக் கோபத்தால் அவர்க்குத் தீங்கு செய்ய எண்ண முண்டாகும்; ஆதலின், பிறர்க்குக் கோபத்தால் தீங்கு செய் யாதிருக்க விரும்புவோர் அன்னியரால் செய்யப்படும் துன்பங்களை உடனே மறத்தல்வேண்டும்; அதனானே ஆசிரியர் அதனை முதலில்

விளக்கி, 'உறுநோய் மறத்தலோடு செயிர்நோய் பிறர்கட் செய்யாமை' என்றார். ஆசையும், கோபமும் பல குற்றங்களையும் துன்பங்களையும் விளைவிக்கக்கூடியன வாதலின், அவை, 'செயிர் நோய் விழைவு வெகுளி' எனக் கூறப்பட்டன. 'செய்யாமை' என்பதில், மை - வினையெச்ச விகுதி. மறத்தல் செயிர்-உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றாம் வேற்றுமை ஓடு உருபு தொக்கதொகை. நோய் விழைவு - இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகை. 'ஒருவன்' என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது.

இன்ன இன்னவரால் இன்ன இன்னவை
நிகழுமெனல்.

33. வேட்பவன் பார்ப்பான் விளங்கிழைக்குக் கற்புடைமை
கேட்பவன் கேடில் பெரும்புலவன்—பாட்டவன்
சிந்தையா ஞாகுஞ் சிறத்த லுலகினுள்
தந்தையா ஞாகுங் குலம்.

(ப - ரை) வேட்பவன் - வேள்வி செய்பவனே, பார்ப்பான் - வேதியனாவன்; விளங்கு இழைக்கு - பிரகாசிக்கின்ற ஆபரணங்களை யணிந்த பெண்ணுக்கு, (சிறப்பு), கற்பு உடைமை-கற்பினை யுடைத்தாயிருத்தலாம்; கேட்பவன்-(பல நூல்களையும் ஆசிரியனை யடுத்துக்) கேட்டுணர்பவனே, கேடில் - குற்ற மில்லாத, பெரும் புலவன் - பெரிய புலவ னாவான்; பாட்டு - அவனால் இயற்றப்படும் செய்யுளானது, சிறத்தல் - சிறந்து நிற்றல், அவன் சிந்தையான் - அவனுடைய கருத்தின் விதத்தினாலே, ஆகும்-உண்டாகும்; உலகினுள்- இந்தப் பூமியில், குலம் - ஒருவனுடைய குலச் சிறப்பானது, தந்தையான் ஆகும் - தகப்பனாலே ஏற்படுவதாகும்.

(க - ரை) யாகஞ் செய்பவனே பார்ப்பான்; பெண்ணுக்குக் கற்புடைமை சிறந்தது; நூற் கேள்வி யுடையானே பெரும் புலவ

ஞவன்; பாட்டுச் சிறப்பது பாடுவோனது கருத்தின்-விதத்திற்குத் தக்கபடி யாகும்; ஒருவன் குலம் சிறப்பது அவனது தந்தையின் தன்மைக்குத் தக்கவா ருகும் என்பதாம்.

(வி - ரை) வேள்வி செய்தல் பார்ப்பானுக்கு முக்கிய குல தர்மமாம்; ஆதலின் அஃதில்லாதவன் பிராம்மண ஞகமாட்டான். பெண்ணுக்குப்பதிவிரதா தர்மமே சிறந்தபூஷண மாதலின், அஃதில்லாதவள் பெண் ணுகமாட்டாள். ஒருவன், நல்லாசிரியனை யடுத்து முறைப்படி பன்னூல்களையுங் கேட்டுணர்ந்தால் மாத்திரமே பெரும் புலவ ஞதல் கூடும்; அவன் புகழும் உலக முள்ளவரையிலும் நிலைத்து நிற்கும்; அங்ஙனமின்றி, இக்காலத்தில் தான்தோன்றிகளாய்ப் புலவரெனப் போலிப் பெயர் புனைந்து நடித்துத் திரிவார் போலத் திரிபவர் புலவ ராகமாட்டார்; அவர்களால் பிரயாசைப்பட்டு நடிப்பால் தேடப்படும் போலிப் புகழெல்லாம் மின்னல் போல் தோன்றி மறைந்துவிடும். கல்வி யறிவின்றி, வித்வான்களைப் போன்று நடித்துக் கற்றுணர்ந்தவர்களையும் அவமதித்து, 'இவர்கள் உரையைப் புரட்டுகிறவர்கள், செய்யுளைப் புரட்டுகிறவர்கள்' என்று அவர்கள் அரும் பிரயாசையால் செய்யும் கலைத் தொழில்களையும் இழித்துக் கூறித் தங்கள் போலித்தனத்தை அவர்கள்மே லேற்றித் திரிவோர் கல்வி மூடத்தைச் சார்ந்தவ ராவர். ஒருவன் கருத்தில் பன்னூலாராய்ச்சியும் உலக அனுபவமு மிருந்தால் அவனுல் இயற்றப்படும் கவி பற்பல கற்பனுலங்கார நயங்களோடு சிறந்து விளங்கும்; அங்ஙன மில்லாதவன் கவி, இக்காலத்தில் கல்வியறி வில்லாத பேதைகளால் பாடப்படும் கவிகளைப் போன்று இலக்கணமின்றி உப்பில்லாப் புற்கையாய் விளங்கும். ஒருவனுடைய தந்தை நன்மரபைச் சார்ந்தவனு யிருந்தால் மட்டுமே அவனது குலப் பெருமை பல்லோராலும் புகழப்படும்; இன்றேல், அவன் இழிகுலத்தா னெனத் தூற்றப்படுவான். பார்ப்பான் வேத சாஸ்திரங்களைப் பார்த்துணர்பவன். விளங்

கிளை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. புலவன் - அறிவினை யுடையவன்; புலம் - அறிவு.

இன்னவர் இன்னதிற் றுரியாரேனல்.

**34.** வைப்பானே வள்ளல் வழங்குவான் வாணிகன்
உய்ப்பானே யாசா னுயர்கதிக்கு—உய்ப்பான்
உடம்பினார் வேலி யொருப்படுத் தூனாத்
தொடங்கானேற் சேறற் றுணிவு.

(ப-ரை) வைப்பானே - (சகலரும் தட்டின்றி யெடுத் தனுப விக்குமாறு பொருளை யீட்டி) வைப்பவனே, வள்ளல் - வரையாது கொடுக்கும் கொடையாள னுவான்; வழங்குவான்-(பிரதிப் பிரயோ சனத்தைக் கருதிப் பொருளைத் தன் கையினாலேயே எடுத்துப் பிற ருக்குக்) கொடுப்பவன், வாணிகன்-(ஊதியந் தேடும்) வியாபாரியை நிகர்ப்பான்; (ஒருவனுக்கு நல்லுபதேசஞ் செய்து அவனை), உயர் கதிக்கு-மேலான பதவிக்கு, உய்ப்பானே-செலுத்தக் கூடியவனே, ஆசான் - சிறந்த ஞானாசிரிய னுவான்; (அத்தகைய உபதேசத்தால் தன்னுடைய ஆத்மனை), உயர் கதிக்கு உய்ப்பான்-உயர்ந்த பதவிக் குச் செலுத்துகிறவன், உடம்பின் ஆர் வேலி - (பிற ஜீவன்களுக்கு) உடம்பினாலே பொருந்திய காவலை, (அதாவது: காவலாய் அமை ந்த உடம்பை), ஒருப்படுத்து - நீக்கி, ஊன் - அவற்றின் தசையை, ஆர-தின்ன, தொடங்கானேல் - ஆரம்பிக்காம லிருப்பானேயானல், சேறல்-அங்ஙனம் உயர் கதிக்குச் செல்லுதலில், துணிவு-நிச்சயமாம்.

(க-ரை) எவரும் தட்டின்றி எடுத்துக்கொள்ளும்படி பொரு ளைத் தேடி வைப்பவனே வரையாது கொடுக்கும் வள்ள லாவான்; பிரதிப் பிரயோசனம் குறித்துப் பிறருக்குப் பொருளைக் கொடுப்ப வன் இலாபந் தேடும் வியாபாரி யாவான்; ஒருவனை நல்லுபதேசத் தால் உயர் கதிக்குச் செலுத்துவோனே நல்லாசிரிய னுவான்; குரு

வுபதேசத்தால் அங்ஙனம் தன் ஆத்மனை மேற்கதிக்குச் செலுத்து கிறவன் பிறஜீவன்களைக் கொன்று அவற்றின் ஊனைத்தின்று திருப்பானாயின் அவன் அவ்வுயர் கதிக்குச் செல்லுதல் நிச்சயமாகும் என்பதாம்.

(வி - ரை) இதனால் இன்னதைப் பெறவேண்டுமென்னும் எண்ண மின்றியும், இன்னதற்கு இன்னார்க்கு இவ்வளவுதான் கொடுக்கவேண்டுமென்னும் வரையறையின்றியும், பொருளையோ, நிலத்தையோ, வீட்டையோ, ஆகார வஸ்துக்களையோ ஓரிடத்தில் சேர்த்துவைத்து, மனிதரும் பிற ஜீவன்களும் தங்கள் தங்கள் இஷ்டம் பூர்த்தியாகுமட்டும் தாங்களே அனுபவித்துக்கொள்ளும்படி செய்தலே வள்ளற் றன்மைக் குரிய இலக்ஷணமாம்; இச் செய்கை யுடையானே வள்ளலெனப்படுவான்; ஆதலின், 'வைப்பானே வள்ளல்' என்றார் ஆசிரியர். ஒருவன், மேற்கதி அடைய வேண்டுமென்றாவது, உலகத்திற் புகழடையவேண்டுமென்றாவது, ஒரு மனிதனிடத்திலோ ஜீவனிடத்திலோ பிரதிப் பிரயோசனத்தை அடையவேண்டுமென்றாவது, இன்னாருக்கு இவ்வளவுதான், இன்னதுதான் கொடுக்கவேண்டுமென்று வரையறுத்துக்கொண்டு தன் கையினாலேயே எப்பொருளையேனும் எடுத்துக் கொடுப்பானானால் அச் செய்கை வள்ளற்றன்மை யாகாது; அது, வணிகன் வட்டிக்குப் பொருள் கொடுப்பது போன்றதாம்; ஆதலின், இத்தகையானை ஆசிரியர், 'வழங்குவான் வாணிகன்' என்றார். இதுகுறித்தே பெரிய தான தர்மங்களைச் செய்பவரும் தங்கள் பெயரை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் செய்யவேண்டுமென்று விதி ஏற்பட்டிருக்கிறது; இவ் விதிபற்றியே பண்டைக்காலத்தி லிருந்த பற்பல பெரியோர்கள், தங்கள் பெயரைக் காட்டிக்கொள்ளாமலே கோவில்களையும் சத்திரங்களையும் கட்டி முடித்துப் பிற தர்மங்களையும் இயற்றிச் சென்றிருக்கின்றனர். நம் நாட்டில் எத்தனையோ பெரிய தர்

மங்களெல்லாம் செய்தார் பெயர் தெரியாமலே இன்றும் விளங்கி வருகின்றன. இக்காலத்தில் அற்ப தர்மங்களைச் செய்வாரும் அவற்றைப் பத்திரிகைகளில் எழுதித் தற் பெருமை யடைகின்றனர்; அவர்கள் இச் செய்யுட் கருத்தை உய்த் துணர்வாராக. ஞானாசிரியனா யிருப்பவன், தன்னுடைய சீடருக்கு முத்தி யடைதற் குரிய ஞான சாஸ்திரங்களை உபதேசித்து அவர்களை நற்கதியிற் செலுத்தவேண்டும்; அங்ஙன மின்றி மனிதர்க்கு மயக்க சாஸ்திரங்களை உபதேசிப்பவன் ஆசிரியனாகமாட்டான். ஆசிரியோபதேசத்தால் தன் ஆத்மாவை முத்தியிற் செலுத்தக் கூடியவன்: உயிர்க்கொலை புரிதலையும், தசை யுண்டலையும் நீக்கவேண்டும்; இச்செய்கை யுடையானே நற்கதி யடைவான்; ஒருவன் எவ்வளவு ஞான சாஸ்திரங்களைக் கற்றிருந்த போதிலும், எவ்வளவு முத்தி விருப்புடையனா யிருந்தபோதிலும் மேற் கூறிய ஒழுக்கங்களைப் பெறானாயின், தீக்கதி யடைவானே யன்றி நற்கதி சேரான். உடம்பு, உயிர்க் காதாரமாயிருப்ப தாதலின், வேலியாகக் கூறப்பட்டது. ஒருப்படுத்தல் - நீக்குதல்; இதில் பகுதியாகிய ஒரு-என்பது விகுதி குன்றிய முதனிலைத் தொழிற்பெயர்; ஒருவல்-நீங்கல்.

இவற்றன் இவை ஆதமெனல்.

35 வைததனா னாகும் வசைவணக்க நன்றாகச்
செய்ததனா னாஞ் செழுங்குலமுற்—செய்த
பொருளினா னாகுமாம் போக நெகிழ்ந்த
அருளினா னாகு மறம்.

(ப - ரை) வைததனான் - (ஒருவன் மற்றவனைத்) திட்டியதனாலே, வசை ஆகும் - பழி உண்டாகும்; நன்று - நன்மையும், வணக்கம் -பணிவும், ஆக - தன்பால் நிகழ, செய்ததனான் - செய்ததனாலே, செழும் குலம் - வளமையாகிய குல உயர்வானது, ஆகும் - உண்டா

கும்; முன் செய்த-முன்னே தேடிவைத்த, பொருளினன்-பொருளி னலே, ஆம் போகம் - மனிதர்க்குரிய உலக இன்பானுபவம், ஆகும் - விளையும்; நெகிழ்ந்த - மனம் இளகிய, அருளினன் - கிரு பையினலே, அறம் ஆகும் - தர்மம் ஏற்படும்.

(க - ரை) ஒருவன் பிறரைத் திட்டுவதால் வசை யுண்டாகும்; வணக்கத்தால் குல மேன்மை யேற்படும்; நன்றியற்றலாலும் குல மேன்மை நிகழும்; பொருளால் இன்ப மாகும்; அருளால் அறம் ஆகும் என்பதாம்.

(வி - ரை) ஒருவன் பிறரைத் திட்டிக்கொண்டே திரிவா னயின், அவனை உலகத்தா ரெல்லாரும் ஊத்தைவாயன் என்றுபழிப் பர். பணிவும், நன்றியற்றலும் எவரிடத்தி லிருக்குமோ அவரைப் பலரும் உயர்குலத்தா ரெனப் புகழ்வார்கள்; அதனல் குலப்பெருமை விளங்கும். ஒருவன் இளம் பருவத்திலேயே பொருளைத் தேடி வைத்துக் கொள்வானனல், தளர்ந்த காலத்திலும் அப் பொருளால் இன்பத்தை அடைவான். எந்த ஜீவன்களிடத்திலும் கிருபையைச் செலுத்துதலே தருமங்களிற் சிறந்ததாகும். ஆதலின், 'அருளின னகும் அறம்' என்ருர் ஆசிரியர். ஆகும் வசை, ஆகுஞ் செழுங்குலம், ஆகும் போகம், ஆகும் அறம் என்பன முன் பின்னக மாற்றிக் கொள்ளப்பட்டன; இங்ஙனம் மாற்றுதல் மொழிமாற்றுப் பொருள் கோளின்பாற்படும்; "ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை, மாற்றி யோரடியுள் வழங்கல் மொழிமாற்றே." என்பது (நன் - பொது - சுஉ) சூத்திரம். வைததனன் முதலியவற்றி னீற்றி லுள்ள ஆன் - கருத்தாப் பொருளில் வந்த மூன்றனுருபு. வைதத னல் வசையாதல் ஒன்று, வணக்கத்தால் குலமாதல் ஒன்று, நன்று செய்தலால் குலமாதல் ஒன்று, பொருளால் இன்பாதல் ஒன்று, அரு ளால் அறமாதல் ஒன்று ஆக ஐந்து.

## இல்லறத்தின் பயனும் துறவறத்தின் பயனும்.

36. இல்லியலார் நல்லறமு மேனைத் துறவறமு
நல்லியலி னாடி யுரைக்குங் கால்—நல்லியற்
றானத்தாற் போகந் தவத்தாற் சுவர்க்கமாம்
ஞானத்தால் வீடாகு நாட்டு.

(ப - ரை) இல் - இல் வாழ்க்கையின், இயலார் - தன்மையை யுடையவர்களது, நல் அறமும் - நல்ல தர்மத்தின் பயனையும், ஏனை - மற்ற, துறவறமும்-துறவறத்தின் பயனையும், நல் இயலின் - நல்ல இயற்கையினால், நாடி - ஆராய்ந்து, உரைக்குங்கால் - சொல்லு மிடத்து, நல் இயல் - இல்லறத்தின் நல்ல தன்மைக்குரிய, தானத் தால் - ஈகையினாலே, போகம் - போக பூமியின் அனுபவமாம்; தவத் தால் - துறவறத்திற் குரிய தவத்தினாலே, சுவர்க்கம் ஆம்-விண்ணுல கத் தின்பம் கைகூடும்; ஞானத்தால் - துறவறத்திற் குரிய ஞானத் தினாலே, வீடு ஆகும்-மோக்ஷம் கைகூடும்; நாட்டு - இவற்றை நீ நிலை பெறுவித்துக் கூறுவாயாக.

(க - ரை) இல்லறப் பயனையுந் துறவறப் பயனையும் ஆராய்ந் துரைக்கு மிடத்து, இல்லறத்திற் குரிய தானத்தால் போக பூமியின் அனுபவமும், துறவறத்திற் குரிய தவத்தால் சுவர்க்க பதவியும், அத் துறவினுக்குரிய ஞானத்தால் மோக்ஷ பதவியும் கைகூடும்; இவற்றை நீ நிலைநிறுத்திக் கூறுவாயாக என்பதாம்.

(வி - ரை) இல்லறத்தார்க்குத் தானம் முதலிய தர்மங்கள் உரியன வென்பதும், அவற்றைச் செய்வதால் போக பூமியின் அனு பவம் சித்திக்கு மென்பதும், துறவறத்தார்க்குத் தவம் முதலிய நோன்புகளும், ஞானம் யோகம் முதலியவைகளும் உரியன வென்ப தும், அவற்றைச் செய்வதால் முறையே சுவர்க்க பதவியும் மோக்ஷ பதவியும் சித்திக்கு மென்பதும் ஜைன நூல் வழக்கு. தானம்: சாஸ்திர

தானம், ஆகாரதானம், ஔஷத தானம், அபய தானம் என நான்கு வகைப்படும். தவம் இன்னதைப் பெறவேண்டுமென்று குறித்துக் கொண்டு செய்யப்படும் விரதம், நோன்பு, தேவசிந்தனை முதலியவைகளாம். ஞானம்-மோக்ஷ நிலையை உணர்ந்து சகல எண்ணங்களையும் நசிக்கச்செய்து யோகங் கூடுதலாம். இவற்றுள் தானம் இல்லறத்தார்க் குரியது; தவம், ஞானம் இரண்டும் துறவறத்தார்க் குரியன. போக பூமி: தருமஞ் செய்தார் இன்ப மனுபவித்தற் குரிய ஓரிடம். நல்லறம், துறவறம் என்பன அவற்றின் பயன்களை உணர்த்திநின்றன. போகம் - குணவாகுபெயராய் அக் குணத்திற் குரிய பூமியை உணர்த்திநின்றது. இல்லறமொன்று, துறவறமொன்று, தானப்பயனொன்று, தவப்பயனொன்று, ஞானப்பயனொன்று ஆக ஐந்து.

நூற்சொல் வனப்பே சிறந்ததெனல்.

37. மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பும்
உகிர்வனப்புங் காதின் வனப்புஞ்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு.

(ப - ரை) (மனிதர்க்கு) மயிர் வனப்பும் - தலை உரோமங்களாலுண்டாகும் அழகும், கண் கவரும் - பார்ப்பவர்களுடைய நேத்திரங்களைக் கவருகின்ற, மார்பின் வனப்பும் - நெஞ்சினுடைய அழகும், உகிர் வனப்பும் - நகங்களின் அழகும், காதின் வனப்பும் - செவிகளின் அழகும், செயிர் தீர்ந்த - குற்றம் நீங்கின, பல்லின் வனப்பும் - பற்களின் அழகும், வனப்பு அல்ல-அழகுகளல்ல, நூற்கு இயைந்த-இலக்கண நூலுக்குப் பொருந்திய, சொல்லின் வனப்பே - வார்த்தைகளா லுண்டாகும் அழகே, வனப்பு-சிறந்த அழகாம்.

(க - ரை) மனிதர்க்கு உரோமம், மார்பு, நகம், காது, பல் ஆகியவற்றா லுண்டாகும் அழகுகள் சிறந்தனவல்ல, இலக்கண நூற்கியையப் பேசும் வார்த்தைகளின் அழகே சிறந்த தென்பதாம்.

(வி-ரை) மனிதர் அவயவங்களில் உண்டாகும் அழகுகளெல்லாம் முதுமையினாலோ, மரணத்தாலோ விரைவில் அழியக்கூடியவை; இலக்கண நூலைக் கற்று அதற்கியையப் பேசும் புகழ் அழகோ உலகத்தில் என்றும் நிலைபெற்றிருக்கும். உயர்ந்த இலக்கண வித்வான்கள் அழகிய சொற்களால் இயற்றிய நூற்கள் என்றும் நிலைபெற்றிருத்தலால், இஃதுணரப்படும். இன்னும் இலக்கண வரம்பின்படி பேசுதலும் ஓர் அழகென்று மற்றொரு பொருளுரைப்பினும் அமையும்; அங்ஙனம் பேசுவார் புகழும் அழியாது நிலைநிற்கும். ஆகவே, இலக்கண இலக்கிய நூல்களைக் கற்றுக் கவிகளை இயற்றவும், பேசவும் பழகவேண்டுமென்பது இதனாற் பெறப்படும். இக்கருத்தை, "குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும், மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து, நல்லம்யா மென்னும் நடுவு நிலைமையால், கல்வி அழகே அழகு." என்னும் நாலடிச் செய்யுளும் வலியுறுத்தும். மயிர், உகிர், காது, பல் என்பன சாதி யொருமைகள்; 'வனப்பே' என்பதில் ஏகாரம் பிரிநிலைப் பொருளது.

## அறிஞர் செயல்கள்.

38. தொழீஇ யட வுண்ணார் தோழரிற் றுஞ்சார்
வழீஇய பிறர்பொருளை வெளவார்—கெழீஇக்
கலந்தபிற் கீழ்காணார் காணாய் மடவாய்
புலந்தபிற் போற்றார் புலை.

(ப-ரை) (அறிஞர்), தொழீஇ - அடிமைப் பெண்ணானவள், அட-(உணவு) சமைக்க, உண்ணார் - (அதனை) உண்ணமாட்டார்கள்; தோழர் - சிநேகிதருடைய, இல் - வீட்டிலே, துஞ்சார் - (அவரில்லாதபோது தனியே) படுத்துறங்க மாட்டார்கள்; வழீஇய - கையினின்றும் நழுவிய (அதாவது, மறந்து வைத்துவிட்ட), பிறர் பொருளை - அன்னியர் பொருளை, வெளவார் - அபகரிக்க மாட்

டார்கள்; செழீஇ - (ஒருவரோடு) கூடி, கலந்த பின் - உறவான பிறகு, கீழ் - (அவரிடம் ஏதோ ஒரு சமயத்தில் ஏற்படும்) தாழ்ந்த குணத்தை, காணார் - ஆராய்ந்து பார்க்கமாட்டார்கள் (அதாவது, அற்ப குணத்தை ஆராய்ந்து அவர்மீது குறை கூறமாட்டார்கள்); புலந்த பின் - (ஒருவரோடு) விரோதங் கொண்டபின், புலை - (அவரிடமுள்ள) அற்ப குணங்களை, போற்றார் - கொண்டாடமாட்டார்கள்; மடவாய்-இளமைப் பருவத்தை யுடைய பெண்ணே!, காணாய்-நீ இவற்றை உணர்வாயாக.

(கு - ரை) அறிஞர், அடிமைப் பெண் சமைத்த உணவை உண்ணார்; சிநேகிதர் வீட்டில் தனியாய்ப் படுத்துறங்கார்; பிறர் மறந்து வைத்த பொருளைக் கவரார்; ஒருவரோடு சிநேகித்த பின்னர் அவர்களின் கீழான குணத்தைக் கருதமாட்டார்கள்; விரோதிகளிடமுள்ள தாழ்மைக் குணத்தைச் சகிக்கமாட்டார் என்பதாம்.

(வி - ரை) அடிமைப் பெண் உணவு சமைக்கும்போது, அதில் என்ன குறை நேர்ந்தபோதிலும் அதனை வெளிக்குக் காட்டாமல் தன் வேலையை மட்டும் விரைந்து முடிக்கவேண்டு மென்னும் நோக்க முடையவளாய்க் கேடான உணவையும் சரிப்படுத்தி வைத்து விடுவாள்; உணவில் ஏதேனும் கெட்ட வஸ்து வீழ்ந்தாலும் இரகசியமாக அதனை எடுத் தெறிந்துவிட்டுப் பேசாம லிருந்துவிடுவாள்; ஆதலின், அவ் வுணவை யுண்டல் தீதாம். நண்பரில்லாதபோது அவரில்லில் படுத்தால் எத்தகையர்க்கும் மன வுறுதி மாறி அங்குள்ள பெண்கள்மீது கெட்ட சிந்தனை ஏற்பட்டுப் பிறர் மனை நயத்தல் என்னும் தீமைக் குட்பட ஏது வுண்டாகும். 'தோழரிற் றுஞ்சார்' என்பதற்கு, 'நண்பர் மனையாளைக் கற்பழித் தாங்கு உறங்கார்' எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். பிறர் மறந்து வைத்த பொருளை அவரிடம் கொடாமல் கவர்தல் பஞ்ச பாதகங்களுள் ஒன்றான களவைச் சார்ந்ததாம். ஒருவனை நன்காராய்ந்து சிநேகித்த பின் அவ

ரிடம் சிற்சில சமயங்களில் காணப்படும் அற்பக் குற்றங்களைப் பாரா ட்டினால் சிநேகத்துக்குக் கேடுண்டாம். எத்தகையாரிடத்தும் குற்ற மில்லாதிருத்தல் அருமை யாதலின், அங்ஙனம் சிநேகரிடம் குற்றம் பாராட்டின் உலகத்திற் சிநேக மென்பதே இல்லாமற் போய்விடும். விரோதிகளிடத்தில் குற்றம் காணப்படின் உடனே கண்டிக்கத் தொடங்கவேண்டும்; பொறுமை காட்டினால், அவர்களால் தீங்கு நேரும். தொழீஇ - வேலைக்காரி; தொழிலி என்பது விகாரப்பட்டு இங்ஙனம் அளபெடுத்து நின்றது; தொழிலி - அடிமை வேலை செய் பவள். தொழீஇ, கெழீஇ, வழீஇ என்பன சொல்லிசை யளபெடை கள். காணாய்-ஏவல்முற்று. மடவாய் - மகடூஉ முன்னிலை. 'அறிஞர்' என்னும் எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது.

இன்னவை நன்மை யுடையன வேனல்.

39. பொய்யாமை நன்று பொருணன் றுயிர்நோவக்
கொல்லாமை நன்று கொழிக்குங்காற்—பல்லார்முற்
பேணாமை பேணுந் தகைய சிறிதெனினும்
மாணாமை மாண்டார் மனம்.

(ப-ரை) (மனிதர்க்கு), பொய்யாமை - பொய் சொல்லாதிருத் தல், நன்று-நன்மையாம்; பொருள்-தம் முயற்சியால் வரும் பொருள், நன்று - நல்லதாம்; உயிர் நோவ-பிற வுயிர் வருந்தும்படி, கொல்லா மை - அதனைக் கொல்லாதிருத்தல், நன்று-நல்லதாம்; கொழிக்குங் கால் - (இன்னும் நன்மைகளை) ஆராயுமிடத்து, பேணும் தகைய- தாம் விரும்புவனவற்றை, பல்லார் முன் - பலபேர்களிடத்தும், பே ணாமை - விரும்பாதிருத்தல், நன்று - நன்மையாம்; மாண்டார் மனம்- மாட்சிமைப்பட்டவர்களுடைய மனமானது, சிறிதெனினும் - கொஞ்சமாவது, மாணாமை - பெருமை யடையாதிருத்தல், நன்று நன்மையாம்.

(க - ரை) ஆராய்ந்து பார்க்குமிடத்து மனிதர்க்குப் பொய் கூறு திருத்தலும், பொருளைத் தேடுதலும், உயிர் கொல்லா திருத்தலும், விரும்புவனவற்றை யெல்லாம் பலரிடத்தும் விரும்பிக் கேளா திருத்தலும், உயர்ந்தார் மனம் தற்பெருமை யடையா திருத்தலும் நன்மை யுடையன வென்பதாம்.

(வி-ரை) பொய் சொன்ன வாய்க்குப் போசனம் கிடைக்காது. பொருளைத் தேடாது சோம்பி யிருப்பவர்க்கு இவ் வுலகத்தி லின்ப மில்லை. உயிர்க் கொலை நரகி லுய்க்கும். "நல்லா றெனினும் கொளல் தீது" என்றதை யுன்னி எக்காரணத்தை முன்னிட்டும் மனிதர், தாம் விரும்பியவற்றை யாசிக்கா திருத்தல் அவர்க்கு உயர்வாம். உயர்ந்தவர்கள் தற்பெருமை கொண்டால் அவர்க் கிழிவே யுண்டாகும். பொய்யாமை, கொல்லாமை, பேணாமை, மாணாமை என்பன எதிர்மறைத் தொழிற்பெயர்கள். கொழித்தல் - பொருள்களைத் தெள்ளித் தீயன விலக்கி நல்லன கொள்ளுந் தொழில்; அஃதிங்கு ஆராய்தற் பொருளில் நின்றது. மாண்பு - பெருமை; மாணாமை - பெருமை யடையாமை. இனி, 'மாண்டார் மனம்' என்பதற்கு, 'ஆசை யொழிந்தவர்களுடைய (அதாவது: துறவிகளுடைய) மனம்' எனப் பொருள் கொண்டு அதற்கு நேராக 'மாணாமை' என்பதற்கு, 'விஷயாதிகளிற் பொருந்தாமை' எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். ஒரு நன்று, பின் னிரண்டிடங்களினுங் கூட்டப் பட்டது.

அறிவில்லார் காவல் பயன் படாதேன்பது.

40. பண்டாரம் பல்கணக்குக் கண்காணி பாத்தில்லார்
உண்டா ரடிசிலே தோழரிற்—கொண்டாரா
யாக்கைக்குத் தக்க வறிவில்லார்க் காப்படுப்பிற்
காக்கைக்குக் காப்படுத்த சோறு.

(ப - ரை) (மனிதர்) பண்டாரம் - பொக்கிஷ சாலைக்கும், பல் கணக்கு - பல விதமான பொருள்களுக் கெழுதும் கணக்குத் தொழிலுக்கும், கண்காணி - (பொருள்களைச் சோரம் போகாமற் காக்கும்) மேற் பார்வைத் தொழிலுக்கும், இல்லார் - இல்லக் கிழத்திகளின் பாதுகாப்பிற்கும், பாத்து - பலபேர் பங்கிட்டு, உண்டு ஆர் - உண்டு வயிறு நிறைகின்ற, அடிசில் - உணவின் காவலுக்கும், யாக்கைக்கு - உடம் பெடுத்ததற்கு, தக்க - தகுதியான, அறிவு இல்லார் - மேலான அறிவு இல்லாதவர்களை, தோழரின் - தங்கள் சிநேகிதரைப் போல, கொண்டாராய் - மனத்துட் கொண்டவர்களாய், கா - காவற்றொழிலுக்கு, படுப்பின் - ஏற்படுத்தினால், (அவை யெல்லாம் அவர்களிடத்து), காக்கைக்கு - காகத்துக்கு, காப்பு அடுத்த - தன் காவலில் சேர்ந்த, சோறு - சோறும், (அதாவது: அச் சோற்றைப் போலக் காவலாலேயே சோரம் போவனவாம்.)

(க - ரை) பொக்கிஷ சாலை, பல கணக்குத் தொழில், பொருள்களின் மேற்பார்வைத் தொழில், இல்லக்கிழத்திகளின் பாதுகாப்பு, உணவின் காவல் ஆகிய இவற்றிற்கு உயர்ந்த அறிவில்லாரை நம்பிக் காவலாக ஏற்படுத்தினால், அக் காவலானது சோற்றிற்குக் காகத்தைக் காவல் வைத்தது போலாம் என்பதாம்.

(வி - ரை) அற்ப அறிவுடையவனை, (அதாவது, பேராசையும் அபகார சிந்தையு முடையவனை) பொக்கிஷ சாலைக்குக் காவல் வைத்தால் அவன் அங்குள்ள பொருள்களை யெல்லாம் சமயம் பார்த்து அபகரித்துக்கொண்டே யிருப்பான்; கணக்கெழுதுந் தொழிலுக் கேற்படுத்தினாலோ, தந்திரமாகப் பொய்க் கணக்குகளை யெழுதி எண்ணிறந்த பொருள்களை அபகரிப்பான்; பொருள்களை மேற் பார்க்குந் தொழிலுக் கேற்படுத்தினாலோ, தன் இஷ்டம் போல் அவற்றைக் கவர்வான்; பெண்களுக்குக் காவல் வைத்தாலோ, எவ்விதத்தாலேனும் அவர்களைக் கெடுத்தேவிடுவான்; பலபேர் பங்கிட்டுண்ணும் உணவுப்

பொருள்களுக்குக் காவல் வைத்தாலோ, பலர் கூடிய காரியத்தில் ஒருவரும் சோரத்தைக் கவனிக்க மாட்டார்களென்று நினைத்தபடியெல்லாம் அவற்றைக் கொள்ளையடிப்பான். காகத்தைச் சோற்றிற்குக் காவல் வைத்தால் அது, அதனைத் தான் உண்ணுவதோடு தன் இனத்தையும் கூவி யழைத்துண்ணச் செய்யும்; இதனை, அபகார சிந்தையுடையவன் காவலுக்கு ஒப்பிட்டமையால், அவன், தான் தீங்கிழைப்பதோடு, தன் இனத்தாரையும் ஏவித் தீங்கியற்றச் செய்வானென்பது பெறப்படும். ஆகவே, இத்தகைய தொழில்களுக்கு உத்தமரையே காவலுக்கு நியமிக்கவேண்டுமென்றுணர்க. பண்டம் - பொருள்; ஆரம் - சேர்ந்திருக்கு மிடம்; ஆகவே, பொக்கிஷசாலை யென்பது பெறப்படும். கண்காணி - கண்ணால் பார்த்தலையுடையவன்; அதாவது, பொருள்கள் சேதம் போகாதபடி அவற்றை மேற்பார்வை பார்ப்பவன்; இப்பெயர், தென்னாட்டில் நிலங்களின் விளைவுகளை அறுத்தடிக்குங் காலத்தில் அவற்றைக் குடித்தனக்காரர் திருடாதபடி மேற்பார்வை பார்க்கும் சேவகனுக்கும், இலங்கைத் தீவில் தோட்டப் பயிர்களை மேற்பார்ப்பவனுக்கும் 'கங்காணி' என மருவி வழங்குகின்றது; இப்பெயர், இங்கு அவனாற் செய்யப்படும் மேற்பார்வைத்தொழிலின்மேனின்றது. இங்ஙனமே பண்டாரம் என்பது அதன் காவற்றொழிலையும், இல்லார் என்பது அவரின் பாதுகாப்புத் தொழிலையும், அடிசில் என்பது அதன் காவலையும் உணர்த்திநின்றன. பண்டாரம் முதலிய ஐந்திடத்தும் நான்கனுருபுகளும் எண்ணும்மைகளும் தொக்கன. கா-காவல்; இது முதனிலைத் தொழிற்பெயர். படுத்தல் - உண்டாக்குதல்.

### வீரர் தருமம்.

41. உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார்
படையிட்டார் பற்றேது மின்றி—நடையிட்டார்

இவ்வகை யைவரையு மென்று மணுகாரே
செவ்வகைச் சேவகர் சென்று.

(ப - ரை) செவ்வகை - செம்மையான தன்மையையுடைய, சேவகர் - வீரர்கள், சென்று - முன்னேறிப் போய், உடை இட்டார் - (தமக்கஞ்சி உடுத்த) ஆடையைக் கை நழுவவிட்டவர்களும், புல் மேய்வார் - புல்லைப் பறித்து வாயிலிட்டுக் கடித்தவர்களும், ஓடு நீர் - ஓடுகின்ற நீரில், புக்கார் - புகுந்து மறைந்தவர்களும், படை இட்டார்-ஆயுதத்தைக் கீழே வைத்தவர்களும், பற்று ஏதும் இன்றி- துணை சிறிதும் இல்லாமல், நடை இட்டார் - நடந்தோடியவர்களும், (ஆகிய), இவ்வகை - இத்தன்மைகளை யுடைய, ஐவரையும் - ஐந்து பேர்களையும், என்றும் - எப்பொழுதும், அணுகார் - (வருத்துதற்கு) நெருங்கமாட்டார்கள்.

(க - ரை) செம்மைத் தன்மையுள்ள வீரர், தமக்கஞ்சி உடை நழுவவிட்டவர்க ளிடத்தும், புல்லைக் கவ்வியவர்க ளிடத்தும், நீரிற் புகுந்து மறைந்தவரிடத்தும், ஆயுதத்தைக் கீழே வைத்தவர்க ளிடத்தும், துணை யேதுமின்றிப் புற முதுகிட்டு நடந்தோடியவர்க் ளிடத்தும் அவர்களை வருத்தும்பொருட்டு நெருங்க மாட்டார்கள் என்பதாம்.

(வி - ரை) யுத்தம் புரிபவர் ஆடையைக் கீழே போடுதலும், புல்லைக் கவ்வுதலும், நீரிற் புகுந்து மறைதலும், ஆயுதத்தைக் கீழே வைத்தலும், ஓடுதலும் தோல்வி யடைந்ததற் கறிகுறிகளாம். ஆதலின், இவற்றைச் செய்வாரை வருத்துதல் யுத்த தருமமின்றாம். இந் நீதிபற்றி யுத்த தருமமறிந்த சுத்தவீரர் இவ் வகையினரை நெருங்கி வருத்தமாட்டார்கள். புல்மேய்தல் - புல்லை மெல்லுதல். இடல் - செய்தல்; அஃது, உடையிட்டார், படையிட்டார் என்பவற்றில் வைத்தற்பொருளிலும், நடையிட்டார் என்பதில் செய்தற்

பொருளிலும் நின்றது. செவ்வகை - நீதித்தன்மை. உடையிட்டார் முதலிய ஐந்திடங்களினும் எண்ணும்மைகள் தொக்கன. அனுகாலே என்பதில், ஏ - அசை.

இன்ன இன்ன மாதரை அறிஞர் சேரா ரென்பது.

42. பூவாதாள் பூப்புப் புறக்கொடுத் தாளிலிங்கி
ஓவாதாள் கோல மொருபொழுதுங்—காவாதாள்
யார்யார் பிறர்மனையா ளுள்ளிட்டிவ் வைவரையுஞ்
சாரார் பகைபோற் சலித்து.

(ப - ரை) பூவாதாள் - பருவ மடையாத கன்னியும், பூப்பு புறக்கொடுத்தாள் - மாதவிடாய் நீங்கியவளும், இலிங்கி - தவமுடையாளும், ஒருபொழுதும் - ஒருகாலத்தும், கோலம் ஓவாதாள் - அலங்கரிப்பு நீங்காதவளும், காவாதாள் - கற்பைக் காவாதவளு மாகிய பரத்தையும், பிறர் மனையாள் யார் யார் - அன்னியர் மனையாள் எவளெவளும், உள்ளிட்டு - அடங்க, இ ஐவரையும் - இந்த ஐந்து வகையினரையும், (அறிஞர்), பகைபோல் - பகைவரைப்போல, சலித்து - வெறுத்து, சாரார் - (சிற்றின்பத்தின் பொருட்டு) நெருங்கமாட்டார்கள்.

(க - ரை) பூவாத கன்னியையும், பூப்பு நீங்கிய விருத்தமாதையும், தவப்பெண்ணையும், வேசியையும், பிறர் மனையாளையும் அறிஞர் சேரமாட்டார்க ளென்பதாம்.

(வி - ரை) கன்னியும் விருத்த மாதும் இன்ப வுணர்ச்சி யற்றவர்களாதலின், அவர்கள் முயக்கம் பற்பல நோய்கட் கிடமாவதோடு அவர்கட்கும் வெறுப்பும் மனத் துயரமு முண்டாகும். ஆதலின், அவர்களை முறைப்படி விவாகஞ் செய்து கூடுதலும் கூடாது. தவமாதைக் கூடின் அவளின் தவத்திற்குப் பங்கமேரு மாதலின், அது மகா தோஷமாம். பரத்தையின் சேர்க்கை, 'இருட்டறையில் ஏதில்

பிணந் தழுவியதுபோல' இன்பற்றதாதலின் அதுவும் நீக்கத்தக்க தாம். "பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க் கறனொன் றோ வான்ற வொழுக்கு." என்றபடி பிறனில் விழையாதிருத்தல் பெரும் புண்ணியமாம். பூத்தல் - பருவமடைதல். புறங்கொடுத்தல் என்பது புறக்கொடுத்தல் என வலித்தல் விகாரம் பெற்றுவந்தது; இஃதிங்கே நீங்குதற் பொருளில் நின்றது. 'யார்யார்' என்ற வினா வடுக்குப் பலரைக் குறித்து நின்றது. உள்ளிட என்னும் செயவெ னெச்சம், உள்ளிட்டு எனச் செய்தெ னெச்சமாகத் திரிந்துவந்தது. பகை - பண்பாகுபெயர். அறிஞர் என்னும் எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது.

## பெண்டிர் சிறப்பு.

43. வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்துவிருந் தோம்பித்— திருவாக்குந்
தெய்வத்தையு மெஞ்ஞான்றுந் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு.

(ப - ரை) வருவாய்க்குத் தக்க - தம் கணவரது வரும்படிக்குத் தகுதியாகிய, வழக்கு-வழங்குதலை (அதாவது: செலவை), அறிந்து-தெரிந்து (செய்து), சுற்றம் - பந்துக்கள், வெருவாமை - (தங்களு டையகோபச் சொல்லால்) பயந்தொதுங்காமல், வீழ்ந்து-(அவர்களை) விரும்பி உபசரித்து, விருந்து ஓம்பி - விருந்தினரைப் பேணி, திரு ஆக்கும் - செல்வத்தை உண்டாக்கும், தெய்வத்தையும் - தெய்வத்தையும், எஞ்ஞான்றும் - எப்பொழுதும், தேற்றம் - தெளிவாகிய, வழிபாடு செய்வதே - வணங்குதலைச் செய்வதே, பெண்டிர் சிறப்பு-மாதர்க்குரிய சிறப்புக்களாம்.

(க - ரை) இல்லறத்திலுள்ள பெண்களுக்குச் சிறப்புக்க ளாவன: கணவருடைய வருவாயி னளவைத் தெரிதலும், அதற்குத்

தக்க செலவு செய்தலும், சுற்றந் தழுவுதலும், விருந்தோம்பலும், தெய்வத்தை வழிபடுதலும் என்பதாம்.

(வி - ரை) இல்லறத்தை நடத்தும் பெண்கள், தம் கணவரது வரும்படி இவ்வள வென்பதை யுணர்ந்து, அதற்குத் தக்கபடி அதிற் கார்பாகஞ் செலவு செய்யவேண்டும்; அங்ஙனம் செய்து நடத்தும் இல்லறமே செவ்விதின் நடைபெறும். வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்பவ ளிருக்கும் குடும்பம் கெட்டேபோகும். சுற்றச் சேர்க்கை யுடையார்க்கே உலகத்தில் மதிப்புண்டு. விருந்தினரை உபசரித்தல் இல்லற தருமங்களிற் சிறந்ததாம். தெய்வ வழிபாடும் அதற்கு முக்கியமானதாம். வழங்குதல் என்னுந் தொழிற்பெயர் விகுதி குன்றி முதனிலைத் தொழிற்பெயராய் வலித்தல் விகாரம் பெற்று 'வழக்கு' என நின்றது; வழங்குதல் - கொடுத்தல்; அஃதிங்குச் செலவு என்னும் பொருளில் நின்றது. சுற்றம் - சூழ்தல்; அது தொழிலாகு பெயராய்ச் சூழ்வாரை யுணர்த்தி நின்றது. வெருவாமை - எதிர் மறை வினையெச்சம். விருந்து-புதுமை; அது, பண்பாகுபெயராய்ப் புதியாரை யுணர்த்தி நின்றது. வழிபாடு-முதனிலை திரிந்த தொழிற் பெயர். சிறப்பு - கருவியாகுபெயர். தெய்வத்தையும் என்பது செய்யுள் விகாரத்தால், 'தெய்வதையும்' என நின்றது. செய்வதே என்பதன் ஏகாரம் - பிரிநிலை.

சுப காரியங்களைச் செய்வோர் அவற்றிற்கு நன்னாட் கொள்ள வேண்டுமெனல்.

44\. நாள்கூட்ட மூர்த்த மவற்றோடு நன்றாகக்
கோள்கூட்டம் யோகங் குணனுணர்ந்து-நீள்கூட்ட
ஆற்றானு மல்லானு மைந்து முணர்வானாற்
பெற்றானாட் கொள்க பெரிது.

(ப - ரை) தோள் - (வதூவரர்களுடைய) தோள்களை, கூட்டல் உற்றானும் - சேர்ப்பித்தலைப் பொருந்தியவனும் (அதாவது: அவர்கள் தோள்கள் சேரும்படி அவர்களுக்கு மணஞ் செய்விக்கத் தொடங்கியவனும்), அல்லானும் - அச் செய்கை அல்லாதவனும் (அதாவது: அச் செய்கையின்றி வேறு நற்காரியங்களைச் செய்யத் துணிந்தவனும்), ஐந்தும் உணர்வானால் - (வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம் என்னும்) பஞ்சாங்கங்களின் தன்மைகளை உணரக் கூடிய ஜோதிடனால், நாள் கூட்டம் - நல்ல நாளின் சேர்க்கையையும், மூர்த்தம் - நன்முகூர்த்தத்தையும், அவற்றோடு - அவற்றுடனே, நன்று ஆம்-நன்மையாகிய, அக்கோள் கூட்டம் - அந்தக் கிரகத்தின் சேர்க்கையையும், யோகம் - நல்ல யோகத்தையும், குணன் - அவற்றின் குணங்களையும், உணர்ந்து - ஆராய்ந்தறிந்து, பெரிது நாள் - உயர்ந்ததாகிய நாளை, பெற்றான் - (மேற்கூறிய இருவருள் ஒவ்வொருவனும்) அடைந்தவனாய், கொள்க-(அச் சுபகாரியங்களுக்கு) ஏற்படுத்திக் கொள்க.

(க - ரை) சுபகாரியங்களைச் செய்வோர், சோதிடனால் நாள் முகூர்த்தம் முதலியவற்றை ஆராய்ந்துணர்ந்து அவற்றிற்கு நல்ல நாளை ஏற்படுத்திக் கொள்ளவேண்டு மென்பதாம்.

(வி - ரை) நாள் என்பதில் வாரம், திதி, நக்ஷத்திரம் மூன்றும் அடங்கும். முகூர்த்தம் - இரண்டு நாழிகை நேரங் கொண்ட சுபவேளை; இதில் இலக்கினமும் அடங்கும். கிரகங்கள் - ஆதித்தன் முதலிய ஒன்பதும். யோகம் - விஷ்கம்பம் முதலிய இருபத்தேழும்; மூன் நாளில் மூன்றும் அடங்கியதுபோல இங்கு யோகங் கூறவே கரணமும் அதில் அடங்குமெண்க; கரணம் - பவமுதலிய பதினொன்றும். பஞ்சாங்கங்களாவன:- வாரம், திதி, நக்ஷத்திரம், யோகம், கரணம் என்பனவாம். ஒவ்வொரு தினத்திலும் இந்த ஐந்தும், இலக்கினங்களும், முகூர்த்தங்களும் மாறி மாறி வரும். அவற்றுள் நல்லன

கொண்டு தீயன விலக்கி நல்லன அமைந்த நாட்களைச் சுபகாரியங்களுக்குக் கொள்ளவேண்டும். இல்லறத்தார்க்கு இங்ஙனம் செய்தல் இன்றியமையாததாம். நல்ல நாளை உணர்தல் எல்லோருக்கும் இயலாதாதலின், அதனை, 'பஞ்சாங்கங்களை யுணர்ந்த ஜோதிடனால் தெரிந்துகொள்ள வேண்டும்' என்றார் ஆசிரியர். நாளில் வாரம் முதலியன அடங்குமெனவும், முகூர்த்தத்தில் இலக்கினமும் அடங்குமெனவும், யோகத்தில் கரணமும் அடங்கு மெனவும், விரித்துரைத்தது, "எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்" என்னும் உத்தியால் ஆசிரியர் விட்டவற்றைக் கூட்டி யுரைத்ததாமென்க, அவை பஞ்சாங்கங்களிற் சார்ந்தவைகளாதலின். ஸ்திரீ புருஷ கூட்டத்திற்குத் 'தோள் கூட்டம்' என்றல் மரபு; "நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பிற், பிறர்க்குரியா டோடோயா தார்." என்னுந் திருக்குறள் செய்யுளாலும், "மெல்லினல்லாடோள்சேர்." என்னும் ஔவை திருவாக்கானும் இஃதுணரப்படும். பெற்றான்-முற்றெச்சம். கொள்க-வியங்கோள்.

பெண்ணின் அருமையான குணம் இன்னதென்பது.

45. பேணடக்கம் பேணாப் பெருந்தகைமை பீடுடைமை
நாணொடுக்க மென்றைந்து நன்றாகப்—பூணொடுக்கம்
பொன்வரைக் கோங் கேர்முலைப் பூந்திருவே யாயினும்
தன்வரைத் தாழ்த்த லரிது.

(ப - ரை) பொன் வரை - பொன்மலை போன்றவைகளும், கோங்கு ஏர்-கோங்கரும்பின் அழகினையுடையவைகளுமான, முலை - தனங்களையுடைய, பூ - தாமரை மலரில் இருக்கின்ற, திருவே ஆயினும் - இலக்குமியே ஆனாலும், (பெண்ணா யிருப்பவள்), பேண் - சுற்றத்தாரைப் பாதுகாத்தலும், அடக்கம்-பணிவுடைமையும், பெருந்தகைமை - உயர்ந்த அழகும், பீடு உடைமை - பெருமைக் குணங்கள் உடைமையும், நாண் ஒடுக்கம் - வெட்கத்தா லுண்டாம் மறைவும்,

என்ற ஐந்தும் - என்ற ஐந்து தன்மைகளும், நன்று ஆக - (தன்னிடத்தே) நல்ல விதங்களாக அமைய, பூண் - மனத்திற் சேர்கின்ற, ஒடுக்கம்- அடக்கத்தை, பேணு - பேணி, தன் வரை - தன் அளவில், தாழ்த்தல் - தன்னைத் தாழ்த்திக்கொள்ளுதல் (அதாவது, தற்பெருமை யடையாதிருத்தல்), அரிது - (அப் பெண்ணிற்கு) அருமையான குணமாம்.

(க - ரை) ஒரு பெண், செல்வத்திற் சிறந்த இலக்குமியேயாயினும், சுற்றந் தழுவுதல், அடக்கம், அழகு, உயர்ந்த குணங்கள், நாணம் இவைகள் நன்றாக அமையப்பெற்று மனவொடுக்கங் கொண்டு தன்னை எவர்க்கும் பணிவுடையவளாகக் கருதிக் கொள்வதே பெண்ணிற் குரிய குணங்களில் மிக அருமையானதாம் என்பதாம்.

(வி - ரை) பேண் - முதனிலைத் தொழிற்பெயர். 'பேணல்' என்பது பாதுகாத்தல் என்ற பொருளைத் தருவதாயினும், சுற்றந் தழுவல் இல்லறப் பெண்டிர்க்குரிய குணங்களுள் முதன்மை பெற்றதாதலின், அவர்களுடைய நற்குணங்களைத் தொகுத்துக் கூறும் இவ்விடத்து அது குறிப்பாற் சுற்றந் தழுவலுக்குக் கொள்ளப்பட்டது. அடக்கம் - புருடரைப்போல வெளியேறி எதிலும் பிரவேசியாதிருத்தல். தகைமை - அழகு. பீடு - பெரிய குணங்கள்; அதாவது: ஈகை முதலியவைகளாம். பூணொடுக்கமாவது: மனத்திற் பூண்ட அடக்கம்; மனவடக்கமாவது அதனைக் கெட்ட வழிகளிற் செல்லவொட்டாது தடுத்தல். முதலிற் கூறிய அடக்கம் வாக்கு, காயங்களின் அடக்கம். சிலர் செய்கையில் அடங்கி யிருப்பினும் அவர்களுடைய மனம் கெட்ட வழிகளிற் புகுந்து அலைந்துகொண்டே யிருக்கும்; நினைத்தலும் செய்தலோ டொக்குமாதலின் அதுவும் பாதகமாம். அதுபற்றியே ஈண்டு இரண்டடக்கங்களுங் கூறப்பட்டன. ஒரு பெண், இலக்குமிபோலச் சிறந்தவளே யெனினும் சுற்றந்தழுவல், வாக்குக், காயங்களின் அடக்கம், பேரழகு, பெருங்குணங்கள்,

காணம் ஆகியவற்றைக் கொண்டு, மனவொடுக்கமும் பூண்டு தன்னை எவர்க்கும் பணிவுடையவளாக்கிக் கொள்ளவேண்டும்; இதுவே அவளுக்கு அருமையான குணமாம். இஃதின்றேல் அவள் சிறப்படைய மாட்டாள். இங்கே கூறிய அழகாவது புருஷன் விரும்புமாறு தன்னை அலங்கரித்துக்கொள்ளுதலாம். பேணு - செய்யாவென்னெச்சம். பொன்வரையும், கோங்கரும்பும் தனங்கட்கு உருவ உவமைகள். 'பொன்வரை' என்பதற்கு, 'பொன் போன்ற இரேகை' எனப் பொருளுரைத்தலும் அமையும் தனங்கட்குப் பொற்கீற்றுக்கள் உண்மையின். திருவென்ற குறிப்பால் பூ - தாமரை மலரெனக் கொள்ளப்பட்டது. அரிது-சிறப்புணர்த்தி நின்றது; சிறந்த பொருள் அரும்பொருளென வழங்குதல் காண்க.

இன்னதால் இன்னது உயருமெனல்.

46. வார்சான்ற கூந்தல் வரம்புயர வைகலும்
நீர்சான் றுயரவே நெல்லுயரும்—சீர்சான்ற
தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயரும்
ஓவா துரைக்கு முலகு.

(ப - ரை) வார் சான்ற-நீட்சி மிகுந்த, கூந்தல்-அளகபாரத்தையுடைய பெண்ணே!, வைகலும் - தினந்தோறும், (வயல்களில்), வரம்பு - வரப்பானது, உயர - உயர்ந்திருக்க, (நீர் நிலைத்து நிற்கும்; அங்ஙனம்), நீர் சான்று-நீர் மிகுந்து, உயரவே-உயர்ச்சியடையவே, (அந் நீர் வளத்தால்), நெல் உயரும்-நெற்பயிரானது வளர்ந்து உயர்வடையும், (அங்ஙனம் வளர்ந்த நெல் நல்ல விளைவைக் கொடுக்கக் குடித்தனக்காரர்கள் செழிப்புறுவார்கள்; அவ்வாறு நிலவளத்தால்), சீர் சான்ற-சிறப்பு மிகுந்த, தாவா-அழியாத, குடி உயர-குடித்தனக்காரர்கள் உயர்வடைய, தாங்கரும்-(பிறரால்) தாங்குதல் அரிதாகிய, (அதாவது, பிறர் அடைய முடியாத), சீர் - சிறப்பினையுடைய, கோ

உயரும் - அரசன் உயர்வான், (இக் காரியங்கள் இங்ஙனம் நிகழு மென்பதை), உலகு - இவ் வுலகமானது, ஓவாது - ஒழியாமல், உரைக்கும் - சொல்லும்.

(க - ரை) வயல் வரம்புயர நீர் பெருகி உயரும்; நீர் வளத்தால் நெல் செழித்தோங்கும்; நெற்கள் உயர்வதால் குடித்தனக்காரர்கள் உயர்வார்கள்; அவர்கள் விருத்தியடையவே அரசனும் சிறப்புறுவான் என்பதாம்.

(வி - ரை) வரம்பு-நிலத்தைச் சுற்றி யிடப்படும் வரப்பு; நிலத்தின் நாற்பக்கத் தெல்லையை விளக்குதற்கு இஃதிடப்படுவதாதலின் வரம்பெனப் பெயர் பெற்றது; வரம்பென்பதற்கு எல்லை யென்பது பொருள். இஃதெல்லை குறித்தற் கமைந்ததெனினும், நீரைத் தேக்கிப் பயிரை வளர்த்தற்கும் இன்றியமையாததாம். ஆதலின், இவ் வரம்பு எவ்வளவுக் கெவ்வளவு உயர்ந்திருக்கின்றதோ அவ்வளவுக் கவ்வளவு நீரும் உயர்ந்து நிற்கும். நீர் வற்றாதிருத்தலே நெற்பயிர் விருத்திக் கனுகூல மாதலின், நீர் மிகுதிக்குத் தக்கவாறு நெற்பயிர் விருத்தி யடைந்து நல்ல விளைவைக் கொடுக்கும். விளைவு அதிகரிக்கக் குடி ஜனங்களும் விருத்தியடைந்து அரசனுக்குப் பகுதியை அதிகமாகச் செலுத்தி வருவார்கள். அதனால் அரசனுக்குச் செல்வம் அதிகரிக்கும். ஆகவே, அரசன் குடிகளுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து பயிர்த்தொழில் விருத்தியை நாடவேண்டு மென்னும் முக்கிய கருத்து இச் செய்யுளில் அடங்கியுளது.

'வார்சான்ற கூந்தல்' என்பது 'நீண்ட கூந்தலையுடைய பெண்' எனப் பொருள் படுமாதலின், வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; வார்சான்ற என்னுந் தொடர் ஒரு சொன்னீர்மைத்தாய் 'நீண்ட' என்று பொருள்படும். பெண்ணுக்கு வந்த இவ் வன்மொழித்தொகைக் காரணப்பெயர் மகடூஉ முன்னிலை; இஃ

தண்மைவிளி யாகலின், விளியுருபேலா தியல்பாயிற்று. சான்ற-என்பது சால என்னும் உரிச்சொல்லடியிற் பிறந்த பெயரெச்சம். சான்று-அச் சொல்லடியாகவே தோன்றிய வினையெச்சம். தாவா - எதிர்மறைப் பெயரெச்சம். அரசன் சிறப்பைப் பிறர் அடைதல் அருமையாகலின், 'தாங்கருஞ் சீர்க்கோ' என்றார் ஆசிரியர். தாங்கு - முதனிலைத் தொழிற்பெயர். ஓவாது - வினையெச்சம். குடி - ஜாதி யொருமை. உலகு - இடவாகுபெயர்; அதிலுள்ள மனிதரை யுணர்த்தும். தாவாது - என்பதில், தா - பகுதி. ஓவாது - என்பதில் ஓ - பகுதி. பதவுரையில் இடையிடையே சிற்சில சொற்கள் பொருள் முடிபுக் கேற்ப இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டன.

அறிஞர் செய்யத் தக்கதும், தகாதனவும்
இவை யெனல்.

47. அழியாமை யெத்தவமுஞ் சார்ந்தாரை யாக்கல்
பழியாமை பாத்தல்யார் மாட்டு—மொளியாமை
கன்றுசா வப்பால் கறவாமை செய்யாமை
மன்றுசார் வாக மனை.

(ப - ரை) (இவ்வுலகத்தில் துன்பமற்ற வாழ்வுடனிருந்து நற்கதியடைய விரும்பும் அறிஞர்), எத்தவமும் - எந்தத் தவத்தினையும், அழியாமை - அழியாதிருக்க, சார்ந்தாரை - தம்மை யடுத்திருக்கும் சுற்றத்தாரை, ஆக்கல் - விருத்தி யடையச் செய்வதை, பழியாமை - நிந்தித்து விலக்காதிருக்க, யார்மாட்டும் - எவரிடத்தும், பாத்தல் - பகுத்துண்ணுதலை, ஒளியாமை - மறைக்காதிருக்க, கன்று சாவ - கன்றானது இறந்துபோக, (அதனை யிழந்த பசுவினிடத்தில் தோற் கன்று முதலியன காட்டி), பால் கறவாமை - பால் கறவாதிருக்க, மன்று சார்வாக - பலர்க்கும் பொதுவான வெளியிடத்திேனாரமாக, மனை செய்யாமை - வீடெடாதிருக்க (அதாவது வீடுகட்டாதிருக்க.)

(க - ரை) நன்மையை நாடும் அறிஞர் தவத்தை அழிக்காம லும், சுற்றத்தாரை விருத்தி செய்வதை விலக்காமலும், பகுத்துண்ணலை மறைக்காமலும், கன்றிழந்த பசுவில் பால் கறவாமலும், பொதுவெளியில் வீடு கட்டாமலும் இருக்கக்கடவர் என்பதாம்.

(வி - ரை) தவத்தை யழித்தலாவது, தாம் செய்யுந் தவத்தை யும், பிறர் செய்யும் தவத்தையும் நிறைவேறவொட்டாமற் செய்தலாம்; இச் செய்கையால் தீக்கதியே கிடைக்கும். ஐசுவரியமுள்ள ஒருவ னிடத்தில், வறுமையுற்ற சுற்றத்தார்கள் உதவிபெற நாடி அடிக்கடி வருவார்கள்; அங்ஙனம் அவர்கள் வருவது அவனுக்குக் கஷ்டத் தைக் கொடுப்பதாயினும் அவன் அவர்களை நிந்தித்து விலக்குதல் பாவமாம்; அவர்களை உயரச்செய்தால் இகத்தும் பரத்தும் நலமே யுண்டாகும். ஒருவன், தன்னிடம் வந்த எவர்க்கும் ஆகாரத்தினைப் பகுத்துதவி யுண்ணலே சிறந்த தர்மமாம். கன்றிழந்த பசுவில் பால் கறத்தல் மகா பாதகமாம். பலர்க்கும் பொதுவான வெளியிடத் தில் ஓரமாகச் சிறிது பாகத்தை அபகரித்து அதில் வீடு கட்டினல் பொது ஜனங்க ளெல்லோருக்கும் விரோத முண்டாகும்; பொது நிலத்தை அபகரித்த பாவத்தால் துர்க்கதியும் சித்திக்கும். அழி யாமை, பழியாமை, ஒளியாமை, கறவாமை, செய்யாமை என்பன மையீற்று வியங்கோள்கள்; மையீற்று வியங்கோளுக் கிலக்கணம் 19-ஆம் செய்யு ளுரையிற் காட்டப்பட்டுளது. இனி, இவற்றைத் தொழிற்பெயர்களாகக் கோடலு மொன்று; அங்ஙனங் கொள்ளின் 'நன்மை யென்று சொல்வர் பெரியோர்' என்னும் முடிக்குஞ் சொற்கள் இசையெச்சமாக வருவித் துரைத்துக்கொள்ளவேண்டும். 'கன்று சாவப் பால் கறவாமை' என்பதற்கு, 'கன்று இறந்துபோ கும்படி அதற்குப் பால் விடாமல் கறவாமை' எனப் பொருளுரைப்பி னும் அமையும். மன்று - ஊரார்க்குப் பொது வெளி.

நல்லார் இன்னவற்றைக் கொல்லா ரென்பது.

48. நசைகொல்லார் நச்சியார்க் கென்றுங் கிளைஞர் [லார்
மிசைகொல்லார் வேளாண்மை கொல்லா ரிசைகொல்
பொன்பெறும் பூஞ்சுணங்கின் மென்முலையாய் நன்
என்பெறினுங் கொல்லா ரியைந்து. [குணர்ந்தார்

(ப-ரை) பொன் பெறும் - பொன் னிறத்தைக் கொண்ட, பூ - அழகிய, சுணங்கின் - தேமலையுடைய, மெல் - மெல்லிய, முலை யாய் - தனங்களுடைய பெண்ணே!, நன்கு - நன்மையை (அதாவது நல்லறத்தை), உணர்ந்தார் - அறிந்தவர்கள், நச்சியார்க்கு - தம்மை விரும்பினவர்களுக்கு, (தம்மிடத்தில் எதையேனும் பெற்றுக் கொள்ளவேண்டுமென் றுண்டாய), நசை-விருப்பத்தை, கொல்லார்- (அதனைக் கொடாமல்) கெடுக்கமாட்டார்கள்; என்றும் - எப்பொழு தும், (தம்மைச் சார்ந்திருக்கும்), கிளைஞர்-சுற்றத்தார்களின், மிசை- உணவுண்ணுதலை, கொல்லார் - கெடுக்கமாட்டார்கள்; வேளாண்மை- பிறர்க்குச் செய்யும் உபகாரத்தை, கொல்லார் - கெடுக்கமாட்டார்கள்; இசை - தமக்கு வரும் கீர்த்தியை, கொல்லார்-கெடுக்கமாட்டார்கள்; என் பெறினும் - எவ்வகைச் சுகத்தை அடைவதா யிருப்பினும், இயைந்து - மனம் பொருந்தி, கொல்லார் - பிற வுயிர்களைக் கொலை புரியமாட்டார்கள்.

(க - ரை) நன்மையை உணர்ந்தவர்கள், தம்மை விரும்பிய வரின் விருப்பத்தைக் கெடுத்தலையும், சுற்றத்தார் உணவுண்ணுதலைக் கெடுத்தலையும், உபகாரத்தைக் கெடுத்தலையும், கீர்த்தியைக் கெடுத் தலையும், பிற வுயிர்களைக் கொல்லுதலையும் செய்யார் என்பதாம்.

(வி - ரை) நச்சியார் - ஒருவரை விரும்பி அவரோடு சிநேகஞ் செய்தவர், அல்லது அவரிடம் வேலைக் கமர்வோர். அங்ஙனம் ஒரு தனவந்தரை யடுத்த மற்றொருவர் அவரிடத்தே எதையேனும் பெத்

றுக்கொள்ள விரும்புதல் இயற்கை. ஆதலின், அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றாதிருத்தல் பாதகமாம். ஒரு செல்வவந்தருடைய சுற்றத்தார் உரிமை பாராட்டி அவருடைய இல்லத்தில் உணவருந்துதலையே விரும்புவர்; ஆதலின், அவர்களுக்கு உணவளிக்காம விருப்பது பாவமாம். பிறர்க்கு உபகாரஞ் செய்தல் புண்ணிய மென்பது பிரசித்தம். மனிதர்க்குக் கீர்த்தி என்றும் நிலைபெற்று அவர் பெய்யரை விளக்குவ தாதலின், அதனைத் தேட முயலவேண்டுமே யன்றிக் கெடுக்க முயல லாகாது. உயிர்க்கொலை மகா பாதக மாதலால் அஃதறவே கூடாது; இதுபற்றியே ஆசிரியர், 'என்பெறினும் கொல்லார்' என்றார். 'வேளாண்மை கொல்லார்' என்பதற்குப் 'பலர்க்கும் உபகாரமா யிருக்கும் பயிர்த்தொழிலைக் கெடுக்கமாட்டார்கள்' எனப் பொருளுரைப்பினும் பொருந்தும். மென்முலையாய் - மகடூஉ முன்னிலை. முன்னுள்ள கொல்லுதல்கள், கெடுத்தற் பொருளில் நின்றன. மிசை - தல்லீறு கெட்ட தொழிற்பெயர்; இஃது உணவுண்ணலை யுணர்த்திநின்றது. நன்கு - பண்புப்பெயர். பொன் - பொன்னுபாரணமெனினுமாம்.

இத்தகையனை வேந்தனுக்குதல் விதி யென்பது.

49. நீண்டநீர் காடு களர்நிவந்து விண்டோயு
மாண்ட மலைமக்க ளுள்ளிட்டு — மாண்டவர்
ஆய்ந்தன வைந்து மரணு வுடையானை
வேந்தனு நாட்டல் விதி.

(ப - ரை) மாண்டவர் - மாட்சிமைப்பட்ட பெரியோர்கள், (அரசர்க்கு இவை தகுமென), உள்ளிட்டு - மனத்துட்கொண்டு, ஆய்ந்தன - ஆராய்ந் தெடுக்கப்பட்டனவாகிய, நீண்ட நீர் - நகரைச் சுற்றி நீண்டு வளைந்து பரவி யாழ்ந்த நீரும், காடு - வனமும், களர் - சேற்று நிலமும், நிவந்து - உயர்ந்து, விண் தோயும் - ஆகாயத்தைத்

தொடுகின்ற, மாண்ட - மாட்சிமைப்பட்ட, மலை - பர்வதமும், மக்கள் - மனிதர்களாகிய காலாட்களும், (ஆகிய), ஐந்தும் - ஐந்தையும், அரண் ஆ உடையானை - தனக்குக் காவலாக வுடையவனை, வேந்தனு - அரசனாக, காட்டல் - (பெரியோர்) ஸ்தாபிப்பது, விதி - நூற்களின் கிரமமாம்.

(க - ரை) நீர், காடு, சேற்றுநிலம், மலை, காலாட்படை இவ்வைந்தையும் தனக்குக் காவலாக வுடையவனை ஒரு நாட்டிற்கு அரசனாகப் பெரியோர் ஸ்தாபிப்பது விதி யென்பதாம்.

(வி - ரை) நீரரண் அகழி அல்லது வேறு நீர் நிலை; இது ஆழ முடையதாயும், அகல முடையதாயும், நீட்சி யுடையதாயும், பகைவர் தாண்டிச்செல்ல முடியாவண்ணம் நகரை வளைந்துகொண் டிருக்கும்; அதுபற்றியே இது 'நீண்ட நீர்' எனப்பட்டது. காடு - காவற்காடு; இதுவும் பகைவர் நுழைய முடியாதபடி நகரைச் சுற்றி அடர்ந்திருக்கும். சேற்று நிலம் - பகைவர் கால் வைத்தால் அவர்கள் கால்களை உள்ளிழுத்து நடக்க முடியாதபடி செய்வது. மலை-பகைவர் ஏறிக் கடந்து செல்லவொண்ணுமல் நகரைச் சுற்றி உயர்ந்திருப்பது. இவற்றை யெல்லாம் கடந்து பகைவர் உள்ளே வந்தால் அவர்களை எதிர்த்து நாசப்படுத்தக்கூடியது காலாட்படை. இவ் வைந்தையும் உடைய அரசனே தன்னுடைய அரசைக் காப்பாற்றிக்கொள்ளும் வல்லமையுடையவனுவான். ஆதலின், இவை அரசர்க்கு இன்றியமையாதனவாகக் கூறப்பட்டன. 'வேந்தனு நாட்டல் விதி' என்றதனல், 'அரசனை, பொது ஜனங்களாகிய பெரியோர்களே தேர்ந்தெடுத்து நியமிக்க அருகராவார்' என்பது பெறப்படும். 'மக்கள்' என்னும் உயர்திணைப்பெயர், 'நீர்' முதலிய அஃறிணைப் பெயர்களோடு கலந்து மிகுதியால் அஃறிணை முடிபை யேற்றது. உள்ளிட்டு என்பது, சேர்த்து என்னும் பொருளிலும் வரும். ஒரு கூட்டத்தில் சேர்ந்த

வர்களை உள்ளிட்டார் என்பது பாண்டிநாட்டு வழக்கு; பண்டைத் தமிழ் வழக்குமாம்.

உழுதொழி லுடையானுக்குக் கேடு தருவன.

50. பொச்சாப்புக் கேடு பொருட்செருக்குத் தான்கேடு
முற்றாமை கேடு முரண்கேடு—தெற்றத்
தொழின்மகன் றன்னோடு மாற்றாயி னென்று
முழுமகற்குக் கேடி னுரை.

(ப - ரை) உழு மகற்கு - உழு தொழிலை (பயிர்த்தொழிலை) உடைய மனிதனுக்கு, பொச்சாப்பு - மறதி, கேடு - கேடாம்; பொருள் செருக்கு - பொருள் மிகுதியா லுண்டாகும் அகங்காரம், கேடு - கெடுதியாம்; முற்றாமை - (அறிவு) முதிராதிருத்தல், கேடு-கெடுதியாம்; முரண் - (பிறரொடு) மாறுபடுதல் (அதாவது, விரோதங் கொள்ளுதல்), கேடு - கெடுதியாம்; தெற்ற - தெளிவாக (அதாவது, வெளிப்படையாக), தொழில் மகன் தன்னோடு - தனக்கு அடிமைத் தொழில் புரியும் மனிதனோடு, மாறு ஆயின்-விரோத முண்டானால், என்றும் - எப்பொழுதும், கேடு - கேடாகும், உரை - இதனைக் கூறுவாயாக.

(க - ரை) பயிர்த்தொழில் செய்வோனுக்கு மறதியும், அகங்காரமும், அறிவு முதிராமையும், பிறரொடு மாறுபடுதலும், வேலைக்காரனோடு விரோதங் கொள்ளுதலும் கேட்டைத் தருவனவாம் என்பதாம்.

(வி - ரை) பயிர்த்தொழில் செய்வோன் மறதியுடையவனாயிருந்தால் இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன பயிர்களைச் செய்யவேண்டும், இன்ன இன்ன வேலைகளைச் செய்யவேண்டும் என்னும் நியமங்கள் தவறி நஷ்ட மடைவான்; செருக்குடையவனாயிருந்தால் தன்னை யாளும் அரசர் முதலியோரால் நெருக்கப்பட்

டழிவான்; அறிவற்றவனு யிருந்தால் இன்னதில் பலனுண்டு இன்னதில் இல்லை என்னும் பாகுபாட்டை யுணராமல் பயிர்ச்செய்து நஷ்டமடைவான்; பயிர்த்தொழில் பலருடைய சகாயத்தாலும் நடைபெறுவதாதலின், அதனை யுடையான் பலரோடும் விரோதங்கொண்டால் எவரும் அவனுக்குச் சகாயம் செய்யமாட்டார்கள்; அதனால் அவன் தொழில் செவ்வனே நடைபெறாமல் நஷ்டமுண்டாகும். பயிர்த்தொழிலுடையானுக்குத் தன் வேலைக்காரனிடத்தில் பகை ஏற்படுமாயின், அவன் எப்பொழுதும் விசுவாசத்தோடு பாடுபடமாட்டான்; அதனால் பெரு நஷ்டமாம். செருக்குத்தான் என்பதில், தான்-அசை. முற்றாமை - தொழிற்பெயர். கேடு-முதனிலை திரிந்த தொழிற்பெயர். தொழின் மகன் றன்னோடு என்பதில், தன் - சாரியை கேடினுரை என்பதில் இன் -சாரியை.

இறைவனுக்கு நன்றும் தீதும்.

51. கொல்லாமை நன்று கொலைதீ தெழுத்தினைக்
கல்லாமை தீது கதந்தீது—நல்லார்
மொழியாமை முன்னே முழுதுங் கிளைஞர்
பழியாமை பல்லார் பதி.

(ப - ரை) பல்லார் - பலர்க்கும், பதி - தலைவனுயிருப்பவன், நல்லார் - நன்மையை யுடையவர்கள் (அதாவது: அறிவுடையவர்கள்), முழுதும் - நன்மார்க்கம் முழுவதையும், மொழியாமை முன்னே - தனக்குச் சொல்லாததற்கு முந்தியே, (தானகவே), கிளைஞர்-தன்னுடைய சுற்றத்தார்கள், பழியாமை-தன்னைப் பழியாதிருத்தலும், கொல்லாமை - பிற வுயிர்களைக் கொல்லாதிருத்தலும், நன்று - நன்மையாம்; கொலை-பிற வுயிர்களைக் கொல்லுதல், தீது - தீமையாம்; எழுத்தினை-எழுத்துக்களை, கல்லாமை-கல்லாதிருத்தல், தீது - தீமையாம்; கதம் - கோபஞ் செய்தல், தீது - தீங்காம்.

(க-ரை) பலர்க்கும் தலைவனா யிருப்பவன், தனக்கு அறிவுடை யார் புத்தி கூறுவதற்கு முந்தியே தானாகவே சுற்றத்தாரால் பழிக்கப் படாதிருத்தலும், உயிர்க் கொலை புரியாதிருத்தலும் நன்மையாம்; கொலை செய்தலும், எழுத்துக்களைக் கல்லாதிருத்தலும், கோபஞ் செய்யாதிருத்தலும் தீமையுடையனவாம் என்பதாம்.

(வி-ரை) பலர்க்கும் தலைவ னாகத்தக்கவன், இயற்கையிலேயே கிளைஞர் பழியாதிருத்தல் முதலிய நற்குணங்கள் அமைந்தவனா யிருத் தல்வேண்டும்; பிறர், நன்மார்க்கங்களை உணர்த்திய பின் தெரிந்து செய்பவன் சிறப்புடைய னாகான். அதனானே ஆசிரியர், 'நல்லார் மொழியாமை முன்னே முழுதுங் கிளைஞர், பழியாமை பல்லார் பதி, கொல்லாமை நன்று...' என்றார். 'பல்லார்பதி நல்லார் முழு தும் மொழியாமை முன்னே கிளைஞர் பழியாமை, கொல்லாமை நன்று...' எனக் கூட்டுக; இது கொண்டு கூட்டு; "யாப்படி பலவி னுங் கோப்புடை மொழிகளை, ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட் டே" என்பது (நன் - பொது - கஎ) ஆம் சூத்திரம். பல்லோர்க்கும் பதியாயிருப்பவன் சுற்றத்தார் புகழ அவர்களைத் தழுவி, கொலையை நீக்கி, நல்ல கல்விகளைக் கற்று, கோபத்தை நீக்கி வாழ்ந்தால் மாத்தி ரமே அவனுக்குச் சிறப்புண்டு. கொல்லாமை, கொலை, கல்லாமை, பழியாமை என்பன தொழிற்பெயர்கள். நன்று-நன்மை யென்னும் பண்புச்சொல் விகாரம். தீது - தீமை யென்னும் பண்புச்சொல் விகாரம். மொழியாமை முன்னே - எல்லைப் பொருளில் வந்த நான் காம் வேற்றுமை யுருபு தொக்க தொகை; 'மொழியாமைக்கு முன் னே' என விரியும்.

நன்மை யுடையனவும் தீமை யுடையனவும்,
அரியாரும், பெரியாரும்.

52. உண்ணாமை நன்றவா நீக்கி விருந்துகண் மா
றெண்ணாமை நன்றிகழல் தீதெளியார்—எண்ணின்

அரியரா வார்பிறரிற் செல்லாரே யுண்ணார்
பெரியரா வார்பிறர் கைத்து.

(ப-ரை) (இல் வாழ்வோர்), அவா நீக்கி - பிறருடைய விருப்பத்தை அகற்றிவிட்டு, உண்ணாமை - (தாம் மாத்திரம் நல்ல உணவுகளை) உண்ணாதிருத்தல், நன்று - (அவர்க்கு) நன்மையாம்; விருந்துகள் - விருந்தினர்களிடத்தில், மாறு - விரோதப்பான்மை, எண்ணாமை - நினையாதிருத்தல், நன்று - நன்மையாம்; எளியார் - ஏழைகளை, இகழ்தல்-இகழ்ந்துரைத்தல், தீது - தீமையாம்; எண்ணின் - ஆராயுமிடத்து, அரியர் ஆவார் - மனிதருக்குள் அருமையானவர் (அதாவது மனிதரிற் சிறந்தவர்), (எவரெனின்), பிறர் இல் - அன்னியரின் மனையாளிடத்தே, செல்லார் - (அவளை விரும்பிச்) சேராதவராவர்; பெரியர் ஆவார் - உயர்ந்தோராவர், (எவரெனில்), (ஒரு தொழிலும் செய்யாமல் ஒரு குடும்பத்திற் சேர்ந்திருந்துகொண்டு), பிறர் -(அக் குடும்பத்தாராகிய) பிறரின், கைத்து-கையிலுள்ளதை, உண்ணார் - அனுபவியாதவரே.

(க - ரை) இல்லறத்தார், பிறர் விரும்பியவற்றை அவர்க்குக் கொடாமல் அவர் விருப்பத்தைக் கெடுத்துத் தாம் மாத்திரம் உண்ணாதிருத்தல் நன்று; விருந்தினர்மீது வெறுப்படையாதிருத்தல் நன்று; எளியாரை இகழ்தல் தீது; பிறர் மனை விரும்பாதவரே மனிதரிற் சிறந்தோர்; பிறர் கையி லுள்ளதை அனுபவிக்க எதிர் பாராதிருப்பவரே பெரியோர் என்பதாம்.

(வி - ரை) இல்லறத்தார், தங்களிட மிருக்கும் உணவுப் பொருள்களைப் பிறர் பார்த்து விரும்பும்போது அவர்க் கவற்றைப் பகுத்திட் டுண்ணவேண்டும்; அங்ஙனம் கொடாமல் அவர் விருப்பத்தைக் கெடுத்தல் மகா பாதகமாம். விருந்தினர்மீது வெறுப்புறாமையும், பிறர் மனை விரும்பாதிருத்தலும் சிறந்த தர்மங்க ளென்பது பிரசித்

தம். ஏழைகள் உணவுக்கும் ஆடை முதலியவற்றிற்கும் கஷ்டப்படும் போது செல்வச் செருக்குடைய சிலர், 'இவர்களுடைய உடையைப் பாருங்கள், நகையைப் பாருங்கள், உணவைப் பாருங்கள்' என்று பரிகசிப்பதுண்டு; இது மகா தோஷமாம். 'நமக்கும் இந்நிலைமை ஒரு சமயத்தில் வந்துவிடும்' என்றுணர்ந்து அங்ஙனம் ஏழைகளை இகழா திருப்பவர்களே அறிஞராவர். ஒருவன் ஒரு தொழிலும் செய்யாமல் பிறன் கையை எதிர்பார்த்து வாழ்வது மிக இழிவாம். இல்லிற் குரியானை 'இல்' என்றார் ஆசிரியர் இடவாகுபெயரான். கைத்து-கையிலுள்ளது.

பெண்கள் நாயகனை வணக்கும் மருந்து இவை யென்பது.

53. மக்கட் பெறுதன் மடனுடைமை மாதுடைமை
யொக்க வுடனுறைத லூணமைவு—தொக்க
அலவலை யல்லாமை பெண்மகளிர்க் கைந்து
தலைமகனைத் தாழ்க்கு மருந்து.

(ப - ரை) பெண் மகளிர்க்கு - உயர்ந்த பெண்மைக் குணம் நிறைந்த மாதர்க்கு, அலவலை அல்லாமை - அற்ப காரியங்களில்லாமல், மக்கள் - சற்புத்திரர்களை, பெறுதல் - பெறுதலும், மடன் உடைமை - பேதைமை யுடைத்தாயிருத்தலும், மாது உடைமை - அழகுடைத்தா யிருத்தலும், ஒக்க - எப்பொழுதும் சேர, உடன் உறைதல்-கணவனுடனே தங்கியிருத்தலும், ஊண்-கணவன் உண்டு மிஞ்சிய உணவில், அமைவு - விருப்பமும், (ஆக), தொக்க - கூடிய, ஐந்து - இவ்வைந்து குணங்களும், தலைமகனை - தங்கள் கணவனை, தாழ்க்கும் - இரங்கச் செய்கிற, மருந்து - மருந்தாகும்.

(க - ரை) பெண்கள், நல்வழியில் நன்மக்களைப் பெறுதலும், பேதைமை யுடைத்தாயிருத்தலும், அழகுடைத்தா யிருத்தலும், கண

வனைப் பிரியாதிருத்தலும், கணவன் உண்ட மிச்சிலை உண்ணலும் ஆகிய ஐந்தும் கணவனை இரங்கச் செய்யும் மருந்தாம் என்பதாம்.

(வி - ரை) பெண்கள் பிறனை யிச்சித்தலாகிய அற்பக் காரியத்தில் பிரவேசியாமல் பதிவிரதைகளாயிருந்து குலத்துக் கிழிவுறாத குழந்தைகளைப் பெறுவார்களாயின் கணவனுக்கு அவர்மீது மிகுந்த பக்ஷ முண்டாகும். வஞ்சனையற்ற பேதைகளாயிருந்தால், "அந்தோ! இவர்கள் பேதைகள்" என்ற இரக்கச் சித்த முண்டாகும். அழகுடையவர்களாயும், உடனுறைபவர்களாயு மிருந்தால் மிகுந்த பிரியம் ஏற்படும். மிச்சி லுண்டால் விசுவாச முண்டாகும். 'ஊண் அமைவு' என்பதற்கு, 'கணவனுக்குப் பிரியமான உணவைச் சமைக்குந் தொழிலில் பொருத்தமுடைமையும்' எனப் பொருளுரைப்பினும் அமையும். மடன்-மடம் என்பதன் போலி. மாது - விருப்பம்; அஃதிங்கே விருப்பத்தைத் தரும் அழகை யுணர்த்தி நின்றது. பெண்மகளிர் - பெண்மைக் குணம் நிறைந்த மாதர்; பெண்மைக் குணமாவது கற்புடைமையாம். தலைமகன்-சிறந்த மனிதன்; இஃதிங்கே ஒரு சொன்னீர்மைத்தாய்க் கணவனை யுணர்த்தி நின்றது.

மாதின் கற்புக்குக் காவலாவார்.

54. கொண்டான் கொழுந னுடன்பிறந்தான் றன்மாமன்
வண்டார்பூந் தொங்கல் மகன்றந்தை—வண்டாராய்
யாப்பார்பூங் கோதை யணியிழையை நன்கியையக்
காப்பார் கருது மிடத்து.

(ப - ரை) வண் தாராய்-வளப்பம் பொருந்திய மாலையை யணிந்த பெண்ணே!, கருதுமிடத்து-எண்ணுமிடத்து, யாப்பு ஆர்-கட்டுதலமைந்த, பூ கோதை - மலர்மாலையை அணிந்த, அணி இழையை - அழகிய ஆபரணங்களைத் தரித்த ஒரு பெண்ணை, நன்கு இயைய - நன்மை பொருந்த, காப்பார் - காப்பவர்கள், கொண்டான் - (அவளுக்குக்) கணவனும், கொழுநனுடன் பிறந்தான் - நாயகனோடு பிறந்

தவனும், தன் மாமன் - தன்னுடைய மாமனும், வண்டு ஆர் - வண்டுகள் நிறைந்து மொய்க்கின்ற, பூ தொங்கல்-மலர்மாலையை அணிந்த, மகன் - புத்திரனும், தந்தை - தகப்பனும், (ஆவர்.)

(க - ரை) ஒரு பெண்ணின் கற்புக்கழிவு வராமல் அவளைப் பாதுகாக்கத் தக்கவர், அவளுடைய கணவனும், கணவனுடன் பிறந்தானும், மாமனும், புத்திரனும், தந்தையும் என்பதாம்.

(வி - ரை) இங்குக் கூறிய ஐவருக்கும் ஒரு பெண்ணின் கற்பைக் காக்கும் விஷயத்தில் அதிக சிரத்தை யுண்டு; மற்றையர்க்கு அஃதிராது. ஆதலின், ஒரு பெண் இவர்களை நம்பி யிருக்கலாம்; மற்றையரை நம்புதல் கூடாது. மற்றையர் காவலி லிருந்தால் ஒரு சமயம் மந்த மதியினராயிருந்தால் அவர்களே கற்பழித்தலுங் கூடும். புத்திரர்களில் சிறுவயதுடையார் காவலுக் குரியராகார்; நல்லறிவடைந்த பருவ முடையாரே உரியராவர்; இதுபற்றியே ஆசிரியர், புத்திரர் தக்க வயது வந்தவர்களா யிருக்கவேண்டு மென்பதை விளக்குதற்கு, 'வண்டார் பூந்தொங்கல் மகன்' என்றார். இச் செய்யுட் கருத்தால், கற்பைக் காக்கும் கடன் பூண்ட மாதர்கள், இங்குக் கூறியவர்களுள் ஒருவரின் காவலிலேயே இருக்கவேண்டு மென்பது பெறப்படும். இக்காலத்தில், ஸ்திரீகளைத் தனியே எங்கும் சஞ்சரிக்க விடும் விபரீத நாகரிக முடையார் இச் செய்யுட் கருத்தை வேத வாக்காக உய்த்துணர்வாராக. வண் தாராய் - மகடூஉ முன்னிலை. அணியிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப் பெயர். நன்கு - நன்மை யென்னும் பண்புச் சொல்லின் திரிபு. யாப்பு - தொழிற்பெயர்.

ஆடவர் பெண் விருப்பொழிக்கும் விதம்.

55. ஆம்பல்வாய் கண்மனம் வார்புருவ மென்றைந்து
தாம்பல்வா யோடி நிறைகாத்த—லோம்பார்

நெடுங்கழைநீண் மூங்கி லெனவிகழ்ந்தா ராட்டுங்
கொடுங்குழை போலக் கொளின்.

(ப-ரை) பல்வாய் ஓடி - (பெண் விருப்பால்) பல விடங்களுக்கும் சென்று, நிறை - (பெண்களைச் சேரலாகா தென்னும்) மனவுறுதியை, காத்தல் ஓம்பார் - காத்தலைப் பேணாதவர் (அதாவது, பெண்ணாசை அதிகரித்துத் திரியும் ஆடவர்), ஆட்டும் - அசைக்கின்ற, கொடுங்குழை-வளைவாகிய குண்டலத்தை யணிந்த பெண்ணினிடத்தே, ஆம் - உண்டாயிருக்கின்ற, பல் - தந்தங்களும், வாய் - வாயும், கண் - நேத்திரங்களும், மனம் - உள்ளமும், வார் - நீண்ட, புருவம் - புருவமும், என்ற ஐந்துதாம் - என்ற ஐந்தையும், நெடுங்கழை போலக் கொளின் - நீண்ட மூங்கிலைப்போல மனத்துட் கொண்டால், நீள் மூங்கில் என - (மேற்கூறிய பெண் அங்கங்களின் தன்மை) மூங்கிலேயாகு மென்று, இகழ்ந்தார் - இகழ்ந்து பெண்ணாசையை நீக்கியவராவர்.

(க-ரை) மன வுறுதியை விட்டுப் பெண்ணாசையால் பல விடங்களுக்கும் ஓடித் திரிபவர், பெண்களின் பல், வாய் முதலிய ஐந்தையும் மூங்கிலின் தன்மை யுடையன வெனக் கொண்டால், மூங்கிலே யென்று பெண் தன்மையை யிகழ்ந்து பெண் விருப்பை நீக்கியவராய்விடுவர் என்பதாம்.

(வி-ரை) பெண்ணின் பல் முதலியன மூங்கிலின் அங்கங்களின் தன்மையைப் பெற்றிருப்பன; எங்ஙனமெனில், பல், மூங்கிலி லுண்டாகும் முத்தை நிகர்க்கும்; வாய், மூங்கிலின் குழாயை நிகர்க்கும்; கண், மூங்கிலின் கணுக்கணை நிகர்க்கும்; மனம், மூங்கிற் குழாயி னுட்புறத்தைநிகர்க்கும்; புருவம், மூங்கிலா லுண்டாம் வில்லை நிகர்க்கும். ஆகவே, ஒருபெண் ஒரு மூங்கிலை நிகர்ப்பாள் அவள் தன்மை யிங்ஙன மிருத்தலின், பெண்ணாசையால் மனவுறுதி கெட்

டுத் திரியு மொருவன் அவளை மூங்கிலென்றே நினைத்துவிடுவா னாயின் அவ்வாசை அவனுக்கு நீங்கிப் பெண் தன்மையில் இகழ்ச்சி யுண்டாகிவிடும். மூங்கிற் குழாயி னுட்புறம் ஒன்று மில்லாதிருக்கும்; அதுபோல், பெண்களின் மனமும் உயர்ந்த தன்மைகள் இல்லாத தாய் வெறுமை யுற்றிருக்கும்; பெண்களுக் கெல்லாம் இங்ஙன மிருக்குமோ வெனின், இராதென்க. பின்னை இங்ஙனம் கூறிய தென்னை யெனின், பலர் விரும்பத்தகும் பரத்தையரைக் குறித்துக் கூறியதென்க. கற்புடைய உயர்குலப் பெண்கள், பிறர் விரும்பவும் சேரவும் தகாதவராதலின், இச் செய்யுளிற் கூறிய பெண், இங்குக் கூறியாங்குப் பரத்தை யெனக் கோடலே சிறப்புடைத்து. இன் னும் இத்தகைய பரத்தைப் பெண்களின் மனம் விஷத்தின் தன்மை பொருந்தியிருக்கு மாகலானும், மூங்கிற் குழாயினுள்ளே பாஷாணம் உற்பத்தியா மாகலானும் இவ் வகையானும் இவ் வுவமை பொருந்தும். மூங்கிலில் முத்துண்டா மென்பது,

"தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி
நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்னார்
கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகார்
இந்து வுடம்பு கதிர்முத்த மீனு மிருபதுமே."

என்னும் இரத்தினச்சுருக்கச் செய்யுளால் உணரப்படும். கழை - மூங்கில். தாம் - அசை. கொடுங்குழை - பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

கல்வியாளரும், அஃதில்லாரும் பெறு பயன்.

56. பொன்பெறுங் கற்றான் பொருள்பெறு நற்கவி
என்பெறும் வாதி யிசைபெறும்—முன்பெறக்
கல்லார்கற் றாரினத்த ரல்லார் பெறுபவே
நல்லா ரினத்து நகை.

(ப - ரை) கற்றான் - (நூற்களைக்) கற்றவன், பொன் பெறும்- பொன்னைப் பெறுவான்; நல் கவி-நல்ல கவி பாடவல்லவன், பொருள் பெறும் - பல பொருள்களையும் பெறுவான்; வாதி - சாஸ்திரவாதஞ் செய்பவன், என் பெறும்-எதைப் பெறுவானெனில், இசை பெறும்- எங்கும் கீர்த்தியை அடைவான்; மூன் - முந்தியே (அதாவது, முந்திய இளமைப் பருவத்திலேயே), பெற - நலமடைய, கல்லார் - நூற்களைக் கற்றுக்கொள்ளாதவர்களும், கற்றார் இனத்தர் அல்லார் - கற்றாரினத்தைச் சாராதவர்களும், (அதாவது, கற்றவர்களைச் சார்ந்து கேள்வி ஞானத்தையாவது அடையாதவர்களும்), நல்லார் இனத்து- கல்விஞான முடைய நல்லோர்களின் கூட்டத்தில், (உண்டாம்), நகை- பரிகசச்சிரிப்பை, பெறுப - அடைவார்கள்.

(க-ரை) கல்வி கற்றான் பொன் பெறுவான், கவி பாடுவோன் பல பொருள்களைப் பெறுவான், சாஸ்திரவாதி புகழ் பெறுவான், கல்லாரும், கற்றாரினத்தைச் சார்ந்து கேள்வி ஞானத்தையேனு மடையாதவர்களும் நல்லோரால் பரிகசிக்கப்படுவர் என்பதாம்.

(வி - ரை) சாஸ்திரங்களைக் கற்றுத் தேறியவன், பலர்க்குப் பாடஞ் சொல்லியும், பலரிடத்து நூற் பிரசங்கம் புரிந்தும் அவர்களால் நிவேதனமாகக் கொடுக்கப்படும் பொருளைப் பெறுவன். கவி வல்லான் பற்பல அரசர்மீதும், பிரபுக்கள்மீதும் கற்பனை நயங்களோடு கவிகளைப் பாடுவானாதலின், அவர்கள் அவன்மீதுள்ள மகிழ்ச்சியால் அவனுக்குப் பல வகைப்பட்ட பொருள்களைச் சன்மானஞ் செய்வர். பலரிடத்தும் சாஸ்திரவாதஞ் செய்து வெல்பவனுக்குப் பொருள் கிடைக்காவிடினும் உலகத்தில் மிகுந்த கீர்த்தியேனு முண்டாகும். நூற்களைக் கல்லாதவர்களும், நூற் கேள்விஞான மில்லாதவர்களும் நல்லோர் அருவருக்கத்தக்க செய்கையை யுடையவர்களாயிருப்பார்களாதலின், அவர்க்கு அவரால் செய்யப்படும் இகழ்ச்சியே கிடைக்கும். இதனால் ஒருவன் நூற்களைக் கல்லாவிடினும் கேள்வி

ஞானத்தையாவது அடையவேண்டு மென்பது பெறப்படும். என் பெறும் - பின் வரும் முடிபுக் கேற்ப வரும் ஒருவகை வினு. சவி - ஆகுபெயர். பெறுபவே என்பதில, வ - அசை. நகை - ஈறு கெட்ட தொழிற்பெயர்.

அறிஞர் வெளியிடத்தக்கனவும், மறக்கத்தக்கனவும்,
செய்யத்தக்கனவும், நீக்கத்தக்கனவும்.

57. நல்ல வெளிப்படுத்துத் தீய மறந்தொழிந்
தொல்லை யுயிர்க்கூற்றங் கோலாகி—யொல்லுமெனின்
மாயம் பிறர்பொருட்கண் மாற்றுக மானத்தா
னுயி னழித லறிவு.

(ப - ரை) (ஒருவன்), நல்ல - (பிறர் தனக்குச் செய்த) நல்லவற்றை, வெளிப்படுத்து - பலர்க்கும் வெளியிட்டுச் சொல்லி, தீய - தீமையான காரியங்களை, மறந்தொழிந்து - நினையாது அவற்றின் எண்ணத்தைவிட்டு நீங்கி, ஒல்லும் எனின் - தன்னுல் இயலுமேயானுல், உயிர்க்கு-அபாயத்திற் குட்பட்ட பிற வுயிர்களுக்கு, ஒல்லை-விரைவில், ஊற்றங்கோல் ஆகி-ஊன்று கோலாகி (அதாவது, பற்றுக்கோடுபோல நின்று உதவிசெய்து), பிறர் - அன்னியருடைய, பொருள்கண் - பொருளினிடத்தே, மாயம் - வஞ்சனை செய்தலை (அதாவது, வஞ்சனை செய்து அப் பொருளைக் கவர்தலை), மாற்றுக-நீக்குக; மானததால் - மானத்தின் பொருட்டு (அதாவது, மானம் அழிவதா யிருந்தால் அதன் பொருட்டு), அழிதல் - (ஒருவன்) தான் அழிதலை, ஆயின் - ஆராய்ந்து இது தக்கதென்று அதனைச் செய்வானுயின், அறிவு - (அதுவே அவனுக்குச் சிறந்த) அறிவாகும்.

(க - ரை) ஒருவன், பிறர் தனக்குச் செய்த நன்மைகளை வெளிப்படுத்தித் தீமைகளை மறந்து, இடையூற்றி லகப்பட்ட வுயிர்களுக்கு ஊன்றுகோல்போ லாகி உதவி செய்து, வஞ்சித்துப் பிறர்

பொருளை அபகரியா திருக்கக்கடவன்; மானத்தைக் காத்தற் பொருட்டுச்சாதலே நலமென் றாராய்ந்து ஒருவன் அதனைச் செய்வா னாயின், அதுவே அவனுக்குச் சிறந்த அறிவாம் என்பதாம்.

(வி-ரை) மனிதர், பிறர் தமக்குச் செய்த நன்மைகளை வெளிப் படுத்துவது உத்தம குணம்; தீமைகளை நினைத்தால் அவற்றைச் செய்தார்மீது பகை யேற்பட்டுப் பல கேட்டை விளைவிக்கும்; ஆத லின், அது சிறந்த தன்று;

"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று."

என்றார் திருக்குறளாசிரியரும். ஒருயிருக் கபாயம் நேரும்போது, ஒரு மனிதனிடத்தே உதவி செய்யக்கூடிய சக்தி யிருக்குமே யானால், அவன் அதனைச் செய்யாதிருந்தால் மனித னாகமாட்டான். வஞ்சனையாற் பிறர் பொருளைக் கவர்தல் மகா பாதகமென்பது பிரசித் தம். ஒருவன், மானங் கெட்டு உயிர் வாழ்தல் சிறப்பன்று; தன் உயி ரைக் கொடுத்தேனும் மானத்தைக் காப்பாற்றவேண்டும். ஊன்று கோல் என்பது அம் சாரியையும் வலித்தல் விகாரமும் பெற்று, 'ஊற்றங்கோல்' என்றாயது. மானத்தால் - உருபு மயக்கம்; நானகா மதன் பொருட்டுப் பொருளில் வரும் குவ்வுருபு, ஆல் என்னும் மூன்ற னுருபாக மயங்கி வந்தது.

### அரசன் இயல்பும், அமைச்சன் இயல்பும்.

58. தன்னிலையுந் தாழாத் தொழில்நிலையுந் துப்பெதிர்ந்தார்
இன்னிலையு மீடி லியல்நிலையுந்—துன்னி
அளந்தறிந்து செய்வா னரசமைச்சன் யாதும்
பிளந்தறியும் போராற்ற லான்.

(ப - ரை) தன் நிலையும் - தன்னுடைய நிலைமையினையும், (தான் தொடங்கிச் செய்கின்ற), தாழா - குறைவுபடாத, தொழில்

நிலையும் - வினையினது நிலையினையும், துப்பு - வலிமையினால், எதிர்ந்தாரின் நிலையும்-தன்னோடெதிர்த்த பகைவர்களின் நிலையினையும், ஈடு இல் - இணை யில்லாத, இயல் நிலையும் - உலகியலின் நிலையினையும், துன்னி - (மனத்தால்) நெருங்கி, அளந்து - ஆராய்ந்தளவிட்டு, அறிந்து - தெரிந்து, செய்வான் - (போர்முதலிய அரசுக்குரிய தொழில்களைச்) செய்பவன், அரசு - அரசனாவான்; யாதும் - எதையும், பிளந்து அறியும் - பகுத்துணரும், பேர் ஆற்றலான் - பெரிய வல்லமையை யுடையவன், அமைச்சன் - மந்திரியாவான்.

(க - ரை) தன் நிலைமை, தன் தொழிலின் நிலைமை, எதிரி நிலைமை, உலகியலின் நிலைமை, என்பவற்றை ஆராய்ந்து தொழில் செய்பவனே அரசன்; எல்லாக் காரியங்களையும் பகுத்தறியும் வல்லமை யுடையவனே மந்திரி யாவான் என்பதாம்.

(வி - ரை) அரசன் போர் முதலிய பெருங் காரியங்களில் ஒன்றைச் செய்யத் தொடங்கும்போது, தன்னிடத்தில் அத்தொழிலை முடிக்கும் ஆற்றலிருக்கின்றதா வென்பதையும், அத்தொழில் முடிவு பெறுமா என்பதையும், அத் தொழிலில் எதிர்ப்பார் தோற்றுப் போகக்கூடியவர்களா என்பதையும், உலகியற்கைக்குத் தான் செய்யுந் தொழில் பொருந்துமா வென்பதையும் ஆராய்ந்துகொண்டு இவையெல்லாம் அனுகூலமா யிருந்தால்மாத்திரம் அதனைச் செய்ய வேண்டும்; அங்ஙனம் செய்தால்மாத்திரமே தொழிலில் வெற்றி யுண்டாகும்; இன்றேல், பல வழியிலும் அபஜெயமே யுண்டாகும். மந்திரி எல்லாவற்றையும் பகுத்தறிந்து நன்மை தீமைகளை அரசனுக்கு எடுத்துரைக்கும் ஆற்றலுள்ளவனா யிருத்தல்வேண்டும். இத்தகைய அரசனும், மந்திரியும் இருக்கும் அரசே சிறந்ததாம். 'எதிர்ந்தாரினிலை' என வருதற்பாலது, 'எதிர்ந்தாரின்னிலை, என எதுகை நோக்கி னகரவொற்று மிக்கு வந்தது. துன்னல்-நெருங்கல்; இஃது அக் காரியங்களில் மனத்தைச் சேர்த்தல் என்னும் பொருளில் நின்

றது. உலகியல் எல்லாவற்றினுஞ் சிறந்ததாதலின், 'ஈடில் இயல்' எனப்பட்டது.

அரசன், தன் காரியத்திற் செலுத்தத் தக்கவனது
தன்மை.

59. பொருள்போக மஞ்சாமை பொன்றுங்காற் போந்த
அருள்போகா வாரறமென் றைந்து—மிருடீரக்
கூறப் படுங்குணத்தான் கூர்வேல்வல் வேந்தனாற்
றேறப் படுங்குணத்தி னான்.

(ப - ரை) இருள் தீர - அறியாமை யென்னும் மயக்கந் தீர, கூறப்படும் - பெரியோர்களாற் கூறப்படுகின்ற, பொருள் - பொருளுடைமை, போகம் - இன்பமுடைமை, அஞ்சாமை - பயப்படாமை, பொன்றுங்கால் - ஒருயிர் அழியும்போது, போந்த - அதன்பொருட்டுண்டான, அருள் - கிருபை, போகா - நீங்காத, ஆர் - அரிய, அறம்-தருமம், என்ற ஐந்து குணத்தான்-என்ற ஐந்து குணங்களையுமுடையவன், கூர் வேல் - கூரிய வேலாயுதத்தையுடைய, வல் - வல்லமை பொருந்திய, வேந்தனால் - அரசனால், தேறப்படும் - (ஒரு கரும முடித்தற்குத்) தேர்ந்தெடுத்துக் கொள்ளப்படும், குணத்தினான் - குணத்தை யுடையவனவன்.

(க - ரை) பொருளுடைமை, போகமுடைமை, அஞ்சாமை, அருளுடைமை, அறமுடைமை என்னும் ஐந்து குணங்களையு முடையவனே, அரசனால் கரும முடித்தற்குத் தேர்ந்தெடுத்துக் கொள்ளப்படும் குணத்தினான் என்பதாம்.

(வி - ரை) அரசனுடைய பெருங் காரியத்தை முடித்தற் குரியவன், பொருளற்றவனும் இன்பமற்றவனுமிருந்தால், அவற்றை எதிரிகளிடம் பெறுதற் கேது வுண்டாயின் அவர் வயப்பட்டுக் காரியத்தைக் கெடுத்தேவிடுவான்; அச்ச முடையவனா யிருந்தால் தைரி

யத்துடனிருந்து கரும முடிக்கமாட்டான். ஜீவ தயையும், அறமும் இல்லாதவனுயிருந்தால், எதிரிகட் கிணங்குதல், காரியக்கேடு செய்தல் முதலிய பாதகங்களை அஞ்சாமற் செய்து அரசனுக்கு அப்ஜெயத்தை உண்டாக்கிவிடுவான். ஆதலின், அவனுக்குப் பொருளுடைமை முதலிய ஐந்தும் வேண்டு மென்றூர் ஆசிரியர். இருள் தீரக் கூறுதலாவது இவற்றால் நன்மை யுண்டாகும் என்னும் தெளிவுற விளக்கிச் சொல்லல். 'இருள் தீரக் கூறப்படும் பொருள் போகம்...என்ற ஐந்து குணத்தான்' எனக் கூட்டுக. போந்த - என்பது, வந்த என்னும் பொருளில் நின்றது. 'கூறப்படும்' என்பதற்கு முன், 'பெரியோர்களால்' என்னுஞ் சொல் வருவித் துரைக்கப்பட்டது. என்ற ஐந்து மென்பதில் அகரந் தொக்கது.

## உழ தொழிலுடையோன் இயல்பு.

60. நன்புலத்து வையடக்கி நாளுமா டோம்பேற்றிப்
புன்புலத்தைச் செய்தெருப் போற்றியபின்—இன்புலத்தின்
பண்கலப்பை யென்றிவை பாற்படுப் பானுழவோன்
நுண்கலப்பை நூலோது வார்.

(ப - ரை) நல் புலத்து - நல்ல விளை நிலத்தில் உண்டாகிய, வை - வைக்கோலை, அடக்கி - (போராக ஓரிடத்தில்) ஒடுக்கி வைத்துச் சேதமுறாமல் காத்து, நாளும் - தினந்தோறும், மாடு-உழவெருதுகளை, போற்றி - (அந்த வைக்கோலை உண்பித்துப்) பாதுகாத்து, புன்புலத்தை - எரு வில்லாமல் வலுவற்றிருக்கும் செய்யை, எருச்செய்து-எருவிட்டு, (உரமுண்டாக்கி), போற்றிய பின்-செழிப்புறச் செய்து பேணியபிறகு, பண்-பண்படுத்தல், கலப்பை-கலப்பையால் உழுதல், என்ற இவை - என்ற இவைகளை, இன்புலத்தின் பால் படுப்பான்-(உரமேற்றிய அந்த) நிலத்தினிடத்தே செய்பவன், உழவோன்-உழு தொழிலிற் சிறந்தவனுவான், (இங்ஙனம் பெரி

யோர்), நுண்-நுட்பமாகிய, கலப்பை நூல்-உழவு நூலை, ஓதுவார்-சொல்லுவார்கள்.

(கு - ரை) வைக்கோலைச் சேர்த்துவைத்து, அதனால் உழவெருதுகளைக் காப்பாற்றி, எருவிட்டுப் புன்செய்யை நன்செய்யாகத் திருத்தி, பின்னர் அந்த நன்செய்யைப் பண்படுத்தல் உழுதல் முதலியவற்றைச் செய்பவனே உழுதொழிலாளன்; இங்ஙனம் பெரியோர் உழவுநூல் கூறுவர் என்பதாம்.

(வி-ரை) மாடுகள் உழவிற்குப் பெருந் துணையாம்; அவற்றிற் காதாரமா யிருப்பது வைக்கோல்; ஆதலின், அந்த வைக்கோலைச் சேகரம் செய்து எருதுகளைக் காப்பாற்றவேண்டும்; அங்ஙனம் காப்பாற்றிவரின் அவ் வெருதுகளால் இடப்படும் சாணம் முதலியன நிலத்திற் கெருவாம்; அவ் வெருவைக்கொண்டு உரமற்ற நிலத்தையும் உரமுடைய தாக்கிக்கொள்ளலாம். அங்ஙனம் எருவிட்டு நிலத்தை வலுவுடையதாகச் செய்தபின், அதிலுள்ள செடி முதலியவைகளை வெட்டி வரப்புகளை ஒழுங்குபடுத்திக் கலப்பையால் அந் நிலத்தினை உழவேண்டும்; அவ்வா றுழுது பயிரிட்டால் அந்நிலம் நல்ல பயனை யளிக்கும். உழவு நூலோர் கூற்று இதுவேயாகும். இம் முறை பிசகிச் செய்யும் பயிர்த் தொழில் பயன்படாது. அடக்குதல் - ஒடுக்குதல்; அதாவது, சேதம் போகாமல் காவலுக் குட்படுத்திவைத்தல். மாடோ என்பதன் ஓகாரம் இசைநிறைப்பொருள து.எருவில்லாநிலம் வன்மை யற்றிருக்கு மாதலின் 'புன்புலம்' எனப்பட்டது. உயர்ந்த பொருள்கள் விளையும் உரமுடைய நிலத்தை நன்செய் என்றும், தாழ்ந்த பொருள்கள் விளையும் உரங் குறைந்த நிலத்தைப் புன்செய்யென்றும் கூறுதல் வழக்கு. 'செய்தெரு' என்பது, 'எருச்செய்து' என மாற்றப்பட்டது; எருச் செய்தலாவது எருப்போடுதல். இரண்டாமடியிலுள்ள போற்றல் உரமேற்றன்மே னின்றது. பண் - முதனிலைத் தொழிற்பெயர்; பண்ணுதல் - நிலத்தைச் செப்பனிடல். கலப்பை-

கருவியாகுபெயராய் அதன் காரியமாகிய உழவை யுணர்த்திநின்றது. பெரியோர் என்னும் எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது.

நன்றுள்ளனவும், தீதுள்ளனவும்.

61. ஏலாமை நன்றீதல் தீதுபண் பில்லார்க்குச்
சாலாமை நன்று நூல் சாயினுஞ்—சாலாமை
நன்று தவநனி செய்தறீ தென்பாரை
இன்றுகா றியாங்கண் டிலம்.

(ப - ரை) ஏலாமை-(மனிதர்க்குக்) கூடாமையாகிய உலோப குணம், நன்று - நன்மையாம்; ஈதல் - (இல்லாதவர்களுக்குப் பொருளைக்) கொடுத்தல், தீது - தீமையாம்; பண்பு இல்லார்க்கு-நற்குணம் பொருந்தாதவர்களுக்கு, நூல் சாலாமை- நூற்கல்வி நிரம்பாதிருத்தல், நன்று - நன்மையாம்; சாயினும் - (ஒருவன்) கெடுவதா யிருந்தாலும், சாலாமை-நற்குணங்களால் உயர்வடையாதிருத்தலே, நன்று-நன்மையாம், நனி-மிகுதியாக, தவம் செய்தல்-தவத்தை இயற்றுதல், தீது-கெட்டதாம், என்பாரை-என்று சொல்பவர்களை, யாம்-நாம், இன்றுகாறு - இன்றளவும், கண்டிலம் - பார்த்திலம் (இவ்வாறு ஒருவரும் சொல்லமாட்டார்கள் என்றபடி).

(க - ரை) மனிதர்க்குக் கூடாமையாகிய உலோபகுணம் நன்மை, ஈகை தீது, நற்குண மில்லாதவர்க்குக் கல்வி நிரம்பாதிருத்தல் நன்மை, மனிதர் கெடுவதாயினும் நற்குணங்களால் உயர்வடையாதிருக்கையே நன்று, மிக்க தவத்தைச் செய்யாதிருத்தலே நன்மை என்று சொல்பவரை நாம் இதுவரையிலும் கண்டிலேம் என்பதாம்.

(வி - ரை) உலோபம் நன்மை யென்றும், ஈதல் தீதென்றும், நற்குண மில்லார்க்குக் கல்விநிரம்பாமை நன்மையென்றும், கெடுவதா யிருந்தாலும் குணங்களால் மேன்மை யடையாதிருத்தலே நன்றென்

னும், தவஞ் செய்தல் தீதென்றும் கூறுவாரைக் கண்டிலேமென்றத ஞல், இங்ஙனம் ஒருவரும் கூறமாட்டார்கள் என்பது பெறப்படும். ஆகவே பெரியோர்கள், உலோபம் கெட்டது, ஈதல் நல்லது, நற்குண மில்லாதவர்க்குக் கல்வி மிக அவசியமானது, மனிதர் நற்குணங்களால் மேன்மை யடைதலே சிறந்தது, தவம் நன்மை தருவது என்றே கூறுவார்கள். மனிதர், இவர்கள் கூறிய இவற்றையே செய்தல்வேண்டும் என்பதை இச்செய்யுள் விளக்கும். ஆதலின், மனிதர், உலோபத்தை யொழிக்கவேண்டும்; ஈகையைக் கைக்கொள்ள வேண்டும்; நற்குண மில்லாதவர்களும் கல்வி கற்று அதனுல் தங்கள் தீக்குணங்களை ஒழித்தல்வேண்டும்; மனிதர் நற்குணங்களால் உயர்வடைதலையே நாடவேண்டும்; தவத்தையே செய்யவேண்டும். நற்குண மில்லாதவர்கள் கல்வி கற்ருல் அதனுல் தீக்குணம் ஒழிதல் கூடும். ஆதலால், அவர்க்கும் கல்வி அவசியமென்று கூறப்பட்டது. ஒருவன், நற்குணங்களை அனுஷ்டிப்பதில் கேடுறுவதா யிருந்தாலும் விடாமல் நன்மைகளையே புரிந்து வருவானுயின் முடிவில் மேன்மை யடைவான். எலாமை கூடாமை; அதாவது, தீக்குணம்; பின்னே ஈதல் வருதற்கேற்ப இதற்கு அதன் எதிரிடையாகிய உலோபம் என்று பொரு ளுரைக்கப்பட்டது. சாலுதல் - நிறைதல், பொருந்தல், உயர்வாதல். எலாமை, சாலாமை என்பன எதிர்மறைத் தொழிற்பெயர்கள். எல், சால் என்பன இவற்றின் பகுதிகள். சாயினும் என்பதன் உம்மை - உயர்வுசிறப்புப் பொருளது.

மனோ வியாதியை உண்டாக்கத் தக்கன.

62. அரம்போற் கிளையடங்காப் பெண்வியக்கத் தொண்டு
மரம்போன் மகன்யாருய் நின்று—கரம்போலக்
கள்ளநோய் காணு மயலேந்து மாகுமேல்
உள்ளநோய் வேண்டா வுயிர்க்கு.

(ப - ரை) அரம் போல்-(உறுதியான இரும்பு முதலியவற்றை யும் அராவித் தேய்க்கின்ற) அரத்தைப்போலத் (தன்னைத் தேய்க் கின்ற), கிளை - உறவினரும்; அடங்கா - தனக்கடங்காத, பெண் - மனைவியும்; வியக்கத் தொண்டு - துதிக்க (அதன் பொருட்டுப் பணி புரியும்) அடிமையாளும்; மரம் போல் - மரத்தைப்போல் அறிவில் லாத, மகன் - புதல்வனும்; மாறாய் நின்று - தனக்கு விரோதமாய் நின்று, கரம்போல-நஞ்சைப் போல, கள்ள நோய் காணும்-வஞ்சனை யான வருத்தம் ஏற்படத்தக்க, மயல் - அன்னிய மாதரின் காதல் மயக்கமும், (ஆகிய), ஐந்தும் - இவ்வைந்தும், ஆகுமேல் - (ஒருவ னிடத்து) உளவாயின், உயிர்க்கு - அவனுடைய உயிருக்கு, உள்ள நோய் - (மற்றொரு) மனோ வியாதி, வேண்டா - வேண்டியதில்லை; (இவைகளே மனோ வேதனையைச் செய்துகொண்டிருக்குமென்ற படி).

(க - ரை) அரம் இரும்பு முதலியவற்றைத் தேய்ப்பதுபோலத் தன்னைத் தேய்க்கத்தக்க உறவினரும், அடங்கா மனைவியும், துதி செய்தால் மாத்திரம் பணி புரியத்தக்க அடிமையும், மரம்போல் அறி வில்லாத மைந்தனும், இரகசியமாக மனோவேதனையை உண்டாக்கத் தக்க அயல்மனை விருப்பும் ஒருவனிடத்தே உளவாயின் அவ னுயிர் க்கு வேறே மனவேதனை வேண்டியதில்லை; இவைகளே எப்பொழு தும் அவ னுள்ளத்தை வாட்டிக்கொண் டிருக்கும் என்பதாம்.

(வி - ரை) ஒருவன் சில வஞ்சனைக்காரருடன் உறவானால், அவர்கள் சுயநலங் கருதி அவனுடைய பொருளைப் பலவழிகளிலும் கவர்ந்து அவனுடைய குடும்பத்தைக் கெடுத்துக்கொண்டே யிருப் பார்கள்; அங்ஙனம் கெடுத்தாலும் அவன் அவர்களுடைய நீடித்த பழக்கத்தினாலும் தாக்ஷணியத்தினாலும் அவர்களை நீக்கவும் முடியா மல், தன்கேட்டைச் சகிக்கவும் முடியாமல் மனோவேதனை யடைந்து கொண்டிருப்பான். அடங்கா மனைவியை அடைந்திருந்தால் அங்ஙு

ணமே அவளை அடக்கவும் முடியாமல் நீக்கவும் முடியாமல் துன்ப முறுவான். ஒருவனுக் கேற்பட்ட அடிமையாள் அவனுடைய குறிப் பறிந்து தானே செய்யவேண்டிய வேலைகளைச் செய்துகொண்டு போனால் மாத்திரம் திருப்தியாயிருக்கும்; அங்ஙனமின்றி எஜமானன் தன்னைப் புகழ்ந்து பேசித் துதித்துக்கொண்டிருந்தால் மட்டும் வேலை செய்பவனாயும், சிறிது அதிகாரம் செலுத்தினால் கோபித்துக் கொண்டு ஒரு வேலையும் செய்யாதிருப்பவனாயும் பணியாளன் அமைவானாயின், அவ் வெஜமானனுக்குப் பழக்கத்தை முன்னிட்டு அப் பணியாளனை நீக்க முடியாமையாலும், அவனால் நேரும் கெடுதிகளைச் சகிக்க முடியாமையாலும் மிக்க மனோ வேதனை யுண்டாகும். ஒருவனுக்குத் தன் மகன் புத்தியில்லாதவனா யிருந்தால் அவனை விலக்கவும் முடியாமல், புத்தி யுடையவனாகச் செய்யவு முடியாமல் மனத் துயர முண்டாகும். ஒருவன் பிறர் மனை விரும்புவதால் பல வழியிலும் அவனுடைய மனதில் இரகசியமாக வேதனை அதிகரித்துக்கொண்டே யிருக்கும். இது,

"புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சம்
துய்க்கு மிடத்தச்சந் தோன்றாமற் காப்பச்சம்
எக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ
உட்கான் பிறனில் புகல்."

என்பதா லுணரப்படும். கிளை - தல்லீறு கெட்ட தொழிற் பெயர்; கிளைத்தல்-நெருங்குதல்; இஃது ஆகுபெயராய் நெருங்குதலையுடைய உறவினரை யுணர்த்தி நின்றது. 'வியக்கத்தொண்டு' என்பதற் கிடையில் 'அதன் பொருட்டுப் பணி புரியும்' என்னும் சொற்கள் வருவித்துரைக்கப்பட்டன. தொண்டு - தொழிற் பண்பு; அஃதாகுபெயராய்த் தொண்டியற்றுவானை யுணர்த்திற்று. நஞ்சு மனிதர்க்குக் கெடுதி புரிவது; அஃதுட் புகுந்தால் இரகசியமாகவே வெளித் தோற்றாமல் வேதனை செய்து தன்னை யுண்டவனை யொழித்துவிடும்; அங்ங

ணமே பிறர் மனை விரும்பும் மனத்திற்குள்ளேயே நின்று வேதனை செய்து தன்னைக் கொண்டவனைக் கெடுத்துவிடும்; ஆதலின், அதனை, "மாறாய் நின்று கரம்போலக் கள்ள நோய் காணும் மயல்" என்றார் ஆசிரியர். பெண், மகன் முதலிய உயர்திணைப் பெயர்கள் அஃறிணையோடு கலந்து இழிவினால் அஃறிணை முடிபை யேற்றன. "திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும், மிகவினு மிழிபினு மொருமுடி பினவே." என்பது (நன்-பொது-உஎ) ஆம் சூத்திரம். உள்ளம்-உள்ளிடம்; அஃது இடவாகுபெயராய் அங்குள்ள மனத்தை யுணர்த்திநின்றது. கிளை முதலியவற்றில் எண்ணும்மைகள் தொக்கன.

### பேரின்பம் பயக்கத் தக்கன.

63. நீரற நன்று நிழனன்று தன்னில்லுட்
பாரற நன்றுபாத் துண்பானேற்—பேரற
நன்று தளிசாலை நாட்டற் பெரும்போக
மொன்றுமாஞ் சால வுடன்.

(ப-ரை) நீர் அறம் - தண்ணீர்த் தர்மம், நன்று - (ஒருவன் செய்தல்) நல்லதாம்; நிழல் - (பல ஜீவன்களுக்கும் உபயோகப்படுமாறு) நிழலை உண்டாக்குதல், நன்று - நல்லதாம்; தன் இல்லுள் - தன்னுடைய வீட்டிற்குள்ளே, பார் - இடத்தை, (பிறர் தங்குமாறு உதவுதலாகிய), அறம் - தருமம், நன்று - நல்லதாம்; (தன்னுடைய உணவுகளை), பாத்து - (பிறர்க்கும்) பகிர்ந்திட்டு, உண்பானேல் - உண்பானாயின், (அஃதவனுக்கு), பேர் அறம் - பெரிய தர்மமாம்; தளி - கோவிலையும், சாலை-மரங்கள் கவிந்த சாலையையும், நாட்டல் - (ஒருவன்) ஸ்தாபித்தல், நன்று-நல்லதாம்; (இவ்வைந்து தர்மங்களையும் செய்தவர்க்கு), பெரும் போகம்-பேரின்பம், உடன் - உடனே, சால - மிகுதியாக, ஒன்றும் - பொருந்தும்.

(க - ரை) நீரறமும், நிழலறமும், இடவறமும் ஒருவன் செய்தல் நன்று; அவன் தன்னுடைய உணவைப் பலர்க்கும் பகிர்ந்திட்டு உண்பானேல்அது பேரறமாம்; கோவிலையும் சாலையையும் ஒருவன் உண்டாக்குதல் நல்லதாம்; இவ்வைந்து தர்மங்களையும் செய்வார்க்குப் பேரின்பம் கைகூடு மென்பதாம்.

(வி - ரை) நீரறம் - தண்ணீர்ப்பந்தல் வைத்துத் தாக விடாய் கொண்டு வருவார்க்குத் தண்ணீர் வார்த்தலாம். நிழலறம் - மரங்களால் நிழலை யுண்டாக்கி அதில் பல ஜீவன்களும் தங்கும்படி செய்தலாம். பார்-இடம்; பாரறம் - இட தருமம்; அதாவது, ஒருவன் தன் வீட்டில், தங்க இடமில்லாது தவிப்போர்க்கு இட முதவுதலாம். தனக்குக் கிடைக்கும் உணவைப் பிறர்க்கும் பங்கிட்டுக் கொடுத்துத் தானுமுண்ணுதலே பாத்துண்ணலாம்; இஃது அன்னதான மெனப்படும்; இத்தானம் எல்லாவற்றிலும் சிறந்ததாகலின்'பேரறம்'எனப்பட்டது. தளி - கோவில், சாலை - இருபுறங்களினும் மரங்க ளடர்ந்த பாதை; இவ் விரண்டும் ஒரே தர்மத்தில் அடக்கப்பட்டன. தர்மங்கள், நல்ல பதவிகளையும் நல்ல அனுபவங்களையும் கொடுத்து முடிவில் மோக்ஷத்தை நல்குவனவாதலின், 'இவ்வைந்தாலும் பெரும்போகம்' ஒன்றும் என்றார் ஆசிரியர். ஒன்றமாம் என்பதில், ஆம்-அசை யிடைச்சொல். சால - உரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்; ஒன்றும் என்னும் வினைகொண்டு முடிந்தது.

பிச்சைகள் சிறியவை யெனினும் அவற்றின் பயன்கள் பெரியன வென்பது.

64. பிடிப்பிச்சை பின்னிறை யைபங்கூழ் கூற்றோ
டெடுத்திரந்த வுப்பித் துணைபோ—டடுத்துச்
சிறுபய மென்னார் சிதவலிப் பீவார்
பெறுபயன்பின் சாலப் பெரிது.

(ப - ரை) பிடிப் பிச்சை-ஒரு கைப்பிடியு ளடங்கும் பிச்சைச் சோறும், பின்-பின்னர், இறை-விரலிறையளவு பிச்சைச்சோறும், ஐயம்-சந்தேகப் பிச்சைச்சோறும், (அதாவது, பெற்றுக் கொள்ப வன் இவர் இடுவதில் ஏதேனும் இருக்கின்றதோ இல்லையோ என்று சந்தேகப்படும்படியான அவ்வளவு அற்பமான பிச்சைச் சோறும்), கூழ் - கூழும், (உப்பில்லாதவர்), கூற்று ஓடு எடுத்து-இல்லையென்று கூறும் சொல்லையும் ஏற்கும் ஓட்டையும் மேலே தூக்கி, இரந்த - யாசித்த, உப்போடு-உப்பும், (ஆகிய), இத்துணை-இவ்வளவும், சிறு பயம்-அற்ப பயனுடையன, என்னார் - என்று கருதாதவர்களாய், அடுத்து - (யாசகரிடத்தே)நெருங்கி, சிதவலிப்பு-குறைவுபட்ட பிச்சையை(அதாவது, இங்குக் கூறிய அற்ப பிச்சைக் குள் ஒன்றை), ஈவார் - கொடுப்பவர், பின் - பிற்காலத்தில், பெறு பயன்-அடையும் பிரயோசனமானது, சால பெரிது-மிகவும்பெரிது.

(க - ரை) பிடிப் பிச்சை, இறைப் பிச்சை, சந்தேகப் பிச்சை, கூழ், உப்பு ஆகியவற்றையும் அற்ப பயனுடையவை யென்றெண் ணாது இவற்று ளொன்றை யாசகர்க்குக் கொடுப்பவர் அடையும் பயன் பெரிதென்பதாம்.

(வி - ரை) பிச்சை-யாசகர்க்கிடும் அன்னம் முதலியன. பிடிப் பிச்சை - கைப்பிடியளவுள்ள பிச்சைச் சோறு. இறை - விரல்களின் மேற்பாகத்திலுள்ள ஓர் இறை அளவு பிச்சைச் சோறு. ஐயம்-சந்தே கப் பிச்சைச் சோறு; இறையளவினுங் குறைந்ததாய்க் கையில் உண் டோ இல்லையோ என்று சந்தேகிக்கும்படி அவ்வளவு அற்பமாக அள்ளியிடும் பிச்சைச் சோறு. கூழ் - மாவினா லாக்கப்படும் உணவு. கூற்று ஓடு எடுத்து இரந்த உப்பாவது - உப்பில்லாத ஒருவன் 'உப் பிடுங்கள்! உப்பிடுங்கள்!' என்று கூவி ஓட்டை யெடுத்துக்கொண்டு கேட்கும் உப்பு. இவை முறையே ஒன்றற்கொன்று மிகக்குறைவு பட்டன வெனினும், இவைகளும் இல்லாதவர்க்கு ஒருவகைத் திரு

ப்தியைச் செய்வனவாதலின், இவற்றை அற்பமென் றெண்ணுமல் கொடுத்தால் இவற்றால் பெரிய பயனே யுண்டாகும். பிச்சைப் பொருள்களில் பெரிது சிறிதென்னும் வேறுபாடின்றும்; பெறுவார்க்குத் திருப்தியை யுண்டாக்குவதில் எல்லாம் ஒரு தன்மையனவே. இறை, ஐயம் என்பன அளவை யாகுபெயர்களாய்ப் பிச்சையை உணர்த்தி நின்றன. பிச்சைப்பொருள்கள் பலவாயினும் அவற்றுள் அன்னம் சிறந்ததாதலின், பிச்சை யென்பது பிச்சைச்சோறென்று கூறப்பட்டது. இரண்டாமடியிலுள்ள ஓடு என்பது ஒடு என்னும் எண்ணிடைச்சொல்லின் திரிபு; இது பிச்சைமுதலிய ஒவ்வொன்றிலும் சேர்ந்து எண்ணிநிற்றல் பொருளில் வந்து ஈற்றி லோரிடத்து நின்றது. "என்று மெனவு மொடுவு மொரோவழி, நின்றும் பிரிந் தெண் பொருள்தொறு நேரும்" என்பது (நன் - இடை - கo) ஆம் சூத்திரம்; இனி ஒடுவை - இசைநிறை மொழியெனக் கோடலு மொன்று; "ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே" என்பது (நன்- இசை-கள) ஆம் சூத்திரம். என்னூர் - முற்றெச்சம். சிறுபய மென்றது ஆகுபெயராய் அதனையுடைய பொருள்களை யுணர்த்திநின்றது. சிதவல் - குறைவுபட்டது; சிதவலிப்பு - குறைவுபட்டதாதல்.

**மனமுருகிச் செய்யுந் தானம் சிறிதேனினும் பெரிய பயனைத் தரு மென்பது.**

65 வெந்தீக்காண் வெண்ணெய்மெழுகுநீர் சேர்மண்ணுப்
பந்தன் மகற்சார்ந்த தந்தையென் — றைந்தினு
ளொன்றுபோ லுண்ணெகிழ் தீயிற் சிறிதெனினுங்
குன்றுபோற் கூடும் பயன்.

(ப - ரை) வெந்தீ - வெப்பமாகிய அக்கினியை, காண் - நெருங்கிக் காணுகின்ற, வெண்ணெய் என்று - வெண்ணெயும்- மெழுகு என்று-மெழுகும், நீர் சேர் - நீரைச் சேர்ந்த, மண் என்று-

மண்ணும், உப்பு என்று-உப்பும், அம்-அழகிய, தன்-தன்னுடைய, மகன் சார்ந்த-புத்திரனை யடைந்த, தந்தை என்று - தந்தையின் மனமும், (ஆகிய), ஐந்தினுள் - ஐந்தனுள்ளே, ஒன்றுபோல் - ஒன்றைப் போல, உள் நெகிழ்ந்து - மனமுருகி, (யாசகர்க்கு வேண்டிய பொருளை), ஈயின்-கொடுத்தால், (அது), சிறிது எனினும்-சிறிதென்றாலும், பயன் - (அதனாலுண்டாகும்) பயன், குன்றுபோல் - மலையைப்போல மிகப் பெரிதாய், கூடும் - அவ் வீகையாளனிடத்தே வந்து சேரும்.

(க - ரை) நெருப் பெதிர்பட்ட வெண்ணெய், மெழுகு, நீரிடைச் சேர்ந்த மண், உப்பு, மகனைக் கண்ட தந்தையின் மனம் ஆகிய இவ்வைந்தனு ளொன்றுபோல யாசகரைக் கண்டவிடத்து மனமுருகி ஒருவர் ஒரு பொருளைக் கொடுத்தால் அது சிறிதாயிருப்பினும் அதன் பயன் மலைபோல் பெரிதாக வந்து சேரும் என்பதாம்.

(வி - ரை) தீயை அணுகிய வெண்ணெயும் மெழுகும் தண்ணீர்போ லுருகிவிடும். நீரோடு கலந்தால் மண்ணும் உப்பும் அந்நீரைப்போலவே கரைந் தோடிவிடும். மகனைக் கண்டபோது தந்தையின் மனம் இளகுவ தியற்கை. மனிதர் இவைகளில் ஒன்றைப் போல, தரித்திர துன்பத்தை யுடையாரைக் காணும்போது மனமுருகி அவர் விரும்பியதைக் கொடுக்கவேண்டும்; இவ்வாறு மனவுருக்கத்துடன் செய்யும் தருமம் சிறந்த தாகலின், அது சிறிதாயிருந்தாலும் பெரிய பயனைத் தரும். மனவுருக்கமின்றிக் கடின சித்தத்தோடு ஒருவன் மற்றொருவனுக்கு எவ்வளவு பொருளைக் கொடுத்தாலும் அதனால் பய னில்லை. என்று என்பது ஓரிடத்தினின்றும் பல பொருள்களிடத்தும் பிரிந்து சென்று அவற்றை எண்ணி முடிக்கும் இடைச்சொல் லாதலின், இங்கு வெண்ணெய் முதலிய பலவற்றோடும் கூட்டி முடிக்கப்பட்டது; (நன்னூல்-இடை-௧௦)ஆம் சூத்திரம் பார்க்க. காண் - நெருங்குதற் பொருளில் நின்றது. தந்தை

யென்னும் சொல் ஆகுபெயராய் அவன் மனத்தை யுணர்த்தி நின்றது. காண் வெண்ணெய் - வினைத்தொகைநிலைத்தொடர்.

இன்ன அறங்களைச் செய்தவன் சுவர்க்க மடைவா னென்பது.

66. குளந்தொட்டுக் கோடு பதித்து வழிசீத்
துளந்தொட் டுழுவய லாக்கி—வளந்தொட்டுப்
பாகு படுங்கிணற் றோ டென்றிவ்வைம் பாற்படுத்தா
னேகுஞ் சுவர்க்கத் தினிது.

(ப-ரை) குளம் தொட்டு - குளத்தைத் தோண்டி, (அதைச் சுற்றிலும் மரங்கள் உண்டாகும்படி), கோடு - மரக்கிளைகளை, (வெட்டி), பதித்து - நட்டு, (நீரூற்றி வளர்த்து), வழி - மனிதர் நடக்கும் பாதையை, சீத்து - செதுக்கி (முள், கல் முதலியன இல்லாதபடி செப்பஞ் செய்து), உளம்-(தரிசுநிலத்தின்) உள்ளிடத்தை, தொட்டு - வெட்டி, (செப்பஞ் செய்து), உழு வயல் ஆக்கி - உழுகின்ற கழனியாகச் செய்து, (அவற்றுடனே), வளம் தொட்டு - வளமாகத் தோண்டி, பாகுபடும்-(சுற்றிலும்) கரை உண்டாகும், கிணறு ஒடு - கிணற்றை உண்டாக்குதலும், என்ற - என்று சொல்லப்பட்ட, இ ஐம்பால் படுத்தான் - இந்த ஐந்து பகுதிகளையும் உண்டாக்கியவன், சுவர்க்கத்து - சுவர்க்க லோகத்திலே, இனிது - இனிதாக, ஏகும் - செல்லுவான்.

(க-ரை) குளம், மரம், வழி, வயல், கிணறு இவற்றை உண்டாக்குவோன் சுவர்க்க பதவியை அடைவான் என்பதாம்.

(வி-ரை) குளந் தோண்டினால் அதில் பல ஜீவன்களும் நீர் அருந்தி வாழும்; மர முண்டாக்கினால் அதன் நிழலில் அநேக ஜீவன்கள் இளைப்பாறும்; வழியைச் செப்பஞ் செய்தால் அதில் பலரும் சிரமமின்றி நடப்பார்கள்; வயலை உண்டாக்கினால் அதன் விளைவால்

பல ஜீவன்கள் ஜீவிக்கும்; கிணறு வெட்டினால் அதன் நீரைப் பல ஜீவன்கள் பருகி வாழும். ஆதலின், இவைகள் சிறந்த தருமங்களாம். அங்ஙனம் சிறந்தவைகளா யிருப்பதை உத்தேசித்தே இவற்றைச் செய்வோர் சுவர்க்க மடைவார் என்றார் ஆசிரியர். ஆல், அத்தி, பூவரசு முதலிய மரங்களை உண்டாக்கவேண்டுமானால் அவற்றின் கோடுகளை வெட்டிப் பூமியில் நட்டு நீர் வார்த்தால் அவை தளிர்த்துவிடும். இவ்வகை மரங்கள் விரைவில் உண்டாவன வாதலின் இவைகளே பெரும்பான்மையும் குளம், சாலை, முதலியவைகளில் வைக்கப்படும். ஆதலின், இவை இவ்வகை மரங்க ளென்பதை விளக்கற் பொருட்டே ஆசிரியர், 'கோடு பதித்து' என்றார். உளம் - உள்ளிடம்; வயலுக்கு உள்ளிடமே வெட்டப்படு மாதலின், 'உளந்தொட்டு' என்றார் ஆசிரியர். பாகு - கரை; கிணற்றிற்குக் கரை யில்லாவிடின் இராக் காலங்களில் பல ஜீவன்கள் அதில் வீழ்ந்து மடிய ஏதுவுண்டா மாதலால் கரை அவசிய மென்பது தோன்ற, 'பாகுபடுங் கிணறு' என்றார் ஆசிரியர். ஒடு ஒடு என நீண்டு வந்தது; இஃதெண்ணொடு; முன்நிற்பவற்றைக் கூட்டி எண்ணி நிற்றல் பொருளில் வந்தது. என்ற என்பத னீற்றகரந் தொக்கது. ஐம்பால்-ஐந்து பகுப்புக்கள்; அவை ஐவகைப்பட்ட குளம் முதலியவற்றை உணர்த்திநின்றன.

துறவறத்தில் பொறுமையோ டிருக்கவேண்டும்,
இன்றேல் இல்லற மடையவேண்டு மெனல்.

67. போர்த்து முரிந்திட்டும் பூசியு நீட்டியு
மோர்த்தொரு பான்மறைத் துண்பான்மே—யோர்த்த
வறமாமேற் சொற்பொறுக்க வன்றேற் கலிக்கட்
டுறவறம்பொய் யில்லறமே வாய்.

(ப - ரை) போர்த்தும் - தேக முழுவதும் தோன்றாமல் ஆடையால் மூடியும், உரிந்திட்டும் - உடுத்த ஆடையைக் களைந்திட்டும், பூசியும் - தேக முழுவதும் வெண்ணீறு பூசியும், நீட்டியும் - சடை

யை வளர்த்தும், ஓர்த்து - ஆராய்ந்து, ஒருபால் - உடம்பின் ஒரு பக்கத்தை, மறைத்து - மறைத்தும், உண்பான் - உணவுண்ணும் பொருட்டு, மேய் - (உலகத்தவரிடம்) அடைந்து, ஓர்த்த - பொறுமையைத் தாங்கிய, அறம் ஆமேல் - துறவறம் (ஒருவனுக்குரியது) ஆகுமானால், (அதாவது, ஒருவன் துறவறத்தை மேற்கொண்டால்), சொல் - உலகத்தவர் தன்னை இழித்துக் கூறும் பழிச் சொற்களை, பொறுக்க-பொறுக்கக்கடவன்; அன்றேல் - அங்ஙனம் பொறுமை யிலதேல், கலிக்கண் - இக் கலிகாலத்தின்கண், துறவறம் பொய் - அத் துறவறம் பொய்யாகும், இல்லறமே - இல்லறமென்பதே, வாய் - உண்மையாகும், (அதாவது, பொறுமை யில்லாவிடில் துறவறம் நிலைபெறாது, இல்லறமே நிலைப்பதாகும்; ஆதலின், பொறுமை யற்றவர் இல்லறத்தையே கைக்கொள்ளவேண்டு மென்றபடி).

(க - ரை) ஆடை போர்த்தும், அதனைக் களைந்திட்டும், நீறு பூசியும், சடை வளர்த்தும், உடம்பின் ஒரு பாகத்தை மறைத்தும் இந்த ஐந்து வகையால் தவ வேடம் பூண்டு உணவுண்ணும் பொருட்டு உலகத்தாரிடம் சென்று பொறுமையைத் தாங்கிய துறவறம் ஒருவனுக் குளதாயின், அவன் உலகத்தார் சொல்லும் பழிச் சொல்லைப் பொறுத்துக்கொள்ளவேண்டும்; அங்ஙனம் பொறுமை யில்லாவிடின் இந்தக் காலத்தில் அவன் கொண்ட துறவறம் பொய்யாகும்; இல்லறமே உண்மையாம்; (ஆதலின், பொறுமை யற்றவன் துறவறத்தை விட்டு இல்லறத்தை மேற்கொள்ளவேண்டும்) என்பதாம்.

(வி- ரை) ஆடை போர்த்தல் முதலிய ஐந்தும் துறவறத்தார் கொள்ளத்தக்க வேடங்கள். ஒருவன் இவ் வேடங்களைத் தாங்கித் துறவு பூண்டானெனினும் ஆகாரத்தின் பொருட்டு உலகத்தாரை நாடிச் செல்லவேண்டும்; இக் கலி காலத்தில் போலித் தவவேடந் தாங்கி ஜனங்களை ஏமாற்றி அவர்களிடம் பொருள் கவருவோரே

அதிகரித்திருப்பதாலும், பன்முறை இத்தகையின ரிடம் ஏமாந்த ஜனங்கள் இவர்களை நிந்திப்பது இயற்கை யாதலாலும், தவ வடிவங் கொண்டவர்களில் உண்மையுடையவர்களையும், போலித் தபசிகளை யும் பகுத்தறியும் ஆற்றல் ஜனங்கட் கின்மையாலும் அவர்கள் எல் லாத் துறவிகளையுமே நிந்திப்பார்கள். ஆதலின், மேற் கூறியபடி துறவு பூண்டவன் ஆகாரத்திற்குச் செல்லும்போது பல ஜனங்க ளும் அவனை, "இவனுக்கு ஜீவிப்பதற்கு வேறு வேலையில்லையோ; கஷ்டமின்றி ஆகாரம் வாங்கிச் சாப்பிடுதற்குச் சாமியார் வேடந் தாங்கிக்கொண்டு இவன் வந்துவிட்டான்" என்று பலவாறு நிந்தித் துக்கொண்டே அவனுக்கு ஆகாரம் முதலியன கொடுப்பார்கள்; இவ்வாறு துறவிகளுக்குப் பழிச்சொல் லுண்டாவது இக் காலத்தில் இயற்கையாயிருப்பதால் அவன் அந்தப் பழிப்பை யெல்லாம் பொறு த்துக்கொள்ளவேண்டும்; அங்ஙனம் பொறுவிடின், துறவு நிலை பெறாது; ஆகவே, பொறுமை யுள்ளவனே துறவைக் கைக்கொள்ள வேண்டும்; அது செய்ய முடியாதவன் இல்லறத்தை அடைய வேண்டும்.

உரிந்திட்டு - என்பதில், இடு - துணைவினை. உண்பான் என் பதில், பான் - எதிர்கால வினையெச்ச விகுதி. மேவி என்பது மேய் எனத் திரிந்துநின்றது. வாய்மை யென்பது வாய் என ஈறு கெட்டு நின்றது. துறவுக்குப் பொறுமையே சிறந்த தாகலின், 'ஓர்த்த அறம்' என்ற குறிப்பால் அறமென்பதற்குத் துறவற மென்று பொருள் கூறப்பட்டது; ஓர்ப்பு - பொறுமை. இச் செய்யுள், 'வேடங்களால் துறவு பயன் படாது, பொறுமையினாலேயே பயன் படும், என்ற பொருளையே முதன்மையாக விளக்கிகின்றது.

ஒருவன் உலகில் வாழும் விதம்.

68. தான்பிறந்த வின்னினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிற ராற்கருதற் பாடுணர்ந்து—தான்பிறாற்

சாவ வெனவாழான் சான்றோராற் பல்யாண்டும்
வாழ்க வெனவாழ்த னன்று.

(ப - ரை) (ஒருவன்), தான் பிறந்த - தான் தோன்றிய, இல்-குடியின் உயர்வை, நினைந்து - கருதி, தன்னைக் கடைப்பிடித்து - தன்னுடைய இயற்கையைத் தெளிவா யறிந்து உறுதியாகப் பற்றி, தான் பிறரால் - தான் மற்றவர்களால், கருதல் பாடு - கருதப்படுதற்குரிய பெருமையை, உணர்ந்து - தெரிந்து, தான் பிறரால் - தான் மற்றவர்களால், சாவ என - இறந்தொழிக என்று சொல்லும்படி, வாழான் - (கெட்ட வழிகளிற் சென்று) வாழாதவனாய், சான்றோரால் - உயர்ந்தவர்களால், பல் யாண்டும்-பல வருடங்களளவும், வாழ்க என - வாழக்கடவன் என்று சொல்லும்படி, வாழ்தல் - (நன் மார்க்கத்திலிருந்து) வாழுதல், நன்று - நன்மையாம்.

(க - ரை) ஒருவன், தன் குடிப் பிறப்பின் உயர்வையும், தன் இயற்கையையும் நினைத்து, தான் பிறரால் மதிக்கப்படும் பெருங் குணங்களை யுணர்ந்து, மற்றவர்களால் 'இவன் இறந்தொழிக' என்று வெறுக்கப்படாமல், நல்லோரால் 'இவன் பல்லாண்டுகள் வரை வாழ்க' என்று வாழ்த்தப்பட்டு நல்லோனாய் வாழ்தலே சிறந்த தென்பதாம்.

(வி - ரை) ஒருவன் உயர்ந்தோரால் வாழ்த்தப்பட்டு வாழ்தலே சிறப்புடைத்தாம். அங்ஙனம் வாழ்த்தப்படுதற்கு அவன் என்னசெய்ய வேண்டுமெனில், 'நாம் உயர்ந்த குலத்திற் பிறந்திருக்கின்றோம்; ஆதலின், கெட்ட காரியங்களைச் செய்வோமாயின் நம் குலத்திற் கிழிவுண்டாம்' என்று கருதித் தீய மார்க்கத்திற் புகா திருக்கவேண்டும்; 'நம்முடைய தேகமோ அனித்தியமானது; இத் தேகத்தைக்கொண்டே நாம் நன்மார்க்கங்களைத் தேடி நற்புகழையும் நற்பதவியையும் பெறவேண்டும்; இவ்வாறு செய்வதுதான் நாம் ஜன்ம மெடுத்ததனாலுண்டாம் பயன்' என்று தன்னுடைய இயற்கையை உணர்ந்து

தன்னிடத்துள்ள உயர்ந்த நிலையைக் கடைப்பிடித் தொழுகவேண் டும். தான் பிறரால் மதிக்கப்படும் உயர்வான குணங்களைக் கைக் கொள்ளவேண்டும். இக் குணங்களோ டொழுகிவருவானுயின் பிற ரால் வெறுக்கப்படாமல் நல்லோரால் வாழ்த்தப்படுவான். இல்-குடி; இது முதலாகுபெயராய்த் தன் பெருமையை உணர்த்தி நின்றது. கடைப்பிடித்தல்-தெளிவா யறிதல், உறுதியாய்ப் பற்றுதல். பாடு - பெருமை. வாழான் - முற்றெச்சம். சான்றோர் - கல்வியறிவொழுக் கங்களால் நிறைந்தவர்; சால்பு-நிறைவு; அதனையுடையார்-சான்றோர்.

ஒருவன் பிறவியறு மார்க்கம்.

69. நெடுக்கல் குறுக்கல் துறைநீர்நீ டாடல்
வடுத்தீர் பகல்வா யுறையே—வடுத்தீரா
வாகுமந் நான்கொழித் தைந்தடக்கு வானுகின்
வேகும்பம் வேண்டான் விடும்.

(ப - ரை) (ஒரு மனிதன்), நெடுக்கல் - உரோமங்களைச் சடை யாக) நீட்டுதலும், குறுக்கல் - (அவற்றைக்) குறைத்தலும், துறை - (கங்கைமுதலிய புண்ணிய நதிகளின்) துறைகளில், நீடு- அதிகரித்த, நீர் - நீரில், ஆடல்-குளித்தலும், வடு தீர் - குற்றம் நீங்கிய, பகல் - பகற்காலத்தில், வாயுறை-வாயிலிடும் உணவை உண்ணுதலும், வடு- பிறவியாகிய குற்றத்தை, தீரா - ஒழிக்கமாட்டா; (ஆதலின்), ஆகும் - அங்ஙனமாகின்ற, அந்நான்கு - அந்த நான்கு செய்கைகளை யும், ஒழித்து - நீக்கி, ஐந்து - ஐம்புலன்களையும், அடக்குவானுகின்- மனிதன் அடக்குவானேயானுல், வேம் - ஈமத் தீயில் வேதற்குரிய, கும்பம் - குடம்போன்ற வுடம்பினை, வேண்டான் - விரும்பாதவனாய், விடும்-விட்டு நீங்குவான் (அதாவது உடம்பெடுத்தலாகிய பிறவியை அடையமாட்டான்).

(க - ரை) மனிதன் சடை வளர்த்தலாலும், தலை மொட்டை யாவதாலும், புண்ணிய தீர்த்தங்களில் மூழ்குவதாலும், பகற்பொழு

தில் விரதமிருந் துண்பதாலும் பிறவி நீங்கமாட்டாது; ஐம்புலன்களையும் அடக்குவோனே பிறப்பொழிப்பான் என்பதாம்.

(வி - ரை) சடைவளர்த்தல் முதலியன துறவிகட் குரியனவாகக் கொள்ளப்பட்டபோதிலும், புலன்களை யொடுக்காதவர்களுக்கு அவைகளாற் பயனொன்று மின்றாம். இவை, ஐம்புலன்களும் ஒடுங்கற்கு முதலிற் செய்யத்தக்க கிரியைகள். பிறவியை ஒழிக்க நாடுவோர் முதலில் இவற்றை யனுஷ்டித்துப் படிப்படியாகப் புலன்களை அடக்கப் பழகவேண்டும்; புலன்கள் ஒடுங்கியவுடன் இவற்றால் பயனில்லையென இவைகளை விட்டுவிடவேண்டும். சிலர் உண்மை மார்க்கத்தை உணராமல் இவற்றையே சிறந்தவைகளெனக் கருதி எப்பொழுதும் இவற்றை அனுஷ்டித்துக்கொண்டிருந்து பிறவித் துன்பங்கட் காளாவர். அதுபற்றியே ஆசிரியர், அத்தகையினர் உண்மை யுணரும்பொருட்டு, சடைவளர்த்தல் முதலியவை பிறவியை ஒழிக்கமாட்டா வென்றும், ஐம்புலன்களை அடக்குதலே ஜன்மத்தை நீக்குமென்றும் கூறினர்.

கெடுக்கல், குறுக்கல் என்பன பிறவினைகள்; நீளச்செய்தல், குறுகச்செய்தல் என விரியும். உறை-உணவு; இதன்பின் உண்ணுதலும் என்னும் சொல் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது; பகலில் உண்ணுதலாவது விரதமிருந்து பகலில்மாத்திரம் ஒருவேளை யுணவுண்டல். வாயுறையே என்பதனீற்றேகாரம் எண்ணி நிற்றற் பொருளில் வந்தது; கெடுக்கல்முதலிய நான்கிடத்தும் சாரும். ஐம்புலன்களாவன:—சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பனவாம். வேம் என்பதில் மகரங்கெட்டு வே என நின்றது; வேகும்பம்-வினைத்தொகை. கும்பம் - உடம்பிற் குவமையாகுபெயர். குடம் உடைந்தழிதல்போன்று உடம்பொழிதலால் அது குடமெனப்பட்டது. வேண்டான் - முற்றெச்சம்.

## நீதி வரம்பைக் கடந்த பாவம் இன்னவரிடத் துண்டாகு மெனல்.

70. கொன்றான் கொலையை யுடன்பட்டான் கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்காற்—கொன்
யட்டா னிடவுண்டா னைவரினு மாகுமெனக் [றதனை
கட்டெறிந்த பாவங் கருது.

(ப - ரை) கொழிக்குங்கால் - ஆராயுமிடத்து, கொன்றான் - ஒருயிரைக் கொன்றவன், கொலையை - அவ் வுயிர்க் கொலைக்கு, உடன்பட்டான் - உடந்தையானவன், கோடாது-மனங் கோணாமல், (அதாவது அஞ்சாமல் அல்லது நாணாமல்), கொன்றதனை - ஒருயிரைக் கொன்றதனால் வீழ்ந்த உடம்பின் தசையை, கொண்டான் - விலைக்குப் பெற்றுக்கொண்டவன், கொன்றதனை - உயிர் கொன்றதனால் வந்த புலாலை, அட்டான் - சமைத்தவன், இட - அதனை உண்கலத்திற்போட, உண்டான் - உண்டவன், (ஆகிய), ஐவரினும் - இந்த ஐவரிடத்தும், கட்டு-நீதி வரம்பை, எறிந்த - கடந்த, பாவம் - பாவமானது, ஆகும் என-உண்டாகும் என்று, கருது - (அறிஞனே! நீ) கருதுவாயாக.

(க - ரை) ஆராயுமிடத்து, உயிரைக் கொன்றவன், அக் கொலைக் குடன்பட்டவன், புலாலை விலைக்கு வாங்கிக்கொண்டவன், அதைச் சமைத்தவன், உண்டவன் ஆகிய ஐவரிடத்தும் பெரியோர் கொலை கூடாதென் றுரைத்த நீதியைக் கடந்த பாவம் உண்டாகுமென அறிஞனே! நீ கருதுவாயாக என்பதாம.

(வி - ரை) இங்குக் கொன்றான் முதலிய ஐவருமே கொலைக் குற்றத்திற் குரியராகக் கூறப்படினும், ஊனைத் தின்பவனே அக் குற்றத்தில் முதன்மை பெற்றவனாகிறான். ஏனெனில், அவன் தின்னும் பொருட்டுத் தானே உயிர்க் கொலை புரிகின்றான்; அங்

ஙனம் கொலை புரியாவிடினும் ஊனை விலைக்கு வாங்குகிறான்; இங்ஙனம் இவன் தின்னுதற்பொருட்டு உயிர்க்கொலை புரிபவனாயும், ஊனை விலைக்கு வாங்குபவனாயு மிருப்பதனால் ஊன் விற்போர் உயிர்களைக் கொல்லுதலும், புலால் விற்றலையும் செய்கிறார்கள். ஆகவே, ஊன் தின்பவனாலேயே உயிர்க்கொலையும், அதற்கு மற்றொருவன் உடன்படலும், புலால் விற்றலுங், கோடலும், சமைத்தலும், உண்டலும் நிகழ்கின்றன. இங்ஙனம் ஊன் தின்பவரே கொலைக்குரிய எல்லாச் செயல்கட்கும் காரணபூதர்க ளாவார்க ளென்பதை,

> "தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
> விலைப்பொருட்டா லூன்றருவா ரில்."

என்ற திருக்குறட் செய்யுளா னுணர்க. இங்ஙனம் எல்லாவற்றிற்கும் ஒருவனே காரணமாகிறா னெனினும், மற்ற கொலைக்குரிய காரியங்களைச் செய்வோரும் பாதகரே யாதலின், இங்கு அவர்களையும் வேறு பிரித்துத் தனித்தனியே ஒவ்வொரு குற்றவாளிகளாக்கி அவர்களோடு ஊன் தின்பவனையுங் கூட்டி ஐவரும் பாவத்திற் குரியாரெனக் கூறினார் ஆசிரியர். ஆகவே, இந்த ஐந்து தொழில்களையுமே மனிதர் விட்டொழிக்க வேண்டுமென்பது இச் செய்யுளின் கருத்தாம். கொலையை - உருபுமயக்கம்; நான்கனுருபு இரண்டாவதாக மயங்கி வந்தது. கொலை-தொழிற்பெயர். கொன்றதனை என்பது கொல்லப்பட்ட உயிரை உணர்த்து மெனினும் அது தன் நீக்கத்தால் வீழ்ந்த உடம்பின் தசையை உணர்த்திநின்றது. கட்டு - உயர்ந்தோர் உயிர் கொல்லலாகாதெனக் கூறிய நீதி வரம்பு. அறிஞனே என்னும் விளி வருவித் துரைக்கப்பட்டது.

கல்வியறிவுள்ள அரசராவார் இன்னவ ரென்பது.

71. சிறைக்கிடந்தார் செத்தார்க்கு நோற்பார் பலநாள்
உறைக்கிடந்தா ரொன்றிடையிட் டுண்பார்—பிறைக்கிடந்த

முற்றனைத்து முண்ணு தவர்க்கீந்தார் மன்னவராய்க்
கற்றனைத்தும் வாழ்வார் கலந்து.

(ப - ரை) சிறை - சிறைச் சாலையில், கிடந்தார் - இருந்தவர்க்கும், செத்தார்க்கு - இறந்தவர்களுக்கு (நற்பதவி கிடைக்கும் பொருட்டு), நோற்பார் - உண்ணாது நோன்பியற்றுவோருக்கும், பல நாள் - பலநாளும், உறைக்கிடந்தார் - மருந்தில் கிடந்தார்க்கும் (அதாவது: மருந்துண்டு உணவுண்ணாமல் வியாதியிற் கிடந்தவர்க்கும்), ஒன்றுஇடை யிட்டு - ஒருநாள் (உணவில்லாமல்) இடையில் விட்டு, உண்பார் - (மறுநாள்) உணவுண்பவருக்கும், பிறைக்கிடந்து - முதற்பிறையி லிருந்து, முற்றனைத்தும் - அது முடியும் வரையிலும் (அதாவது, பூரணச் சந்திரனாகும் வரையிலும்), உண்ணாதவர்க்கு - ஆகார முண்ணாதவர்களுக்கும், ஈந்தார் - உணவளித்தவர்கள், அனைத்தும் கற்று - எல்லா நீதிகளையும் படித்து, மன்னவராய் - அரசராகி, கலந்து - உயர்ந்த பதவியிற் சேர்ந்து, வாழ்வார் - வாழ்வார்கள்.

(க - ரை) சிறைச்சாலையி லிருப்பவர்க்கும், இறந்தவர் பொருட்டு நோன்பியற்றுவோருக்கும், பலநாள் மருந்துண்டு பத்தியத்தில் கிடந்தவர்க்கும், ஒருநாள்விட் டுணவுண்ணும் விரதமுடையார்க்கும், பிரதமையிலிருந்து பூரணை வரையிலும் உணவுண்ணாத விரதிகட்கும், உணவளித்தவர் நீதிகளைக் கற்று அரசராய உயர்ந்த பதவியிற் சேர்ந்து வாழ்வார்கள் என்பதாம்.

(வி - ரை) சிறைக்கிடந்தார்-எதிரிகளிடம் அகப்பட்டுச் சிறைவாசஞ் செய்வோர்; வெளியேறிப் பொருள் தேட முடியாமல், திக்கற்று அந்தப்புரத்தி லிருக்கும் மாதரெனினுமாம்; குகை வாசம் செய்யும் முனிவர்களெனவும் பொருள் கொள்ளலாம். செத்தார்க்கு நோற்பார் - பிதுர் நோன்பிருப்பவர்கள். உறை - மருந்து; உறைக்கிடந்தார் - மருந்துண்டு பத்தியத்தி லிருந்தவர். ஒருநாள் இடை

விட்டுண்ணுதல் ஒருவகை விரதம். பிரதமையி லிருந்து பௌர்ணமி வரையில் உண்ணாதிருப்பவர் பக்ஷோபவாசக்காரர்கள். இங்குக் கூறப்பட்ட ஐவகையாரும் வெளியேறி உணவு தேடிக்கொள்ள முடியாதவர்களா யிருப்பதால் இவர்கட் குணவளித்தல் மகா புண்ணியமாம். பக்ஷோபவாசம் முதலிய விரதங்கள் பெரும்பாலும் ஜைனர்கள் அனுஷ்டிக்கக்கூடியவை. ஈற்றில் விரித்துக் கூறப் பட்ட நான்கனுருபு மற்றைய நான்கிடங்களினுங் கூட்டி யுரைக்கப் பட்டன.

பேரறங்கள் இன்னவை யென்பது.

72. ஈன்றெடுத்தல் சூல்புறஞ் செய்தல் குழவியை
ஏன்றெடுத்தல் சூலேற்ற கன்னியை—யான்ற
வழிந்தாளை யில்வைத்தல் பேரறமா வற்ற
மொழிந்தார் முதுநூலார் முன்பு.

(ப - ரை) (இல்லறத்தில் செல்வத்துட னிருக்கும் பெண்), ஈன்று - குழந்தையைப் பெற்று, எடுத்தல் - தூக்கி வளர்த்தலும்; சூல் - (மற்றொரு பெண் கொண்ட) கருப்பத்தை, (பிரசவிக்கும் சமயம் வந்தபோது), புறஞ் செய்தல் - வெளியாக்கி (அவளுக்கு) மருத்துவம் பார்த்தலும்; குழவியை-திக்கற்ற குழந்தையை, ஏன்று - மனம்பொருந்தி, எடுத்தல் - தூக்கி வளர்த்தலும்; ஆன்ற - நிறைந்த, சூல் - கருப்பத்தை, ஏற்ற - தாங்கிய, கன்னியை - திக்கற்ற கன்னியையும், அழிந்தாளை-வாழ்வு கெட்ட கைம்பெண்ணையும், இல் வைத்தல் - தன் வீட்டில் வைத்துக் காப்பாற்றுதலும், பேர் அறமா-பெரிய தர்மமாக, அற்றம் - உண்மையில், முது - பழமையாகிய, நூலார் - நீதிநூ லுணர்ச்சியை யுடைய பெரியோர், முன்பு - முற்காலத்திலே யே, மொழிந்தார் - கூறினார்கள்; (ஆதலின், இத் தரும காரியங்கள் செய்யத் தக்கனவாம்).

(க - ரை) இல்லத்தில் வாழும் செல்வ மாது, தான் குழந்தை யைப் பெற்றெடுத்து வளர்த்தலும், மற்றொருத்திக்குப் பிள்ளைப் பேறு பார்த்தலும், திக்கற்ற குழந்தையை எடுத்து வளர்த்தலும், கருக் கொண்டிருக்கும் திக்கற்ற கன்னியையும் துணையற்ற கைம்பெண் ணையும் வீட்டில் வைத்துக் காப்பாற்றுதலும் பேரற மென்று, நீதி நூலறிந்த முன்னோர் கூறினர் என்பதாம்.

(வி - ரை) குழந்தைகள் பிறர் உதவி பெற்று வாழக்கூடியன வாதலின் அவற்றை எடுத்து வளர்த்தல் சிறந்த தருமமாம்; அதிலும் பெற்ற தாயே வளர்த்தல் இன்னும் சிறந்ததாம். அதனுனே, ஒருத்தி தானே குழந்தையை யீன்று வளர்த்தல் தரும மென்றார் ஆசிரியர். பெண்களுக்கு மற்ற வேதனைகளைக் காட்டிலும் பிரசவ வேதனை சகிக்க முடியாததாதலின், மருத்துவம் பார்த்தல் மகா புண்ணிய மாம். தாய் தந்தைய ரில்லாக் குழந்தைகள் வளர்வது கஷ்டமாதலின், அப் பிள்ளைகளை வளர்த்தல் அறத்தில் சிறந்ததாம். கருக் கொண்ட கன்னி திக்கற்றவளா யிருந்தால் திகிற்பட்டு வருந்துவா ளாதலின், அவளை ஆதரித்தல் அளவற்ற புண்ணியமாம். கைம்பெண் புருஷ னற்றவ ளாதலின், எவ்வகையிலும் ஆதரவின்றி வருந்துவள்; ஆத லின், அவளைக் காப்பது சிறந்த தர்மமாம். இங்குக் கூறிய தருமச் செயல்கள் இல்லறப் பெண்களுக்கே உரியனவாம். பிள்ளைகளை வளர்த்தலும், மருத்துவம் பார்த்தலும், கருப்பவதிகளையும் கைம் பெண்களையும் ஆதரித்தலும் பெரும்பான்மையும் பெண்களே செய் யத்தக்கன வாகலின், இத் தருமங்களை அவர்க்குரியனவாகக் கூறி னார் ஆசிரியர். 'முதுநூலார் இவற்றை முன்பு பேரறமா மொழிந் தார்' என்றதனுல், இவை தொன்றுதொட்ட தருமங்க ளென்பதும், இவற்றை ஒவ்வொருவரும் அவசியம் செய்யவேண்டு மென்பதும் பெறப்படும். இச் செய்யுளில் பெரும்பான்மையும் குழந்தைகளைப் பாதுகாத்தலே சிறந்த தருமங்களெனக் கூறப்பட்டிருக்கின்றன. கம்

நாட்டு நீதிகள் இங்ஙனம் வற்புறுத்திக் கூறப்பட்டிருந்தும், நம்முடைய சாஸ்திரங்களைக் கற்காமல் அவமதித்து, அன்னிய நாட்டு அநுசாரங்களை ஆசாரமெனக் கொள்ளும் நாகரிகரென்னும் அநாகரிகர் சிலர், குழந்தைக்குப் பால் கொடுத்தால் பெண்களின் இரத்த புஷ்டியும் அழகும் கெடுமென்று குழந்தையை அன்னியரிடம் கொடுத்து வளர்க்கச் செய்கிறார்கள்; கருக்கொண்டால் மங்கையர் வனப்புக் கெடுமென்று கரு வழித்தலும் செய்வதுண்டு; இவை போன்ற பாதகம் வேறெதுவு மின்று; இத்தகையினர்க்குத் துர்க்கதியே கிடைக்கும்.

எடுத்தல் - தூக்குதல்; அஃதிங்கே வளர்த்தற் பொருளில் நின்றது. குழவி - பிள்ளைக்கு உவமையாகுபெயர். என்று, எற்ற என்பவற்றில், எல் - பகுதி. அற்றம் - உண்மை. முதுமைநூல் மூதுநூலென்றாயது.

இன்ன தருமஞ் செய்தோர் மன்னராவ ரென்பது.

73. வலியழிந்தார் மூத்தார் வடக்கிருந்தார் நோயால் [ய
நலிபழிந்தார் நாட்டறைபோய் நைந்தார்-மெலிவொழி
வின்னவரா மென்னரா யீந்த வொருதுற்று
மன்னவராச் செய்யு மதித்து.

(ப - ரை) வலி அழிந்தார் - தேகபலம் கெட்டவர்; மூத்தார் - முதியவர்; வடக்கு இருந்தார் - வடக்குத் திக்கிற் சென்று தவம் விரதம் முதலியவற்றைச் செய்துகொண்டிருந்தவர்; நோய் நலியால் அழிந்தார் - பிணி வருத்தத்தால் உடல் வலியொழிந்தவர்; நாட்டு அறைபோய்-நாட்டைவிட்டு நீங்கிப் போய், நைந்தார்-(ஜீவித்தற்கு) வருந்தியவர், (ஆகிய இவ் வைவருடைய), மெலிவு ஒழிய-தளர்ச்சி நீங்கும்படி, (அவர்களை), இன்னவர் என்னார் ஆய்-இன்னவரென்று ஆராயாதவர்களாய், (அவர்கள் யாவரா யிருந்தபோதிலும் அவர்க

ளுக்கு) ஈந்த-கொடுத்த, ஒரு துற்று-ஒருணவு, (அங்ஙன மீந்தாரை அடுத்த பிறவியில்), மதித்து-(இவர் இன்ன தருமத்தைச் செய்தவர் என்று) எண்ணி, மன்னவராச் செய்யும் - அரசராகச் செய்துவிடும்.

(க - ரை) வலி யிழந்தார், மூத்தார், வடக்கிருந்த தவத்தினர், பிணியாளர், நாடுவிட்டு நீங்கி நைந்தார் ஆகியவர்களுக்குக் கொடுத்த உணவு, அங்ஙனம் கொடுத்தாரை அரசராகச் செய்துவிடும் என்பதாம்.

(வி - ரை) வடக்கிருந்தார் - தவம், விரதம் முதலியவற்றைச் செய்தற்கு வட திசையில் சென்றிருந்து அவற்றை அனுஷ்டிப்போர்; வடக்கு தேவர்களிருக்கும் புண்ணிய திசையாதலின் தவம், விரதம் முதலியவற்றைச் செய்வோர் அத்திசையில் சென்றிருத்தல் மரபு. இனி, வடதிசை நோக்கி யிருந்து ஜெபம் முதலியன செய்வோர் எனினுமாம்; ஜெபம் செய்வோர் வடக்கு நோக்கி யிருந்து செய்தல் மரபு. நாட்டறை போதல் - நாட்டை விட்டு அறுதலாகப் போதல், அதாவது, நாட்டை விட்டு நீங்கிப் போதல்; அறை - அறுதல்; தொழிற்பெயர். வலியழிந்தாரும், மூத்தாரும், வடக்கிருந்து தவஞ் செய்வாரும், பிணியாளரும் ஜீவனத்திற்குரிய தொழில் செய்ய முடியாதவராவர். சொந்த நாட்டை விட்டு வேற்றூர் சென்றாரும் பிழைக்கும் மார்க்கம் விரைவில் ஏற்படாமல் வருந்துவர். ஆதலின், இவ் வைவகையார்க்கும் உணவளித்தல் சிறந்த தருமமாம். அதனானே இஃது அரசனுந் தன்மையைச் செய்யுமென்றார் ஆசிரியர். 'நம்மவர் அயலார்' என்னும் பாகுபாடின்றி எல்லோருக்கும் ஒரு தன்மைத்தாகவே செய்யுந் தருமமே சிறந்ததாகலின், 'இன்னவரா மென்னாரா யீந்த வொரு துற்று' என்றார் ஆசிரியர். வடக்கிருந்தார்- ஏழாம் வேற்றுமைத் தொகை. 'நோயால் நலி பழிந்தார்' என்பதை, 'நோய்நலிபால் அழிந்தார்' என மாற்றுக. 'இன்னவராம்' என்பதில், ஆம் - அசை.

பேரறம் இன்னதென்பது.

74. கலங்காமை காத்தல் கருப்பஞ் சிதைந்தால்
இலங்காமை பேரறத்தா லீற்றம்—விலங்காமைக்
கோடல் குழவி மருந்து வெருட்டாமை
நாடி னறம்பெருமை நாட்டு.

(ப - ரை) கருப்பம்-ஒரு பெண் கொண்ட கருப்பத்தை, கலங்காமை - அழியாமல், காத்தல்-காப்பதும்; கருப்பம்-அக் கருவானது, சிதைந்தால் - (விதிப்பயனால்) சிதைந்துவிட்டால், பேர்அறத்தால்- பெரிய தரும குணத்தினாலே, இலங்காமை - (அது) வெளிக்குத் தோற்றாமல், ஈற்றம் - (தாய் அதனை) ஈனுதல் செய்தலும் (அதாவது, இரகசியமாக அக் கருச்சிதைவை வெளிப்படுத்திவிடுதலும்); குழவி - பிறந்த குழந்தையை, விலங்காமை - விலகாமல், கோடல் - கைக்கொண்டிருத்தலும்; (அக்குழந்தைக்கு வளர்ச்சியின் பொருட்டு), மருந்து - மருந் தூட்டலும்; (அக் குழந்தையை), வெருட்டாமை - பயமுறுத்தா திருத்தலும், (ஆகிய இவ் வைந்தனையும்), நாடின் - ஆராயுமிடத்து, பெருமை அறம் - பெரிய தருமமாக, நாட்டு-(அறிஞனே! நீ) நிலைபெறவித்துக் கூறுவாயாக.

(க - ரை) ஒரு பெண், கருவைக் கலங்காமற் காத்தலும், சிதைந்த கருவை இரகசியமாக வெளிப்படுத்திவிடுதலும், பெற்ற பிள்ளையை விலகாமற் றூக்கி வளர்த்தலும், அக் குழந்தைக்கு மருந் தூட்டலும், அப் பிள்ளையை அச்சுறுத்தா திருத்தலும் பெரிய அறமென்று அறிஞனே! நீ உறுதிப்படுத்திக் கூறுவாயாக என்பதாம்.

(வி - ரை) வயிற்றிற் குள்ளிருக்கும் பிள்ளைகளும், பிறந்த குழந்தைகளும் தங்களுக்கு வரும் ஆபத்துக்களைத் தெரிந்து விலக்கிக் கொள்ளும் சக்தி யற்றனவாதலின், அவற்றைப் பாதுகாக்கத் தாயே கடமைப்பட்டவள். ஆதலின், அவள் கருவைச் சிதையாமல் காக்க வேண்டும்; பிறந்த குழந்தைகளை எங்குமாறு பிரித்து விடாமல் எப்

பொழுதும் கையிற் றூங்கி அன்புடன் வளர்த்தல் வேண்டும்; அவை கள் நோயிடைப்பட்டு வருந்தா திருக்குமாறு அவற்றிற்குச் சமயமறி ந்து மருந் தூட்டல் வேண்டும்; அவைகள் பயப்படும்படி கடினமொழி களைக் கூறி அதட்டாமல் இன்மொழி கூறி அவற்றைச் சந்தோஷி க்கச் செய்யவேண்டும்; குழந்தைகளை அச்சுறுத்தினால், அவைகள் அவ்வச்சத்தால் பிணிகொண்டு கேடடையும். தெய்வ சங்கல்பத்தால் கருச்சிதைவு நேர்ந்துவிடின் பிற ரறியாமல் அதனை வெளிப்படுத்தி விடவேண்டும்; அச் செய்கையைப் பிறர் அறிந்தால், அது விதிப் பயனால் நேர்ந்த தெனினும் அதன்பொருட்டு அருவருப்புக் கொள் வது உலக இயல்பு. ஆதலின், பெரும்பாலும் அச் சம்பவத்தை மறைத்தலே நன்மையாம்.

கலங்காமை, இலங்காமை, விலங்காமை என்பன எதிர்மறை வினையெச்சங்கள்; இவற்றுள் மை மூன்றும் வினையெச்ச விகுதிகள். ஈற்றம் - ஈன்றல், தொழிற்பெயர்; இதன்பின் செய்தல் என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. கோடல் - உடன்பாட்டுத் தொழிற்பெயர். மருந்து என்பதற்குப் பின் ஊட்டல் என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. வெருட்டாமை - எதிர்மறைத் தொழிற்பெயர்; இதில், வெருட்டு - பிறவினைப் பகுதி; வெருள் - தன்வினைப் பகுதி. அறம் பெருமை யென்பன முன்பின்னாக மாற்றிப் பொருளுரைக்கப்பட்டன. அறி ஞனே என்னும் விளி வருவித் துரைக்கப்பட்டது. கருப்பம், தீபக மாக இரண்டிடத்துங் கூட்டப்பட்டது.

ஊனுண்ணாமையும், உயிர் கோல்லாமையும் நன்றேன்பது.

75. சூலாமை சூலிற் படுந்துன்ப மீன்றபின்
ஏலாமை யேற்றால் வளர்ப்பருமை—சால்பவை
வல்லாமை வாய்ப்ப வறிபவ ருண்ணாமை
கொல்லாமை நன்றாற் கொழித்து.

(ப-ரை) சூலாமை - கருக்கொள்ளாமையாலும், சூலின்-கருக்கொண்டதாலும், படும் துன்பம்-உண்டாகுந் துன்பத்தையும், ஈன்றபின் - குழந்தைகளைப் பெற்றபின், ஏலாமை - (அவை) பொருந்தாமற் போவதையும் (அதாவது, மரித்துப் போவதையும்), ஏற்றல்-(அவை உயிரோடு) பொருந்துமேயானல் (அதாவது நிலைத்திருந்தால்), வளர்ப்பு - (அவற்றை) வளர்த்தலில், (ஏற்படும்), அருமை - அருமையையும் (அதாவது வளர்க்கும் பிரயாசையையும்), அவை - அவைகள், சால்பு - நற்குணங்களில், வல்லாமை - வன்மையற்றிருத்தலையும் (அதாவது, அவை நற்குண மில்லாமற் போவதையும்), வாய்ப்ப-மனத்திற் பொருந்த, கொழித்து - ஆராய்ந்து, அறிபவர் - உணர்பவர், (பிறப்பினு லுண்டாம் துன்பம் முதலியவற்றை எண்ணி), கொல்லாமை - ஒருயிரைக் கொல்லாமையும், உண்ணுமை-(அதன் தசையைத்) தின்னுமையும், நன்று - நன்மையாம்.

(க - ரை) பிறப்பினு லுண்டாம் ஐவகைத் துன்பங்களையும் ஆராய்ந் துணர்வோர் உயிர் கொல்லாமையும், புலா லுண்ணுமையும் நன்று என்பதாம்.

(வி - ரை) மனிதர்க்குச் சந்ததி யுண்டாகா திருந்தால் பெருங் கவலையாம்; கருக்கொண்டாலோ அதனைப் பாதுகாத்தல் பெருந் துன்பமாம்; பின்னர்ப் பிரசவ வேதனைப்பட்டு ஈன்று அது நிலைக்காமற் போய்விடின் அடங்காத் துயரமாம்; அக் குழந்தை நிலைத்தாலோ அதனை வளர்த்தலில் அளவற்ற கஷ்டமாம்; அங்ஙனம் வளர்த்து அப் பிள்ளை விருத்தி யடைந்தபின் நற்குண மில்லாமற் போயின் இருந்தும் இறந்ததுபோலவே நினைத்துத் துக்கப்படவது வுண்டாம். மனிதர் பிறப்பில் இவ்வளவு துன்பங்க ளிருப்பதால் அதனை யடைந்தோர் இத் துன்பங்களை ஆராய்ந் துணர்ந்துகொள்வாராயின் மற்றைய ஜீவன்களும் தங்களைப் போலவே அரும் பிர

யாசையில் தோன்றி யிருப்பன வென்பது அவர்கட்கு விளங்கும்; ஆதலின், அத் தகைய ஜீவனைக் கொல்லாதிருப்பதும், அதன் தசையைத் தின்னாதிருத்தலும் சிறந்த தருமமாம். சூலாமை-எதிர்மறைத் தொழிற்பெயர்; சூலல்-உடன்பாட்டுத் தொழிற்பெயர்; அஃது அல் விகுதி குன்றிச் சூல் என முதனிலைத் தொழிற்பெயராய் நின்றது. வளர்ப்பு - தொழிற்பெயர். ஏலாமை சாதன்மே னின்றது. சால்பு - மேன்மைக குணம். 'சால்பவை வல்லாமை' என்பது, 'அவை சால்பு வல்லாமை' என மாற்றிக் கொள்ளப்பட்டது. கொல்லாமை, உண்ணாமை-எதிர்மறைத் தொழிற்பெயர்கள். நன்றால் என்பதில், ஆல் - அசை.

நோயின்றி வாழ்பவர் இன்னவ ரென்பது.

76. சிக்கர் சிதடர் சிதலைப்போல் வாயுடையார்
துக்கர் துருநாமர் தூக்குங்கா ற்—றொக்க
அருநோய்கள் முன்னாளிற் றீர்த்தாரே யிந்நாள்
ஒருநோயு மின்றிவாழ் வார்.

(ப-ரை) தூக்குங்கால் - ஆராயுமிடத்து, சிக்கர் - புத்தி மாறுபாட்டையுடைய பித்தர், சிதடர் - குருடர், சிதலைப்போல் - கறையான் புற்றைப்போல, வாயுடையார் - வாயுடையவர்கள் (அதாவது: வாய்ப்புற் றுடையவர்கள்), துக்கர் - துக்க நோயுடையவர் (அதாவது: எப்பொழுதும் துக்கத்தையே உண்டாகிக்கொண் டிருக்கின்ற க்ஷய நோயுடையவர்கள்), துருநாமர்-கெட்ட அச்ச நோயுள்ளவர்(அதாவது: எப்போதும் அச்சத்தையே தருகின்ற மூலநோ யுடையவர்), (ஆகிய ஐவரிடத்தும்), தொக்க-கூடிய, அரும்-தீர்த்தற்கரிய, நோய்கள் - பிணிகளை, முன் நாளில் - முற்காலத்தில் (அதாவது: முந்தின ஜன்மத்தில்), தீர்த்தாரே - தீர்த்தவர்களே, இந் நாள் - இக்காலத்தில், (அதாவது; இந்த ஜன்மத்தில்), ஒரு நோயும் இன்றி - ஒரு பிணியு மில்லாமல், வாழ்வார் - வாழ்பவர்கள்.

(க-ரை) ஆராயுமிடத்து முற்பிறப்பில் பித்தர், குருடர், வாய்ப்புற்றுடையார், கபநோயுள்ளார், மூலவியாதி யுடையார் ஆகியவர்களின் பிணித் துன்பங்களை அகற்றினவர்களே இப் பிறப்பில் நோயில்லாமல் வாழ்பவர் என்பதாம்.

(வி - ரை) சிக்கு-பிசகு; அது புத்தி மாறுபாட்டைக் குறித்தது. சிதல் - கறையான்; அது கறையான் புற்றை உணர்த்திநின்றது; வாய்ப்புற்றுவியாதி கறையான் புற்றைப்போன் றிருக்கும். கபரோகமானது சேர்ந்தவர்க்குத் துக்கத்தையே உண்டாக்கிக்கொண்டிருக்குமாதலின் அதற்குத் துக்கமெனப் பெயர் கூறப்பட்டது; இன்னும் துக்கத்தை விளைவிக்கும் நோய்களுக் கெல்லாம் இப்பெயர் கூறினும் அமையும். துரு-குற்றம்; அது கேட்டை யுணர்த்திற்று. நாமம் - அச்சம்; அச்சத்தைத் தருகின்ற மூலநோயை உணர்த்திற்று; இன்னும் அச்சந் தரும் பல நோய்களையும் உணர்த்தும். துக்கத்தையுடையார்-துக்கர். துருநாமத்தையுடையார் - துருநாமர். இங்குக் கூறிய ஐந்து வகையாரின் நோய்களும் தீர்த்தற் கரியனவாதலின், அவற்றைத் தீர்த்தல் மகா புண்ணியமாம். முன் ஜன்மத்தில் அந் நோய்களைத் தீர்த்தவர் இப் பிறப்பில் நோயற்ற வாழ்வை யடைவர். சிக்கர்முதல் துருநாமர் வரையிலுள்ள ஐந்தும் வினையாலணையும பெயர்கள்; இவை தனித் தனியாகத் தொக்க என்பதனோடு கூடி ஏழாம்வேற்றுமைத் தொகையாகும். அருமை முடியாமைமே னின்றது. தீர்த்தாரே என்பதில் ஏ - பிரிநிலை. ஒரு நோயும் என்பதன் உம்மை முற்றுப்பொருளதாம்.

### தக்கார் கடன்

77. பக்கம் படாமை யொருவர்க்குப் பாடேற்றல்
தக்கம் படாமை தவமல்லாத்—தக்கார்
இழியினர்க்கே யானும் பசித்தார்க ணீதல்
கழிகினங் காத்தல் கடன்.

(ப - ரை) தக்கார் - தகுதியுடையவர்கள் (அதாவது: உயர்ந்தோர்), பக்கம் படாமை - ஒரு பக்ஷத்தில் சாராமையும் (அதாவது: பாரபக்ஷமின்றி நடு நிலைமையோடிருப்பதும்), ஒருவர்க்கு-ஒருமனிதர்க்கு, (ஏற்பட்ட), பாடு - துன்பத்தை, ஏற்றல் - தாம் தாங்கிக்கொள்ளுதலும், தக்கம் படாமை - (உலகிற்குப்) பயனற்ற தன்மையிற் சாராமையும் (அதாவது: உலகிற்குப் பயனுடையராயிருப்பதும்), தவம் அல்லா-உயரும் தவம் செய்யாத, இழி இனர்க்கே ஆனும்-இழிந்த வகுப்பினர்க்கே யானாலும், பசித்தார்கண்-பசியுள்ளவர்க்கு, ஈதல்-உணவளித்தலும், கழி - மிகுந்த, சினம் - கோபத்தை, காத்தல் - தம்மிடத்தே வராமற் பரிகரித்தலும், கடன் - அவர்க்குக் கடன்மையாம்.

(க - ரை) பாரபக்ஷமின்றி யிருத்தலும், பிறர் துன்பத்தைத் தாங்கிக்கொள்ளலும், உலகிற்குப் பயனுடையராயிருத்தலும், இழிந்தோராயினும் பசித்தார்க் குணவளித்தலும், கோபத்தை அகற்றலும் தக்கார் கடன்மை என்பதாம்.

(வி - ரை) தம்மவர், அன்னியர் என்ற இருவகுப்பாருள் தம்மவர்க் கிதமும், அன்னியர்க் கஹிதமும் செய்தலே பக்கம் படுதலாம்; பக்கம்-ஒரு பக்ஷம்; படுதல்-சார்தல்; இது நடுவு நிலைமைக்கு விரோதமாதலால் மகா பாதகமாம்; ஆதலின், தக்கார் இதனை அகற்றல் வேண்டும். பிறர் துன்பந் தாங்குதலாவது ஒருவர்க்கு ஆபத்து வந்த காலத்தில் உத்தமர் தம் முயிரைக் கொடுத்தேனும் அவரைக் காப்பாற்றுதல். மனிதர் உலகிற்குப் பயனுடையராயிருத்தலாவது பற்பல தான தருமங்களைச் செய்து பலர்க்கும் மகோபகாரிகளாயிருந்து நற்கதி யடைதலாம். உயர்குலத்தார்க்கு மட்டும் பசியில்லாதபோதும் அன்னமிட்டுப் பசித்துவரும் மற்ற தாழ்ந்த வகுப்பினர்க் குணவளிக்காமல் நடைபெறும் சத்திரங்களை ஸ்தாபித்து மகா பாதகத்தைத் தேடிக்கொள்ளும் பேதையர் போன்று அன்னதானம் செய்தால்

நீக்கதியே சித்திக்கும். இழிகுலத்தாராயினும் பசித்தார்க்கு அன்ன மிடுதலே சிறந்த புண்ணியமாம். கோபம் அநேகம் தீமைகளை விளைவிப்பதாதலின் அதனை அறவே யொழித்தல் உயர்ந்த தருமமாம். இவற்றைக் கைக்கொண்டவரே உயர்ந்தோராவர்; ஆதலின், இவை அவர்க்குக் கடன் என்றார் ஆசிரியர்.

தக்கம் - பயனின்றி வெறுமனே யிருப்பது; பன்னாங்குழி யென்னும் விளையாட்டைச் செய்யுங்காலத்தில், முத்துக்கள் இல்லாமல் வறிதாய்விட்ட குழியை, பெண்கள், 'தக்கம்' என்று சொல்லுவது பாண்டிநாட்டு வழக்கு; அவ் வழக்குப் பற்றியே இங்குப் பயனற்ற தன்மைக்குத் தக்கம் என்னும் சொல் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு நாட்டு வழக்கச் சொற்களின் தன்மையை உணர்வார்க்கே இத்தகைய உலகவழக்கச் சொற்களின் உண்மைப் பொருள் விளங்கும். படாமை, இரண்டும் எதிர்மறைத் தொழிற் பெயர்கள். 'தவமல்லா இழியினர்க்கே' எனக் கூட்டுக. ஆயினும் எனற்பாலது ஆனும் எனத் தொகுத்தலாயிற்று. பசித்தார்கண் - உருபுமயக்கம்; நான்கனுருபு ஏழனுருபாக மயங்கிவந்தது. கழி - உரிச்சொல்.

### கடைசிநாள்மட்டும் மகிழ்ந்து வாழ்பவர்.

78. புண்பட்டார் போற்றுவா ரில்லாதார் போகுயிரார்
கண்கெட்டார் காலிரண்டு மில்லாதார்—கண்கண்பட்
டாழ்ந்து நெகிழ்ந்தவர்க் கீந்தார் கடைபோக
வாழ்ந்து கழிவார் மகிழ்ந்து.

(ப-ரை) புண்பட்டார்கண் - போர் செய்து புண்பட்டவரிடத்தும், போற்றுவார் இல்லாதார்கண் - ஆதரிப்பா ரில்லாதவரிடத்தும், போகு உயிரார்கண் - போகின்ற உயிரை யுடையவரிடத்தும் (அதாவது: குற்றுயிராய்ப் பிராணன் பிரியுந் தருணத்தி லிருந்தவர்களிடத்

தும்), கண் கெட்டார்கண் - கண்ணிழந்த குருடரிடத்தும், கால் இரண்டும் இல்லாதார்கண் - இரண்டு கால்களு மில்லாத முடவர்களிடத்தும், கண் பட்டு - கண்பட (அதாவது: அருட்பார்வை யுண்டாக), ஆழ்ந்து நெகிழ்ந்து - (அவர் சிந்தனையில்) ஆழ்ந்து மனமுருகி, அவர்க்கு - அவர்களுக்கு, ஈந்தார் - (வேண்டியன) கொடுத்தவர்கள், கடை போக - (தங்கள் வாழ்க்கை ஆயுளின்) கடைசிவரை செல்ல, மகிழ்ந்து வாழ்ந்து - சந்தோஷித்து வாழ்ந்து, கழிவார் - (ஆயுள் முடிவில் சுகமாக நற்கதி யடைய இவ் வுலகை விட்டு நீங்குவார்கள்.

(கு - ரை) புண்பட்டவரிடத்தும், ஆதரவற்றவரிடத்தும், குற்றுயிராய்க் கிடந்தவரிடத்தும், குருடரிடத்தும், முடவரிடத்தும் அருட்பார்வை யுடையவராய் மனமுருகி அவர்க்கு வேண்டுவன நல்கியவர், பூரண ஆயுளுடன் மகிழ்ந்து வாழ்ந்து இவ் வுலகை விட்டு நீங்குவர் என்பதாம்.

(வி - ரை) போற்றுவார் இல்லாதார் - ஜீவனோபாயம் செய்யச் சக்தியற்று ஆதரிப்பாரு மில்லாமல் வருந்துவோர். போகுயிரார் - காயத்தாலோ நோயாலோ ஆவி பிரியுந் தருணத்தி லிருப்பவர். புண்பட்டார் முதலிய ஐவரும் உணவு தேடச் சக்தி யற்றவராதலின் இவர்க்கு உணவுமுதலியன அளித்தல் மகா புண்ணியமாம். ஆதலின், இத் தகைய தருமத்தைச் செய்வோர் ஆயுட்காலம் வரை மகிழ்ந்து வாழ்ந்து நீங்குவர். மனிதர்க்கு எப்பொழுதும் துன்பமற்ற வாழ்க்கை ஏற்படுவது அருமை யெனினும், இப் புண்ணியத்தா லுண்டாகும். மனிதர்க்கு ஏற்பட்ட பூரண ஆயுள் எவ்வளவோ அவ்வளவுவரை இப் புண்ணியமுடையர் வாழ்வர் என்பது விளங்க 'கடைபோக வாழ்ந்து' என்றார் ஆசிரியர். கண் - என்னும் ஏழனுருபு ஐந்திடங்களினுங் கூட்டப்பட்டது. 'கண்பட' என்னும் செயவெனெச்சம், 'கண்பட்டு' எனச் செய்தெனெச்சமாகத் திரிந்துவந்தது. "சொல் திரியினும் பொருந்திரியா வினைக்குறை" என்பது (நன்-வினை-உ௪) ஆம் சூத்திரம். கண்படல் - கண் பார்வை செல்லல்,

எண்பது வயதுக்கு மேலும் வாழ்பவன்.

79 பஞ்சப் பொழுது பாத்துண்பான் காவாதான்
அஞ்சா துடைபடையுட் போந்தெறிவான்-எஞ்சாதே
உண்பதுமு னீவான் குழவி பலிகொடுப்பான்
எண்பதின் மேலும்வாழ் வான்.

(ப - ரை) பஞ்சப்பொழுது - சிறுவிலைக்காலத்தில், பாத்து - (தன்னிடமிருக்கும் உணவுப் பொருள்களைப் பலர்க்கும்) பகிர்ந்து கொடுத்து, உண்பான் - (பின்பு) தான் உண்பவனும்; காவாதான் - (தன்னிடத்துள்ள பொருள்களைக்) காவாமல் எவரும் எடுத்துக் கொள்ளும்படி செய்பவனும்; உடை படையுள்-சிதைந்த தன் பக்கத்துப் படையுள்ளே, அஞ்சாது போந்து - அஞ்சாமற் புகுந்து, எறிவான் - எதிரி படையை அடித்தோட்டித் தன் படையை நிலைக்கச் செய்து வெற்றி கொள்வோனும்; எஞ்சாது-குறையாமல், உண்பது - தான் உண்ணு முணவை, முன் - உண்பதற்கு முன்னே, ஈவான் - பிறர்க் களிப்பவனும்; குழவி பலி - பிள்ளைச் சோறு, கொடுப்பான் - கொடுப்பவனும், (ஆகிய இவ் வைவகைத் தருமங்களையும் செய்பவன்), எண்பதின்மேலும் - எண்பது வயதிற்கு மேலும், (இருந்து), வாழ்வான் - ஜீவிப்பான்.

(கு - ரை) பஞ்சகாலத்தில் உணவுப் பொருள்களைப் பிறர்க்குப் பகிர்ந்து கொடுத்துண்பானும், தன் பொருள்களைக் காத்தலின்றிப் பலர்க்கும் பயன்படச் செய்பவனும், உடைந்த படையுட் புகுந்து எதிரி படைகளைத் தாக்கி அவ் வுடைந்த படையை நிலை நிறுத்துவோனும், தான் உண்பதை முன்னே பிறர்க்களிப்பவனும், பிள்ளைச் சோறு கொடுப்பவனும் ஆகிய ஒருவன் எண்பது வயதிற்கு மேலும் வாழ்வான் என்பதாம்.

(வி - ரை) பஞ்சப்பொழுதாவது - உலகத்தில் மழையின்றி விளைவு குன்றி உணவுப் பொருள்கள் கிடைக்காத காலம்; இது, அதி

சப் பணத்திற்கும் அற்பப்பொருள் கிடைக்குங் காலமாதலின் சிறு விலைக்கால மெனப்படும்; விலையென்பது விற்கும் பொருளை யுணர்த்தும். பொருளைக் காவாதிருத்தலாவது, பொரு ளறையைத் திறந்துவிட்டு எவரும் வந்து தமக் கிஷ்டமானதை எடுத்துக்கொள்ளும்படி செய்தல். பண்டைக்காலத்தில் தர்மிஷ்டர்கள் இவ்வாறு தருமஞ் செய்வ தியற்கை. பஞ்சகாலத்தில் மனிதர்கள் உணவகப்படாமல் மிகுந்த துயர்க்குள்ளாவார்க ளாதலின், அக் காலத்தில் பொருளுள்ள ஒருவன் தன் உணவுப் பொருள்களைப் பலர்க்கும் பகிர்ந்துகொடுத்துண்ணலும், தன்னுடைய மற்ற பொருள்களைக் காவாமல் பலர்க்கும் பயன்படச் செய்தலும் சிறந்த தருமங்களாம். படை யுடைந்தோடுந் தருணத்தில் இடையில் அஞ்சாமற் புகுந்து எதிரி படையையோட்டி, உடைந்த தன் பக்கப் படையை நிலை நிறுத்துதல் சிறந்த புண்ணியமாகும். ஒருவன், தான் உண்பதை முன்னே பிறர்க்குக் கொடுத்துண்ணுதலும், குழந்தைக்குச் சோறு கொடுத்தலும் சிறந்த அறங்க ளென்பது பிரசித்தம். மனிதர்க்கு நூற்றிருபது வயது ஏற்பட்டிருப்பினும் அவர் எண்பது வயதுவரை வாழ்தலே அருமையாதலின், இங்கு ஆசிரியர், 'இத்தகைய தருமங்களைச் செய்பவன் எண்பதின்மேலும் வாழ்வான்' என்றார்.

பொழுது என்பதில் எழனுருபு தொக்கது. பகுத்து என்பது பாத்து என மருவி நின்றது. குழவிபலி - நான்காம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். உடைபடை - வினைத்தொகை. எஞ்சாதே என்பதில் ஏ - அசை. எண்பது - ஆயுளுக்கு எண்ணவளவை யாகு பெயர். இதில் சிற்சில விடங்களில் இசையெச்சச் சொற்கள் வருவித் துரைக்கப்பட்டன.

அறிவுடையார் இன்ன இன்னவற்றைச் செய்யார்
என்பது.

80. வரைவில்லாப் பெண்வையார் மன்னைப்புற் றேறார்
புரையில்லார் நள்ளார்போர் வேந்தன்—வரைபோற்

கடுங்களிறு விட்டுழிச் செல்லார் வழங்கார்
கொடும்புலி கொட்கும் வழி.

(ப - ரை) (அறிஞர்), வரைவு இல்லா - மணஞ் செய்தல் இல்லாத, பெண் - பொதுமாதரை, வையார் - (தமக்கு மனைவியராகும் படி தம் வீட்டில்) வைத்துக்கொள்ள மாட்டார்கள்; மன் - நிலை பெற்ற, நா - வருந்துதலையுடைய, புற்று - பாம்பின் புற்றின்மேல், ஏறார் - ஏறமாட்டார்கள்; புரை இல்லார் - தமக்கு நிகரில்லாதவரோடு, நள்ளார் - சிநேகங் கொள்ளமாட்டார்கள்; போர் - யுத்தம் புரிதலில் வல்ல, வேந்தன் - அரசனுடைய, வரைபோல் - மலைபோன்ற, கடும் - கடுமையான குணம் பொருந்திய, களிறு - யானையை, விட்டுழி - விட்ட விடத்தில், செல்லார் - போகமாட்டார்கள்; கொடும்புலி - கொடுமையான செயலையுடைய புலியானது, கொட்கும் - சுழன்று திரிகின்ற, வழி - காட்டு வழியில்; வழங்கார் - நடக்கமாட்டார்கள்.

(க - ரை) அறிவுடையார், விலைமாதரை மனைவியராகக் கொண்டு இல்லிற் சேர்த்துவைக்கமாட்டார்கள்; அபாயத்தை யுண்டாக்கும் பாம்பின் புற்றில் ஏறமாட்டார்கள்; தமக்குச் சமத்துவ மில்லாதவரோடு நட்புக்கொள்ளமாட்டார்கள்; அரசனுடைய பட்டத்து யானையை அவிழ்த்து அது மதங் கொண்டதால் அடக்க முடியாமல் விட்ட இடத்திற் சேரமாட்டார்கள்; புலி திரியும் காட்டு வழியிற் போகமாட்டார்கள் என்பதாம்.

(வி - ரை) பரத்தையரை மனைவியராகக் கொண்டு வீட்டில் சேர்த்துவைத்தால் ஒரு சிறப்பு'மில்லாமற் போவதோடு அவர்களால் பல கெடுதிகளும், பழியும், பாவமும் உண்டாம். புற்றில் பாம்பு குடியிருக்கு மாதலின் அதன்மீ தேறினல் அப் பாம்பு சீறிக் கடிக்க மரண முண்டாகும். சம மில்லாதாரோடு சிநேகஞ் செய்தால் பல

கேடுகளும், இழிவும், மனக் கவலையும் சம்பவிக்கும். யானை மதங் கொண்டு அடக்கப்படாமலும் கட்டப்படாமலும் திரியு மிடத்திற் சேர்ந்தால் அஃதுடனே பிடித்துக் காலால் தேய்த்துக் கொல்லும். புலி சஞ்சரிக்கும் காட்டு வழியிற் சென்றால் அதனால் உயிர்க்கு மோசம் வரும். ஆதலின், அறிவுடையார் இவ் விடங்களிற் செல்ல மாட்டார்கள்.

வரைவு - தொழிற்பெயர்; இதன் பொருள் எல்லைப்படுத்தல் என்பதாம்; அஃதிங்கே நிச்சயித்தற்பொருளில் நின்றது. ஒரு பெண்ணையும், புருஷனையும் 'இவள் இவனுக்கு மனைவி; இவன் இவளுக்குக் கணவன்' என நிச்சயப்படுத்துவதே கலியாண மாதலின் அதற்கு வரைவு என்று பெயர் கூறப்பட்டது. விலைமாதர் அஃதில்லாதவராதலின், 'வரைவில்லாப் பெண்' எனப்பட்டார். நை புற்று என்பதற்குச் 'சிந்தந்த பழமையான புற்று' எனலுமாம்; பழம்புற்றிலேயே பாம்பிருக்கும். புற்றேறூர் - ஏழாம் வேற்றுமைத் தொகை. நகரில் திரிவது அரசனுடைய யானையே ஆகலானும், அது பட்டத்து யானையாதலின் மலை போலப் பெரிதாயிருக்கு மாகலானும், அதற்கே மதமிகு மாதலானும், மத மிகுதியால் அதுவே மனிதரைக் கொல்லத்தக்கதாகலானும் அது, 'போர் வேந்தன் வரைபோற் கடுங் களிறு' எனப்பட்டது. விட்ட உழி என்பது விட்டுழி எனத் தொகுத்தலாயிற்று. அறிஞர் என்னும் எழுவாய் வருவித் துரைக்கப் பட்டது.

கெடாத சந்ததியும், கெடும் சந்ததியும் இன்னவை
யென்பதும், ஒருவனுக்குப் பழி, புகழ்,
அறிவு உண்டாகு மியல்பும்.

81. தக்கார் வழிகெடா தாகுந் தகாதவர்
உக்க வழியரா யொல்குவர்—தக்க

இனத்தி ளுகும் பழியும் புகழும்
மனத்தி ளுகு மதி.

(ப - ரை) தக்கார் - நற்றன்மை யுடையவரது, வழி - சந்ததி யானது, கெடாது - அழியாமல், ஆகும் - விருத்தி யடையும்; தகாத வர் - நற்றன்மை யற்றவர், உக்க வழியராய் - அழிந்த சந்ததியை யுடையவராய் (அதாவது: சந்ததி யில்லாதவர்களாய்), ஒல்குவர் - (வாழ்விற்) குறைவார்கள்; பழியும் புகழும் - (ஒருவனுக்கேற்படும்) அபகீர்த்தியும் கீர்த்தியும், தக்க - அவனுக் குரிமையான, இனத்தி ளுன் - கூட்டத்தினுலே, ஆகும் - உளவாகும்; மதி - அறிவானது, (ஒருவனுக்கு), மனத்திளுன் - அவனுடைய மனத்தினளவினுலே, ஆகும் - உண்டாகும்.

(கு - ரை) நற்றன்மை யுடையாரது சந்ததி குறைவுபடாது; நற்குதி யில்லாதவர் சந்ததி யற்றவராய் வாழ்விற் குறைவர்; ஒருவ னுக்குப் பழியும் புகழும் அவன் சேர்ந்த இனத்திற்குத் தக்கபடி ஆகும்; அறிவு மனத்தி னியல்புக்குத் தக்கவா ருகும் என்பதாம்.

(வி - ரை) நற்றன்மை யுடையார் - நடுநிலைமை முதலிய நற் குணங்கள் பொருந்தியவர்; நற்றன்மை யற்றவர் - அவை யில்லாத வர். நற்றன்மை யுடையார்க்குச் சந்ததி விருத்தி யடைதலும், அஃ தில்லார்க்குச் சந்ததி குறைதலும் இயற்கை. "தக்கார் தகவில ரென்ப தவரவ, ரெச்சத்தாற் காணப் படும்" என்னுந் திருக்குறட் செய்யு ளால் இஃதுணரப்படும். ஒருவன் கெட்ட இனத்தைச் சேர்வா ளுயின் அவனுக்குப்பழியே மிகும்; நல்லினத்தைச்சேர்ந்தால் கீர்த்தி மிகும். மனம் நல்ல இயற்கையிற் பொருந்தியிருந்தால் அதனுல் அறிவுமிக்க செய்கைகளே நிகழும்; "மனத்தா ளுமாந்தர்க் குணர்ச்சி யினத்தானும், இன்ன னெனப்படுஞ் சொல்" என்பது திருக்குறள். சந்ததி ஆதல், அழிதல், பழியாதல், புகழாதல், அறிவாதல் என ஐந்து

கொள்க. தக்கார், தகாதவர் வினையாலணையும் பெயர்கள். தக்க என்பது சேர்க்கையாதல் அல்லது உரிமையாதல் என்னும் பொருளில் நின்றது. பழியும், புகழும் என்பவற்றிலுள்ள உம்மைகள் எண்ணி நிற்றற் பொருளன; எச்சப் பொருளன வெனினுமாம்.

தேவரால் துதிக்கத் தக்கவன் இன்னவ னென்பது.

82. கழிந்தவை தானிரங்கான் கைவரா நச்சான்
இழிந்தவை யின்புறா னில்லார்—மொழிந்தவை
மென்மொழியா னுண்ணெகிழ்ந் தீவானேல் விண்ணோ
இன்மொழியா லேத்தப் படும். [ரால்

(ப - ரை) (ஒருவன்), கழிந்தவை - (தன்னை விட்டு) நீங்கிய பொருள்கட்கு, தான் இரங்கான் - தான் வருந்ாதவனும்; கைவரா - தன் கையில் சேராதவைகளை, நச்சான் - விரும்பாதவனும்; இழிந்தவை - தாழ்ந்த பொருள்களின்மேல், இன்பு உறான் - மனக்களிப் படையாதவனும்; இல்லார் - பொருளில்லாத வறிஞர், மொழிந்தவை - (விரும்பித் தமக்கு வேண்டுமென்று) சொன்னவற்றை, மெல் மொழியால் - மெல்லிய இன்சொல்லோடு, உள் நெகிழ்ந்து - மனமுருகி, ஈவானேல் - (அவர்க்குக்) கொடுப்பானாயின், (அவன்), விண்ணோரால் - தேவர்களால், இன்மொழியால்-இன் சொற்களால், ஏத்தப்படும் - துதிக்கப்படுவான்.

(க - ரை) ஒருவன், தன்னை விட்டு நீங்கிய பொருள்களுக்கு வருந்தாதவனும், கைக்கு வராத பொருள்களை விரும்பாதவனும், தாழ்ந்த பொருள்களின்மேல் களிப்புறாதவனும், பொருளில்லார் விரும்பியவற்றை மன மகிழ்ந்து 'இன் சொற்களோடு கொடுப்பானாயின், அவன் தேவர்களால் கொண்டாடப்படுவான் என்பதாம்.

(வி - ரை) ஒருவன், தன்னை விட்டு நீங்கிய பொருள்களை மீண்டும் பெறுதல் அரிதாகலின், அவற்றின்பொருட் டிரங்குதல்

அறிவின்மையாம்; தனக்குக் கிடைக்கக்கூடாத பொருள்களை எவ்வகை முயற்சி செய்யினும் ஒருவன் அடைதல் அரிதாகலின், அவற்றை விரும்புதலும் அறிவின்மையாம்; இழிதன்மை யுடையாரே தாழ்ந்த பொருள்களை விரும்புவர்; பெரியோரால் இகழப்படும் உலோபிகளே இரப்போர்க் கொன்றீயார். ஆதலின், இக் குணங்களை விட்டு நீங்கிக் கழிந்தவற்றிற் கிரங்காமை முதலிய நற்குணங்களைப் பொருந்தியவன் மிக்க புண்ணிய முடையவனாய் அப் புண்ணிய விசேஷத்தினால் மனித ஜன்மம் நீங்கிய பின்னர்த் தேவனாய்ப் பிறந்து, தெய்வலோகத்தை யடைந்து, தேவர்களால் துதிக்கப்படுவான். 'தேவர்களால் துதிக்கப்படுவான்' என்றதனால் அவன் தேவர்களில் சிறந்தவனாவான் என்பது பெறப்படும். கழிந்தவை தானிரங்கான் - நான்காம் வேற்றுமைத் தொகை. வநாகச்சான் - இரண்டாம் வேற்றுமைத் தொகை. இழிந்தவை இன்புறான் - ஏழாம் வேற்றுமைத் தொகை. மொழியால் என்பதில் ஒடுருபு ஆலுருபாக மயங்கி வந்தது. எல் - எனின் என்பதன் மரூஉ. விண்ணோர் - விண்ணுலகத்தினிடத்தி லுள்ளவர்; இது, தேவர்க்கு இடத்தான் வந்த பெயர்.

நூல்களால் துறை கூறப்படாதவன் இன்னவ னென்பது.

83. காடுபோற் கட்கினிய வில்லம் பிறர்பொருள்
ஓடுபோற் றாரம் பிறந்ததா—யூடுபோய்க்
கோத்தின்னா சொல்லானாய்க் கொல்லானேற் பல்லவ
ரோத்தினா லென்ன குறை.

(ப - ரை) (ஒருவன்), கட்கு - தன்னுடைய கண்ணுக்கு, பிறர்-பிறருடைய, இனிய - இனிமையாகிய, இல்லம் - வீடானது, காடுபோல் - காட்டைப்போலாக, பிறர் பொருள் - அன்னியருடைய பொருளானது, ஓடுபோல் - ஓடுபோலாக, பிறர் தாரம் - அன்னியருடைய மனைவி, பிறந்த தாய்போல் - தான் பிறத்தற் கிடமாயிருந்த

தாயைப்போலாக, (பாவித்து அப் பொருள்களிடத்தும் அப் பெண்ணிடத்தும் ஆசை வைக்காமல்), ஊடு போய் - சிநேகமா யிருக்கும் இருவர்க் கிடையிற் சென்று, இன்னா - மித்திரபேதமான கெட்ட மொழிகளை, கோத்து - பொய்யாகத் தொடுத்து, சொல்லானாய் - கூறாதவனாய், கொல்லானேல் - ஒரு ஜீவனையும் கொல்லாதிருப்பானாயின், பல்லவர் - பல பெரியாருடைய, (அதாவது: பெரியார் பலர் கூறிய), ஒத்தினால் - நீதி சாஸ்திரங்களால், என்ன குறை - (அவனுக்கு) என்ன குறையுண்டு. (அவன் நூல்களால் இழிந்தவர்க்குக் கூறப்படும் வசைமொழிக் கிலக்காகா னென்றபடி).

(க - ரை) ஒருவன் பிறருடைய இல்லத்தைக் காடுபோலவும், பொருளை ஓடுபோலவும், மனைவியைத் தாய்போலவும் கருதி, அவற்றினிடத்தும் அவளிடத்தும் இச்சை வையாமலும், நண்ப ரிருவர்க் கிடையிற் சென்று மித்திரபேதமான வார்த்தைகளைக் கூறாமலும், பிறஜீவன்களைக் கொல்லாதிருப்பானாயின் அவனுக்குப் பெரியோரால் கூறப்படும் நீதிநூல்களால் நிந்தனை விளைதலாகிய குறை யொன்று மில்லை யென்பதாம்.

(வி - ரை) பிறருடைய வீடானது கண்ணுக் கினியதாய்ச் சிறப்புற்று விளங்கினாலும் ஒருவன் எவ்வகையினாலும் அதைத் தனக் குரியதாக்கி அதிலிருந்து சுகமடைய நினைக்கலாகாது; இன்பம் பயவாத காட்டைப்போல நினைத்து அதனை வெறுக்கவேண்டும். அவ்வாறே பிறர் பொருளையும் ஓட்டைப்போலத் தனக்குப் பயனற்றதாகக் கருதவேண்டும். பிறருடைய மனைவியைச் சுகானுபவத்திற் குரியவளாக நினையாமல் தாயைப்போல் கருதவேண்டும். நட்பாளரிடைச் சென்று மித்திரபேதமான வார்த்தைகளைச் சொல்லி அவர் நட்பைப் பிரித்தலும், உயிர் கொல்லலும் மகா பாதகமாம். இங்குக் கூறியபடி பிறன் பொருள்களாகிய வீடு, பொருள், மனையாள் இன்பம் முதலியவற்றை விரும்பாமையும், மித்திரபேத வார்த்தைகள் பேசாமை

மும், உயிர் கொல்லாமையும் ஒருவனிடத் தமையுமாயின் அவன் புண்ணியசாலி யெனப் பலராலும் கொண்டாடப்படுவான்; அதனால், நூல்களாற் கூறப்படும் குறைகளுக் கிலக்காகமாட்டான் நூல்களால் குறையில்லை யென்றது, அவற்றால் அவன் கெட்டவனென நிந்திக்கப்படமாட்டான் என்பதை விளக்குகின்றது.

பிறர் என்பது இல்லம், தாரம் என்பவற்றிற்கும் கூட்டப்பட்டது. ஒரு போல் தாரத்திற்கும் கூட்டப்பட்டது. காடுபோல், ஒடு போல், தாய்போல் என்பவற்றின் பின் ஆக முதலிய பல சொற்கள் இசையெச்சமாகவே வருவித் துரைக்கப்பட்டன. என்ன குறை - ஒழியிசை யெச்சம்; எதிர்மறை யெச்ச மெனினுமாம்.

நன்னெறியாளர் இன்ன இன்னவை செய்யார் என்பது.

84. தோற்கன்று காட்டிக் கறவார் கறந்தபால்
பாற்பட்டா ருண்ணார் பழிபாவம்—பாற்பட்டா
ரேற்றவா தின்புற்று வாழ்வன வீடழியக்
கூற்றுவப்பச் செய்யார் கொணர்ந்து.

(ப - ரை) பாற்பட்டார்-நற்குணத்தைச் சார்ந்தவர்கள், தோற்கன்று - இறந்த கன்றின் தோலாற் செய்யப்பட்ட கன்றை, காட்டி - (கன்றிழந்த பசுவின் முன்னே) காட்டி, (அதற்குப் பால் சுரக்கச் செய்து அப் பாலை) கறவார்-(அப் பசுவினிடத்தே) கறக்கமாட்டார்கள்; கறந்த பால் - (அவ்வாறு பிறரால்) கறக்கப்பட்ட பாலையும், உண்ணார் - உட்கொள்ளமாட்டார்கள்; பழி பாவம் பாற்பட்டார் - பழியும் பாவமும் தங்களிடத்தே உண்டானவராய், ஏற்று - அவற்றைத் தாங்கி, அவாது-விரும்பாமல், இன்புற்று - (உலகத்தில் கூடி) இன்பம் பொருந்தி, வாழ்வன - ஜீவிப்பனவாகிய உயிர்களை, வீடு அழிய - அவற்றின் வலிமை கெட, கொணர்ந்து - கொண்டுவந்து,

கூற்று உவப்ப - யமன் விரும்ப, செய்யார் - கொலை செய்யமாட்டார்கள்.

(கு-ரை) நற்குணத்தைச் சார்ந்தவர், பசுவினிடம் தோற்கன்று காட்டிப் பால் கறக்கமாட்டார்கள்; அவ்வாறு பிறரால் கறக்கப்பட்ட பாலையும் அருந்தமாட்டார்கள்; பழியை விரும்பமாட்டார்கள்; பாவத்தை விரும்பமாட்டார்கள்; உயிர்களைக் கொலை புரியமாட்டார்கள் என்பதாம்.

(வி - ரை) தோற்கன்று காட்டிப் பால் கறத்தலாவது, இறந்த கன்றின் தோலில் வைக்கோலைப் பொதிந்து, உயிர்க்கன்றுபோல் அதன் தாய்ப்பசுவிற்குக் காட்டி அதனை யேமாற்றி அதனிடத்தே பால் சுரக்கச் செய்து அப் பாலைக் கறத்தலாம். அந்தத் தோற்கன்றைப் பார்த்தவுடன், கன்றிழந்த பசுவானது தன்னுடைய உயிர்க்கன்றென்றே நினைத்து அதன்மீது அன்பு மிகுந்து பாலைச் சுரப்பிக்கும். இவ்வாறு மோசமாக அப் பசுவை ஏமாற்றி அதன் சத்தை வாங்கிக்கொள்ளுதல் மகா பாதகமாம். இந்தப் பாதகத் தொழிலைப் பெரும்பான்மையும் பால் விற்பனையில் பலவிதமான சூதுகளைச் செய்து பணஞ் சேர்க்கும் சில பாற்காரர்களே செய்வர்; அதிலும் சென்னையில் இத் தொழில் மிகைப்பட்டு நடப்பதையும், இத்தகைய பாலை மனிதர் வாங்குவதையும் பிரத்தியக்ஷமாகக் காணலாம். இத் தொழில் மகா பாதகமென இன்னும் பல சங்க நூல்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. அங்ஙன மிருந்தும் இக்காலத்தவர் இத்தகைய நீதிநூல்களைப் படித்துணராக் காரணத்தாலேயே இப் பாதகத் தொழிலைச் செய்தலும் ஏற்றலும் புரிகின்றனர். மேலும் கன்றிழந்த பசுவின்பால் உடம்பிற்கும் கேடு செய்யும். பாலை அருந்துதலே கறத்தலுக்கும் காரணமாதலின், 'கறந்தபால் உண்ணார்' என்று அப் பாலை அருந்துதலையும் விலக்கினார் ஆசிரியர். பால் - வெண்மை; இஃது உவமையாகு பெயராய்ப் பரிசுத்த குணத்தை யுணர்த்தி நின்றது.

பழி-பிறரால் கூறப்படும் நிந்தை; பாவம்-தீங்கு செய்வதா லுண்டாம் குற்றம். இரண்டாவது பால் - எழனுருபு. இரண்டாவது பாற்பட்டார் - முற்றெச்சம். அவாவாது என்பது அவாது எனத் தொகுத்தலாயிற்று. பழிபாவம் - உம்மைத்தொகை. கூற்றுவன் என்பது அன் விகுதிகுறைந்து கூற்று என நின்றது. கூற்றுவன்-கூறு செய்பவன்; அதாவது, உடலையும் உயிரையும் வேறாக்குபவன். கூற்றுவப்ப என்ற குறிப்பால், செய்யார் என்பதற்கு 'கொலைசெய்யார்' என்று பொருளுரைக்கப்பட்டது.

மூத்தோரிருக்கு மிடத்துச் செய்யத் தகாதன.

85. நகையொடு மந்திரம் நட்டார்க்கு வாரம்
பகையொடு பாட்டுரையென் றைந்துந்-தொகையொடு
மூத்தோ ரிருந்துழி வேண்டார் முதுநூலுள்
யாத்தா ரறிந்தவ ராய்ந்து.

(ப - ரை) நகையொடு-சிரிப்புடனே, மந்திரம் - இரகசியப் பேச்சும்; நட்டார்க்கு - சிநேகித்தவர்களுக்கு, வாரம் - பக்ஷபாதம் பேசுதலும்; பகையொடு - (ஆகாதவரிடத்தே) விரோதமான பேச்சுக்களைப் பேசுதலும்; பாட்டு உரை-செய்யுளுக்குப் பொருள் சொல்லுதலும், என்றைந்தும் - என்ற இவ்வைந்து செயல்களும், தொகையொடு - கூட்டத்தோடு, மூத்தோர் - (அறிவால் முதிர்ந்த) பெரியோர், இருந்துழி - இருந்தவிடத்து, வேண்டார்-(அறிஞர்) செய்ய விரும்பார்கள்; (இந் நீதியை), ஆய்ந்து - (உலக இயல்களை) ஆராய்ந்து, அறிந்தவர் - உணர்ந்தவர்கள், முதுநூலுள் - பழமையான நூல்களில், யாத்தார் - தொடுத்து உறுதியாக உரைத்துவைத்தார்.

(க-ரை) பெரியோர் கூடியிருக்கு மிடத்தில், சிரித்தல், இரகசியப் பேச்சுப் பேசுதல், நட்பினர்க்குப் பாரபக்ஷமாக நலம் பேசுதல், ஆகாதவர்க்கு விரோதம் பேசுதல், பாட்டுக்கு உரை சொல்லுதல் ஆகிய ஐந்து செயல்களையும் அறிவுடையோர் செய்யமாட்டார்கள்.

இந் நீதியை, உலகியலறிந்த பெரியோர் பழைய நூல்களில் உறுதியாகச் சொல்லிவைத்தார்.

(வி - ரை) நகை புரிதலாவது பெரியோ ரிருக்கின்றார்களே என்றஞ்சாது வேடிக்கையான வார்த்தைகளை அடுத்திருப்பவரோடு பேசிச் சிரித்துக்கொண்டிருத்தல். மந்திரம் - இரகசியச்சொல், அல்லது ஆலோசனை வார்த்தை; இந்த இரகசியச்சொல் பேசுதலாவது, பெரியோர் கூடி ஒரு காரியத்தை நடத்திக்கொண்டிருக்க, அதைக் கவனியாமல் அடுத்திருப்பவரோடு மிருதுவாகப் பேசிகொண்டிருத்தலாம். வாரம் -அன்பு, பாரபக்ஷம்; நட்டார்க்கு வாரஞ் செய்தலாவது, பெரியோர் வழக்குக்களை விசாரித்துக்கொண் டிருக்கும்போது, சிநேகிதர்களுக் குதவியாக நடுநிலைமை தவறிய வார்த்தைகளைப் பேசுதல். பாட்டுரை சொல்லுதலாவது, பெரியோர்க்கு முன்னிலையில் நாம் பாட்டுரை சொன்னால் அதில் ஏதேனும் தவறு நேரக்கூடும்; அதனால் அவர்கள் வெறுப்படைவார்கள் என்னும் அச்சமின்றி அப் பெரியோர் ஒரு பக்கம் சபை நடத்திக்கொண்டிருக்கத் தாங்கள் மற்றொரு பக்கத்தில் தங்கள் அரைகுறைக் கல்வியைக்கொண்டு அடுத்தவரிடத்தில் தப்புந் தவறுமாகப் பாட்டுக்களைச் சொல்லி அகங்கரிப்புடன் உரை கூறுதலாம். பெரியோர் சபைகூடி யிருக்குமிடத்தில் இந்த ஐந்து செய்கைகளும் கூடாவாம். இவற்றைச் செய்தல் பெரியோரை அவமதித்ததாகும். இச் செய்கை யுடையாரும் அறிஞரால் இகழப்படுவார். இது பெரியோர் கூறிய சிறந்த நீதியாம்; அது பற்றியே "முதுநூலுள் யாத்தா ரறிந்தவ ராய்ந்து" என்றார் ஆசிரியர். இக்காலத்தில் பெரியோர் சபைகூடு மிடங்களில், சிலர் இந்த ஐந்து செய்கைகளையும் அச்சமின்றிச் செய்யக் காணலாம். அவர்கள் இந் நீதியைப் படித்துணர்வார்களாயின் அவற்றைச் செய்யமாட்டார்கள்.

நகை - தொழிற்பெயர்; நகு-பகுதி, ஐ-தொழிற்பெயர் விகுதி. ஓடு - எண்ணொடு. பகை - தொழிற்பெயர்; பகு - பகுதி, ஐ-விகுதி;

பகை என்பதற்குப் பிளவுபடல் அல்லது வேறுபடல் என்பது பொருள்; பகுதல் - பிளத்தல். உரை - சொல்; அது பொருளின்மேனின்றது. என்ற ஐந்தும் என்பது என்றைந்தும் எனத் தொகுத்தலாயிற்று. தொகை - தொழிற்பெயர்; தொகு - பகுதி, ஐ - பகுதி. இருந்த உழி என்பது இருந்துழியெனத் தொகுத்தலாயிற்று. உழி- இடம்; ஏழனுருபு. யாத்தல் - தொடுத்தல்; இது சொல்லுதல்மேனின்றது.

தலையான சிட்டராவார் இன்னவரென்பது.

86. சத்தமெய்ஞ் ஞானந் தருக்கஞ் சமயமே
வித்தகர் கண்டவீ டுள்ளிட்டாங்—கத்தகத்
தந்தவிவ் வைந்து மறிவான் றலையாய
சிந்திப்பிற் சிட்டன் சிறந்து.

(ப - ரை) சத்தம் - சத்தநூலும் (அதாவது, நாதவடிவாகிய எழுத்து சொல் முதலியவற்றைப்பற்றிக் கூறும் இலக்கணநூலும்), மெய் - உண்மையாகிய, ஞானம் - அறிவுநூலும் (அதாவது, அறிவைப் போதிக்கும் நீதி நூலும்), தருக்கம் - (வஸ்து நிச்சயஞ் செய்யும்) தருக்கநூலும், சமயம்-மதநூலும், வித்தகர் - அறிவுடையோர், கண்ட - அறிந்த, வீடு - மோக்ஷத்தைப் பற்றியநூலும், உள்ளிட்டு- உள்ளாக, இவ்வைந்தும் - இந்த ஐந்தையும், அத்து - செவ்வையாகிய, (அல்லது ஒழுங்காகிய எல்லையில் அமைந்த), அகத்து - மனத்தில், அந்தம் - அழகாக, அறிவான் - கற்றுணர்பவன், சிந்திப்பின்- ஆலோசிக்குமிடத்து, சிறந்து - சிறப்படைந்து, தலை ஆய-தலைமையாகிய, சிட்டன் - நல்லோனவன்.

(க - ரை) இலக்கணநூலும், நீதியறிவுநூலும், தருக்கநூலும், சமயநூலும், வீட்டுநூலும் உள்ளிட இவ்வைந்தையும் கற்றுணர்பவன் நல்லோரிற் சிறந்தவனவன் என்பதாம்.

(வி - ரை) சத்தம் - ஒலி; அஃது ஒலிவடிவமாகிய எழுத்தை யும் சொல்லையும்பற்றிய இலக்கண நூலை உணர்த்தி நின்றது. மெய்ஞ்ஞானம்-உண்மையறிவு; அஃது உண்மையறிவைப் போதிக் கும் நீதி நூலை யுணர்த்திநின்றது. தருக்கம் - ஒரு வஸ்துவின் நிச்ச யத்தைப்பற்றி வாக்குவாதஞ் செய்தல்; அஃது அதனையுடைய தருக்க நூலை உணர்த்திநின்றது. சமயம் - மதம்; அது மதங்களின் வகை யைப்பற்றிக் கூறும் நூலை விளக்கிற்று. வீடு - மோக்ஷம்; அஃத தன் விவரத்தைக் கூறும் நூலை உணர்த்திற்று. இந்த ஐந்து நூல்களை யும் கற்றவன் மிக்க ஒழுங்குடையவனும், உலகத்திற்குப் பயன்படு பவனுயு மிருப்பான்; ஆதலின், இவனை, 'தலையாய சிட்டன்' என்றார் ஆசிரியர். ஆங்கு - அசை. அத்து - செவ்வை; தெலுங்கில் 'எல்லை' எனப் பொருள்படும்; எல்லைப்பொருள் குறிக்குமிடத்து இது திசைச் சொல்லாகும். அந்தம் என்பது மவ்வீறு கெட்டுநின்றது.

இடையாகிய சிட்டன் இன்னவ னென்பது.

87. கண்ணுங்காற் கண்ணுங் கணிதமே யாழினோ
டெண்ணுங்காற் சாந்தே யிலைநறுக்கிட்—டெண்ணுத
லிட்டவிவ் வைந்து மறிவா னிடையாய
சிட்டனென் றெண்ணப் படும்.

(ப - ரை) கண்ணுங்கால் - சிந்திக்கு மிடத்து, கண்ணும் - கணக்கிடுகின்ற, கணிதம் - கணக்குநூல் (அல்லது ஜோதிடசாஸ் திரம்), யாழினோடு - வீணைவித்தையுடன், எண்ணுங்கால் - ஆலோ சிக்குமிடத்து, சாந்து - சந்தன மரைத்தல், இலை நறுக்கிட்டு-இலை யைக்கிள்ளி, எண்ணுதல் - கணக்கிடல், (ஆகிய), இட்ட-நியமிக்கப் பட்ட, இவ்வைந்தும் - இந்த ஐந்து செய்கைகளையும், அறிவான்- உணர்பவன், இடை ஆய - நடுவாகிய, சிட்டன் என்று - நல்லோன் என்று, எண்ணப்படும் - (அறிவுடையோரால்) கருதப்படுவான்.

(க - ரை) கணிதநூல் பயிற்சி, யாழ்வித்தைப் பயிற்சி, சந்தன மரைத்தல், இலை கிள்ளல், அதனை எண்ணுதல் என்னும் ஐந்து தொழில்களையு முடையவன் இடையாய சிட்டன் என்று அறிஞரால் கருதப்படுவான் என்பதாம்.

(வி - ரை) ஒருவன் கணக்கிலேனும் ஜோதிடத்திலேனும் வல்லவனாய் மனிதர்க்குக் கணக்குச் சொல்லுதலும் பலாபலன் சொல்லுதலும், பிறர் கேட்டுச் சந்தோஷிக்கும்படி யாழ் வாசித்தலும், மனிதர்க்கும் தேவர்க்கும் இனிமை யாகுமாறு சந்தன மரைத்தலும், மானிடர்க்கும் தெய்வங்கட்கும் பயன்படுமாறு இலை கிள்ளி எண்ணித் தைத்துதவுதலும், தலையாய சிட்டனுடைய தொழில்களைப் போல விசேஷ சிறப்புடையவை யல்லவெனினும் நடுத்தரமான நன்மைகளையே பயப்பனவாதலானும், பிற ஜீவன்களுக்குத் தீங்கு விளைவிப்பனவல்ல வாதலானும் இவற்றை யுடையான் இடையாய சிட்டன் எனப்பட்டான். கண்ணுங்கால், எண்ணுங்கால் என்பன வினையெச்சங்கள்; இவை 'எண்ணப்படும்' என்னும் வினை கொண்டு முடிந்தன. கணிதமே என்பதிலுள்ள ஏ-எண்ணி னிற்றற்பொருளில் வந்தது. ஒடு - எண்ணுப்பொருளது. சாந்தே என்பதன் ஏகாரமும் எண்ணுப்பொருளதே. கணிதம், யாழ், சாந்து என்பன அவற்றைச் செய்தலாகிய தொழில்கண்மே னின்றன. நறுக்கு-முதனிலைத் தொழிற்பெயர். இட்ட - பெயரெச்சம்; இஃது ஐந்தென்னும் எண்ணுப் பெயர் கொண்டு முடிந்தது. அறிவான் - வினையாலணையும் பெயர்.

நாயை நிகர்ப்பார், இன்னவ ரென்பது

88. நாணில னாய்நன்கு நள்ளாதா னாய்ப்பெரியார்ப்
பேணில னாய்ப்பிறர் சேவகனா—யேணில்
பொருந்திய பூண்முலையார் சேரிகைத் தில்லான்
பருத்தி பகர்வுழி நாய்.

(ப - ரை) நாண் இலன் - (இழி தொழில்களைச் செய்வதில்) நாண மில்லாதவன், நாய்-நாய்க்கு நிகராவன்; நன்கு - நன்மையாக, கள்ளாதான் - (பிறரோடு) சிநேகங் கொள்ளாதவன், நாய் - நாயோ டொப்பாவன்; பெரியோர் - (தாய் தந்தையர் முதலிய) பெரியாரை, பேணிலன் - பாதுகாவாதவன், நாய் - நாயை நிகர்ப்பான்; பிறர் சேவகன் - பிறருடைய பணியாளனு யிருந்து வாழ்பவன், நாய்-நாயைப்போல்வன்; எண் இல் - உயர்வில்லாத, பூண் பொருந்திய - ஆபரணங்களை யணிந்த, முலையார் - தனங்களையுடைய பரத்தைய ரது, சேரி - தெருவில், (அவர்களது ஆசையால் திரியும்), கைத்து இல்லான் - கைப்பொருள் இல்லாதவன், பருத்தி பகர்வுழி - பருத்தி விலை கூறுமிடத்து, (போய் நிற்கின்ற), நாய்-நாய்க்கு நிகராவான்.

(க - ரை) நாணில்லாதவனும், நல்லாரோடு சினேகங் கொள் ளாதவனும், பெரியாரைப் பேணுதவனும், பிறரிடம் சேவகத் தொ ழில் புரிவோனும், கைப்பொரு ளின்றிப் பரத்தையரை விரும்பி அவர் தெருவில் திரிபவனும் நாய்க்கு நிகராவர் என்பதாம்.

(வி - ரை) மனிதராயினூர்க்கு இழி தொழில்களைப் புரிவதில் நாண மிருக்கவேண்டும்; அங்ஙனம் நாணமின்றித் தாழ்ந்த காரியங்க ளைச் செய்வோர் மனித ராகார். நாண முடையாரிடத்தே இழி தொழில்கள் சேரமாட்டா. இன்னும் மக்க ளியாக்கையைப் பெற் ரோர் நல்லோருடனே நட்புடையவராயிருத்தல் வேண்டும்; பெரி யோரை ஆதரிக்கவேண்டும்; சேவகத்தொழிலில் அமரலாகாது; கைப் பொருளின்றிப் பரத்தையரை விரும்பி அவர் தெருவில் திரிந்தலைய லாகாது. நாய் பன்முறை தன்னைத் துரத்து மிடத்துக்கும் வெட்க மின்றிப் போகும்; வெட்கமின்றி நிஷேத வஸ்துக்களையும் உண் ணும்; இனத்தோடு எப்பொழுதும் சிநேகங் கொள்ளாமல் பகையே கொள்ளும்; உணவருந்தும்போது தன் தாய் தந்தையையும் கிட்ட நெருங்க விடாமல் உறுமித் துரத்தும்; எவரிடத்தும் அடிமையாய்,

தாழ்ந்த வேலைகளையே செய்துகொண் டிருக்கும்; காரியமின்றித் தெருக்களில் ஏதாவது கிடைக்குமா வென்று ஓடித் திரியும்: ஆதலின், நாணில்லான் முதலிய ஐவரும் அதற்குவமை கூறப்பட்டார்கள். மேற் கூறிய ஐங்குணங்களும் அவர்களிடத் திருத்தலின். பொதுமகளிர் ஆடவரை மயக்குதற்பொருட்டு மேற்பூச்சு நகைகளையும் உடம்பி லணிந்து வெளி வேடமாகிய அழகைச் செய்துகொள்வார்க ளாதலின், அவர்களை, 'ஏணில் பூண்முலையார்' என்றார் ஆசிரியர். ஆபரண மணிதல் குலமகளிர்க்கு முளதெனினும், 'ஏணில் பூண்' என்ற குறிப்பால் இங்குக் கூறியவர் பொதுமகளி ரென்பது பெறப்பட்டது. கைத்து-கையி லுள்ளது; அது பொருளை யுணர்த்தி நின்றது. உயர்ந்தோர் கைப்பொரு ளிருப்பினும் இல்லாவிடினும் பரத்தையர் சேரிக்குச் செல்லமாட்டார்கள்; தாழ்ந்தவர் கைப்பொருளிருக்குங் காலத்தும் அங்குச் சென்று அதனைத் தொலைத்துவிட்டு அஃதில்லாத பொழுதும் அப் பரத்தையர் நேயங் கொண்டு அத் தெருக்களில் திரிந்தலைவார். ஆதலின், இங்குக் 'கைத்தில்லான்' என்றது தூர்த்தனையே யென்க. பருத்தி விலைகூறு மிடத்துத் திரியும் நாய்க்கு ஒரு பயனு மின்று; அதுபோல், உடல் விற்கும் பொதுமகளிர் இருக்கு மிடத்தில் கைப்பொரு ளின்றித் திரிபவனுக்கும் ஒரு பயனு மில்லை; ஆதலின், இவனைப் 'பருத்தி பகர்வுழி நாய்' என்றார் ஆசிரியர். சேரி - ஒரு வகுப்பார் சேர்ந்திருக்கு மிடம். பகர்வுழி என்பதில், வ் - மெய்யீற் றுடம்படுமெய்; இதனை இங்ஙனங் கொள்ளுதல் ஆசிரியர் நச்சினார்க்கினியர் கொள்கை. முன்னிரண்டு செய்யுட்களிலும் தலையாய சிட்டரும், இடையாய சிட்டரும் கூறப்பட்டார்கள்; இதில் கடையாய மனிதர் கூறப்பட்டார்கள்.

### எளியவைகளும், அரியதும்.

89. *நா*ணெளிது பெண்மை நகையெளிது நட்டானேல்
ஏணெளிது சேவக னேற்பெரியார்—பேணெளிது

*கொம்பு மறைக்கு மிடையா யளியன்மீ
தம்பு பறத்த லரிது.*

(ப - ரை) கொம்பு - வஞ்சிக் கொம்பை, மறைக்கும் - (தன் வடிவத்தால்) மறையச் செய்கின்ற, இடையாய் - இடையையுடைய பெண்ணே!, பெண்மை - பெண் தன்மைக்கு, நாண்-நாணுடைமை, எளிது-எளிதாகும்; (ஒருவன்); நட்டானேல் - (மற்றொருவனோடு) சிநேகங் கொள்வானாயின், (அவனுக்கு), நகை - (மகிழ்ச்சியால்) சிரித்தல், எளிது - எளிதாகும்; (ஒருவன்), சேகவனேல் - சேவகனா யிருப்பானாயின், (அவனுக்கு), ஏண் - வல்லமை, எளிது - எளிதாகும்; பெரியார் - (நற்குணங்களால்) உயர்ந்தவர்களுக்கு, பேண் - (பிறரைப்) பாதுகாத்தல், எளிது-எளிதாகும்; அளியன்மீது - (யாவரிடத்தும்) அன்புடையான்மேல், அம்பு பறத்தல்-(பிறரால் எய்யப் படும்) அம்பு விரைந்து பறந்து செல்லுதல், அரிது - அரிதாகும்.

(க - ரை) பெண் தன்மை யுள்ள விடத்தில் நாணுண்டாதலும், நட்புள்ளா னிடத்தில் மகிழ்ச்சி நகை யுண்டாதலும், சேவக னிடத்தில் வலிமை யுண்டாதலும், பெரியா ரிடத்தில் பிறரைப் பேணுத லுண்டாதலும் எளிதில் முடியும்; சகலரிடத்தும் அன் புடையவன்மீது பிறர் கோபித்தேவும் அம்பு செல்லுதல் அரிதாகும் என்பதாம்.

(வி - ரை) பெண்மைக் குணமாவது ஒரு பெண்ணிடத்தே நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நால்வகைக் குணங்களும் பொருந்தி யிருத்தலாம்; இத்தகைய குணங்களை யுடையவளிடத்தே முதன்மைக் குணமாகிய நாணம் "இயற்கையிலேயே எளிதாக அமைந்திருக்கும். ஒருவன் மற்றொருவனோடு சிநேகங் கொண்டால் அச் சிநேகத்தால் அவனிடத்தே எப்பொழுதும் மகிழ்ச்சி நகைப்பு எளிதில் உண்டாகிக்கொண்டே யிருக்கும். வீர முடையவனே

சேவகனுவா னுதலின், அவனிடத்தில் வலிமை எளிதில் அமையும்; உத்தம குணங்களையுடைய பெரியார் பரோபகார சிந்தை யுடையவர்களா யிருப்பார்க ளாதலின், அவர்களிடத்தில் பிறரைப் பேணுங் குணம் எளிதாக அமையும். எல்லோரிடத்தும் அன்புள்ளவன்மீது சகலரும் சிநேக முடையவர்க ளாகவே யிருப்பார்க ளாதலின் அவன் மேல் எவரும் பகைகொண்டு அம்பைச் செலுத்தமாட்டார்கள். ஆகவே, பெண் நாணமுடையவளா யிருக்கவேண்டு மென்பதும், நட்புள்ளவன் நகை யுடையவனு யிருக்கவேண்டு மென்பதும், சேவகன் வலியுடையவனு யிருக்கவேண்டு மென்பதும், பெரியார் பிறரைப் பேணவேண்டு மென்பதும், பகைத் துன்ப மில்லாதிருக்க வேண்டுவோன் சகலரிடத்தும் அன்புடையனுதல் வேண்டு மென்பதும் பெறப்படும். வஞ்சி - ஒருவகைக் கொடி; வஞ்சிக் கொம்பு - அதன் கொம்பு; இது மென்மை பற்றி இடைக்குவமையாகக் கூறப்படும்; ஆதலின், இங்குக் கொம்பு என்றதற்கு, வஞ்சிக் கொம்பு என உரை யெழுதப்பட்டது. இடையின் வடிவைக் கண்டு வஞ்சிக்கொம்பும் நாணி மறையும் என்பது தோன்ற, 'கொம்பு மறைக்கும் இடை' என்றுர் ஆசிரியர். 'கொம்பு மறைக்கும் இடையாய்' என்றது மகடூஉ முன்னிலை விளி. 'கொம்பு' என்பதற்குப் 'பூங்கொம்பு' எனப் பொருள் கூறினும் அமையும். நாண், நகை, பேண் என்பன முதனிலைத் தொழிற்பெயர்கள். ஏண் - வலி. பறத்தல் விரைந்து செல்லுதன்மே னின்றது.

இன்னவற்றல் இன்னவையாத மேனல்.

90. இன்சொலா னுகுங் கிளைமை யியல்பில்லா
வன்சொல்லி னுகும் பகைமைமன்—மென்சொல்லின்
ஒய்வில்லா வாரருளா மவ்வரு ளன்மனத்தான்
வீவில்லா வீடாய் விடும்.

(ப - ரை) இன்சொல்லான் - (ஒருவன் உரைக்கும்) இனிய வார்த்தையினால், கிளைமை - உறவு, ஆகும் - (அவனுக்கு) உண்டாகும்; இயல்பு இல்லா - நற்குண மில்லாத, வன்சொல்லின் - வலிய சொல்லினால், பகைமை - விரோதமானது, ஆகும் - உண்டாகும்; மென் சொல்லின் - மெல்லிய சொல்லினால், மன் - பெருமையும், ஓய்வு இல்லா - ஓய்தல் இல்லாத (அதாவது, இடைவிடாத), ஆர் - நிறைந்த, அருள் - கிருபையும், ஆம் - உண்டாகும்; அ அருள் - அந்தக் கிருபை பொருந்திய, நல் மனத்தான் - நல்ல மனத்தினாலே, வீவு இல்லா - கெடுத லில்லாத, வீடு - முத்தியானது, ஆய்விடும் - உண்டாய்விடும்.

(க - ரை) இன்சொல்லால் உறவாகும்; வன்சொல்லால் பகையாகும்; மென்சொல்லால் பெருமையும் அருளுமாகும்; அருள் பொருந்திய மனத்தால் மோக்ஷம் சித்திக்கும் என்பதாம்.

(வி - ரை) ஒருவன் இனிய வார்த்தைகளையே எவரிடத்தும் பேசுவானாயின் அவனுக்குப் பலரும் உறவினராவர். கடின வார்த்தைகளையே பேசிக்கொண் டிருப்பவனிடத்தில் அவ் வார்த்தைகளால் பலரும் விரோதங் கொள்வர். ஒருவன் மெல்லிய வார்த்தைகளையே பேசிக்கொண் டிருப்பானாயின் அவ் வார்த்தைகளால் அவனுக்கு எவரிடத்தும் இரக்கச் சித்த முண்டாகும்; அதனால் அவனைப் பலரும் உயர்ந்தவனென்று கொண்டாடுவார்கள்; அங்ஙனம் பலர் துதிப்பதால் அவனுக்குப் பெருமை யுண்டாகும். கிருபை பொருந்திய மனத்தினையுடையவன் எல்லா ஜீவன்களுக்கும் இதத்தைச் செய்து தவநெறியிற் சேர்வான்; அதனால் அவனுக்கு முத்தி சித்திக்கும். இயல்பு - குணம்; அஃதிங்கு நற்குணத்தின்மே னின்றது. ஆர் என்பதற்கு, அரிய எனப் பொருள் கூறினும் அமையும். வீவு - அழிதல், வீடு - விடுதல்; இவை தொழிற்பெயர்கள்; இவற்றுள் வீடு -

முதனிலை திரிந்த தொழிற்பெயர். விடும் - துணிவுப் பொருளை யுணர்த்தும் விகுதி. இன்சொல்லாற் கிளைமையாதல், வன்சொல்லால் பகைமையாதல், மென்சொல்லால் பெருமையாதல், அதனுல் அருளாதல், அருள் மனத்தால் வீடாதல் ஆக ஐந்து விஷயங்கள் வருதல் காண்க.

## தக்க செயல்களும், தகாச் செயலும்.

91. தக்க திளையான் றவஞ்செல்வ னூண்மறுத்தல்
தக்கது கற்புடை யாள்வனப்புத் — தக்க
தழற்றண்ணென் றோளா ளறிவில ளாயின்
நிழற்கண் முயிறாய் விடும்.

(ப - ரை) இளையான் - இளமைப் பருவத்தை யுடையவன், (உலக ஆசைகளைத் துறந்து செய்யும்), தவம்-தவமானது, தக்கது-தகுதியுடையதாம்; செல்வன் - ஐசுவரியத்தை யுடையவன், ஊண் மறுத்தல் - நல்ல உணவுகளை யுண்பதை விடுத்து விரதங் காத்தல், தக்கது-தகுதியுடையதாம்; வனப்பு உடையாள்-அழகுள்ளவளுடைய, கற்பு - கற்பானது, தக்கது - தகுதியுடையதாம்; தண்என் - தண்ணென்றிருக்கும் (அதாவது, கணவனுக்குக் குளிர்ந்திருக்கும்), தோளாள் - தோள்களையுடைய இல்லக் கிழத்தி, அறிவிலள் ஆயின்- அறிவில்லாதவளா யிருப்பாளாயின், அழல்-நெருப்பைப் போல வேதனை செய்பவளாவள், (மேலும் அவளுடைய நாயகன் நடத்தும் இல்லறத்தில் அவன்), நிழல் கண் - நிழலில் எவரையும் நெருங்க விடாதிருக்கும், முயிறாய்விடும் - முயிற்றைப்போல் அவளிருக்கு மிடத்திற்கு வரும் விருந்தினர் முதலியோரைத் துரத்தத் தக்கவளாய் விடுவாள்.

(க - ரை) இளையான் தவமும், செல்வன் ஊணகற்றலும், வனப்புடையாள் கற்பும் தக்கனவாம்; ஒருவனுக்குச் சேர்க்கையால்

குளிர்ச்சியைக் கொடுக்கும் தோள்களையுடைய இல்லக் கிழத்தி அறிவில்லாதவளா யிருந்தால் அழலைப்போல வேதனை செய்பவளாவ தோடு, அவ் வில்லத்தில் நிழற்கண் முயிற்றைப்போல விருந்தினர் முதலியவர்களைத் துரத்திப் பாவத்தைத் தேடக்கூடியவளு மாவள் என்பதாம்.

(வி - ரை) இளமைப் பருவமானது மனிதனை உலக இன்பங்களில் செலுத்தக்கூடியது; ஆதலின், அப் பருவத்தில் அவற்றை அகற்றித் தவஞ் செய்தல் சிறந்ததாம். செல்வவந்தனுக்கு எத்தகைய உயர்ந்த உணவுகளும் எளிதிற் கிடைக்கும்; ஆதலின், அவன் அவற்றை நீக்கி விரதங் கொள்ளுதலே உயர்ந்ததாம். அழகுடையவளுக்கு எவரும் எதைக் கொடுத்தேனும் அவளுடைய கற்பைக் கெடுக்கும் முயற்சிகளைச் செய்வர்; ஆதலின், அவள் அத்தகைய இடையூறுகளுக்கு இடங் கொடாமல் தன் கற்பைக் காத்துக்கொள்ளுதலே சிறந்ததாம். இல்லறத்திலிருக்கும் பெண், கணவன் மனம்போல் நடக்கும் அறிவுடையவளாயிருந்தால் அவள்மீ தவனுக்கு அன்பு மிகும்; அந்த அன்பினால் அவன் அவளைத் தழுவுங் காலத்தில் அவனுக்கு அவளுடைய தோள் குளிர்ந்து இனிமையைத் தருவதாகும்; அவள், கணவன் மனம்போல் நடக்கும் அறிவில்லாதவளாயிருந்தால் அவளுடைய சேர்க்கையானது அவனுக்கு நெருப்பைப்போல் வேதனை செய்வதாகும். மேலும், அவள் தன் னில்லத்தை நோக்கி வரும் விருந்தினர் முதலியவர்களைச் சீறித் துரத்துவாள்; அதனால் மர நிழலி லிருந்துகொண்டு அங்கே இளைப்பாற வருவோரைக் கடித்து வேதனை செய்து துரத்தும் முயிற்றையும் நிகர்ப்பாள். முயிறு - இலுப்பை, மா முதலிய மரங்களிலிருக்கும் ஒருவகைச் செவ்வெறும்பு; இது மனிதரைக் கடித்தால் அவருக்குத் தேள் கொட்டினது போல் வேதனை யுண்டாகும். 'கற்புடையாள் வனப்பு' என்பது, வனப்புடையாள் கற்பு' என மாற்றிக் கொள்ளப்பட்டது; இதி

மொழிமாற்றுப் பொருள்கோள். மூன் மூன்றனோடு, 'தண்ணென் றோளாள் அறிவிலளாயின் அழல்' என்பதொன்றும், 'நிழற்கண் முயிருய்விடும்' என்பதொன்றும் கூட்டி ஐந்தாக்கிக் கொள்க.

பொய்யாற் சுவர்க்கம் பெறுதல் முதலியன மெய்யன்று, தவஞ்செய்தல் தீதன்று என்பது.

92. பொய்யாற் சுவர்க்கம்வா யானிர யம்பொருள்
மையார் மடந்தையால் வாழ்வினிது—மெய்யன்றாண்
மைத்தக நீண்ட மலர்க்கண்ணாய் தீதன்றால்
எத்தவ மானும் படல்.

(ப - ரை) மை தக - மை அணிதற்குத் தகுதியாக, நீண்ட - நீட்சி பெற்ற, மலர் - நீலோற்பல மலர் போன்ற, கண்ணாய் - கண்களையுடைய பெண்ணே!, பொய்யால்-பொய்ம் மார்க்கத்தில் ஒழுகுவதால், சுவர்க்கம் - சுவர்க்கம் கிடைத்தலும்; வாயால் - மெய்யான மார்க்கத்தில் நடப்பதால், நிரயம் - நரகம் கிடைத்தலும்; பொருளால் - நிலையற்ற செல்வப்பொருளால், இனிது வாழ்வு - இனிதாக வாழ்தலும்; மை ஆர்-குற்றம் பொருந்திய, மடந்தையால்-பெண்ணின் சேர்க்கையால், இனிது வாழ்வு - இனிதாக வாழ்தலும், மெய் அன்று - உண்மையல்ல; எத்தவம் ஆனும் - எந்தத் தவமாயினும், படல் - ஒருவரிடத்தே உண்டாதல், தீது அன்று - தீமையானதன்று.

(க - ரை) பொய்யாற் சுவர்க்கம் பெறுதலும், மெய்யால் நரக மடைதலும், நிலையற்ற செல்வப் பொருளால் இனிது வாழ்தலும், குற்றம் பொருந்திய பெண் சேர்க்கையால் இனிது வாழ்தலும், மெய்யன்று; ஒருவரிடத்தே எந்தத் தவமேனும் உண்டாதல் தீதன்று என்பதாம்.

(வி - ரை) மலர்க் கண்ணாய் - மகடூஉ முன்னிலை; விளி. பொய்யால் நரகங்கிடைத்தலும், மெய்யால் சுவர்க்கங் கிடைத்தலும்,

நிலையற்ற செல்வப்பொருளை நம்புவதால் விரைவில் வாழ்வு அழிந்துபோதலும், குற்றமுடைய மாதின் சேர்க்கையால் வாழ்வு கெடலும், தவ மில்லாதவிடத்துத் தீது சேர்தலும் உண்மை யெனினும் நாஸ்திகவாதிகள், "உலகத்தில் பிரத்தியக்ஷமாகக் காணும் இன்பமே சுவர்க்கத் தின்பம்; துன்பமே நரக துன்பம்; பொருளோடும் பொது மகளிரோடும் கூடி வாழ்தலே உயர்ந்த வாழ்வு; இஷ்டமானவைகளை யெல்லாம் அனுபவித்தலே நன்மை; அத்தகைய பிரத்தியக்ஷ சுவர்க்கத்தின்பம் பொய் புரட்டுச் செய்வதனாலேயே உண்டாகும்; நரகதுன்பம், உண்மையாகநடக்கத் துணிவதனாலேயே உண்டாகும்; இனிய வாழ்வு, மோச நாசஞ் செய்து தேடும் உலகப்பொருளாலும் எச்சமயத்தும் தழுவத் தடை சொல்லாத பொதுமாதராலுமே உண்டாகும்; நன்மையாவது (அதாவது சந்தோஷமாவது) உடல்வாடத் தவஞ்செய்யாமல் இஷ்டமானவற்றையெல்லாம் அனுபவித்தலாலேயே ஏற்படும்" என்று கூறுவர். ஆதலின், அவர்கள் அப்படிக் கூறினும், அவர்களால் மெய் யென்று கூறப்பட்டவை பொய்யே; நன்மை யென்று கூறப்பட்டது தீதே என்னும் கருத்தை இச் செய்யுள் விளக்கி நின்றது. ஆகவே, பொய்யால் நரகமும், மெய்யால் சுவர்க்கமும், நிலையற்ற செல்வப் பொருளாலும், குற்றமுடைய பொதுமகளிர் சேர்க்கையாலும் வாழ்வழிதலும், தவ மில்லாதவிடத்துத் தீமையும் சித்திக்கு மென்பது பெறப்படும்.

வாய்மை என்பது மை விகுதி குறைந்து வாய் என நின்றது. மையார் என்ற குறிப்பால் மடந்தை பொதுமகளெனக் கொள்ளப் பட்டது. மெய்யன்றால், தீதன்றால் என்பவற்றில், ஆல் - அசை. ஆயினும் என்பது ஆனும் என நின்றது. இச் செய்யுள் தளைத்தட்டாகவும் பொருட் பொருத்த மின்றியும் முன்பதிப்புப் புத்தகங்களிற் சிதைவுற்றிருந்த தாதலின் திருத்திச் சேர்க்கப்பட் டிருக்கிறது. மடந்தையால் என்பதிலுள்ள ஆல் உருபும், வாழ்வினிது என்பதும்,

பொருள் என்பதனோடும் கூட்டிக் கொள்ளப்பட்டன. வாழ்வினிது என்பது, இனிது வாழ்வு என மாற்றிக்கொள்ளப்பட்டது.

இல்லறமே சிறந்த தென்பது.

93; புல்லறத்தி னன்று மனைவாழ்க்கை போற்றுடைத்தேல்
நல்லறத்தா ரோடு நடக்கலா—நல்லறத்தார்க்
கட்டிட்டுண் டாற்றவாழ்ந் தார்களே யிம்மையில்
அட்டிட்டுண் டாற்ற வாழ்வார்.

(ப - ரை) மனை வாழ்க்கை - இல்லற வாழ்க்கையானது, போற்று உடைத்தேல் - (துறவி முதலியவர்களைப்) பேணுதலுடைத்தாயின், புல் - மனிதர் சார்கின்ற, அறத்தின் - அறங்களுள் (அதாவது இல்லறம் துறவறம் ஆகிய இரண்டனுள்), நன்று - நன்மை யுடைத்தாகும், (அது) நல் - நன்மையாகிய, அறத்தாரோடு- துறவறத்தாரோடு, நடக்கலாம் - (சமத்துவமாக) நடைபெறலாகும்; (இந் நீதியைக் கடைப்பிடித்து முற் பிறப்பில்), நல் அறத்தார்க்கு - அந்த நல்ல துறவறத்தார்க்கு, அட்டு-(உணவைச்) சமைத்து, இட்டு- பகிர்ந்து கொடுத்து, உண்டு - தாமும் உண்டு, ஆற்ற - மிகுதியாக, வாழ்ந்தார்களே-(இல்லறத்திலிருந்து) வாழ்ந்தவர்களே, இம்மையில்- இப் பிறப்பிலும், (அவ் வில்லறத்திலிருந்து), அட்டு - (உணவாதிகளைச்) சமைத்து, இட்டு - (பிரமச்சாரி, வானப்பிரஸ்தன், சன்னியாசி ஆகிய மூவ்வகையார்க்கும்) பகிர்ந்து கொடுத்து, உண்டு - தாமும் உண்டு, ஆற்ற - மிகுதியாக, வாழ்வார் - வாழ்பவராவார்.

(க - ரை) மனிதர் கொள்ளும் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டனுள் இல்வாழ்க்கையானது, துறவிகள் முதலியோரைப் போற்றுதலுடைத்தாய்ச் செவ்வனே நடத்தப் பெறுமாயின் நன்மை யுடையதாம்; அது துறவறத்தாருடனும் சமத்துவமாக நடைபெறுதல் கூடும்; முற்பிறப்பில் துறவறத்தார்க்கு உணவிட்டு இல்

லறத்தில் செழித்து வாழ்ந்தவர்களே இப் பிறப்பிலும் அவர்களைப் பேணி இல்லறத்தில் வாழ்வார்கள் என்பதாம்.

(வி - ரை) உலகத்தில் துறவறமானது முத்தியைத் தரவல்ல தாய் எல்லாவற்றினும் சிறந்து நிற்பதெனினும், உலக காரியங்களை யெல்லா மொழித்து ஒரே தன்மையில் நிற்கும் எளிமை வாய்ந்த தாதலானும், அங்ஙனம் எளிமையுடைத் தெனினும் சாமானியரால் சாதித்தற் கருமையுள்ளதாதலானும், அந்நெறியிற் சிறிது தவறினும் இழிவை யுண்டாக்கக் கூடியதாதலானும், இல்லறமானது உலக காரியங்களை ஒழுங்குபெற நடத்திக்கொண்டே தவத்தினர் முத லிய பலரையும் பேணிக் கஷ்டத்துடன் சாதிக்கக்கூடிய தாதலா னும், சிறிய தவறுதலுக்கும் இழிவை யுண்டாக்கா தாதலானும், படிப்படியாக நற்பதவிகளை யளித்து முடிவில் துறவைப்போல் முத்தியையும் அளிக்கக்கூடிய தாதலானும் அத் துறவறத்தினும் இல்லறம் நல்லதாம். எனினும் அது, துறவறத்தார் முதலியவர்களைப் பேணுதல் முதலிய இல்லற வொழுக்கங்களிற் றவறாதிருந்தால் மாத்திரமே சிறப்படையும். அதுபற்றியே ஆசிரியர், "புல்லறத்தி னன்று மனைவாழ்க்கை போற்றுடைத்தேல்'' என்றார். அங்ஙனம் நடத்தப்படும் இல்லறம் துறவறத்தோடு சமமாய் நடைபெற்று அதன் பயனையும் அளிக்கு மென்பதை, "நல்லறத்தாரோடு நடக்க லாம்-நல்லறத்தார்க்,கட்டிட்டுண் டாற்றவாழ்ந் தார்களே யிம்மையில், அட்டிட்டுண் டாற்ற வாழ்வார்'' என்பவற்றால் விளக்கினர். ஒரு பிறப்பில் இல்லறத்திலிருந்து தவத்தினர் முதலியவர்களைப் பேணு வோர் பின்னுஞ் சில பிறப்புக்களிலும் அங்ஙனமே சிறந்த இல் லறத்தை நடத்தி முடிவில் வீடு பெறுவர் என்பது ஜைன நூற்க ளின் றுணிபு. ஆதலின், 'முற்பிறப்பில் இல்லறத்தைப் பேணி யவர்களே இப் பிறப்பிலும் மனையறத்தி லிருந்து துறவிகளைப் பேணுவார்' என்றது, 'இவர்கள் இப்படியே இருந்து இன்னும்

மேற் கதிக்குச் செல்வர்' என்னும் கருத்தைக் குறிப்பால் விளக்கி நின்றது. இல்லற தருமங்களுட் சிறந்தவை தவத்தினரைப் பேணல் முதலியவைகளே ஆதலின், 'போற்றுடைத்தேல்' என்பதற்கு, தவத்தினர் முதலியவர்களைப் பேணுத லுடைத்தாயின்' என்று பொரு ளுரைக்கப்பட்டது.

"துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் றுணை."

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை."

என்னுந் திருக்குறட் செய்யுட்களால் இஃதுணரப்படும். இனி இல்லறம், துறவறத்தினுஞ் சிறந்த தென்பதையும், துறவறம் பழிப் பில்லாவிடின் மாத்திரம் சிறந்ததென்பதையும்,

"ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து."

"அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதூஉம்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று."

"அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்."

என்னும் குறள் வெண்பாக்களா னுணர்க. புல்லறம் - என்பதற்கு அற்பமான துறவறம் எனப் பொருள் கூறுவாரு முளர். வ்விடத் தும் துறவையே சிறப்பித்துக் கூறி, இல்லறத்தின் தன்மையைக் கூறுமிடத்து, 'ஒழுங்குபெற நடத்தும் இல்லறம் துறவினும் சிறந்த தாம்; இல்லறத்தை ஒழுங்குபெற நடத்தினுல் அது துறவின் பயனை யும் அளித்துவிடும், என்று கூறுவது ஜைனர்களின் கொள் கையே யன்றித் துறவை இழித்துக் கூறுதல் அவர்களின் இயல்

பன்று. ஆதலின், அவ்வுரை பொருந்தாதென்க. இச் செய்யுளி லேயே துறவை நல்லறமென்றிருத்தலே இதனை நன்கு விளக்கும். புல் அறங்கள் என்பவற்றை, புல் அறம் என்றது சாதி யொருமை பற்றி யென்க. புல்லுதல் - சார்தல். மனைவாழ்க்கை போற்றுடைத் தாதல் ஒன்று, புல்லறத்தின் நன்றாதல் ஒன்று, நல்லறத்தாரோடு நடத்தல் ஒன்று, முற்பிறப்பில் நல்லறத்தார்க் கட்டிட்டுண்டு வாழ்ந் தார் ஒன்று, இப் பிறப்பில் அங்ஙனம் வாழ்வார் ஒன்று, ஆக ஐந்து கொள்க.

நன்றும் தீதும் வீட்டுநெறிக்குத் துணையாவதும்.

94. ஈவது நன்றுதீ தீயாமை நல்லவர்
மேவது நன்றுமே வாதாரோ—டோவாது
கேட்டுத் தலைநிற்க கேடி லுயர்கதிக்கே
யோட்டுத் தவநிற்கு மூர்ந்து.

(ப - ரை) ஈவது - (பிறர்க்கு வேண்டிய பொருளைக்) கொடுப் பது, நன்று - நன்மையாம்; ஈயாமை - அங்ஙனம் கொடாமை, தீது - தீமையாம்; நல்லவர் - நல்லோர், மேவாதாரோடு - பொருந் தாதவரோடும் (அதாவது, தம் மனத்திற்குப் பொருந்தாதவர்களுட னும்), மேவது-பொருந்தியிருப்பது, நன்று-நன்மையாம்; ஓவாது- இடைவிடாமல், கேட்டு - (உயர்கதிக்கான மார்க்கங்களைக்) கேட்டு, (அக்கதி யடைய விரும்புவோர்), தலை - (அந் நெறிகளின்) கண், நிற்க - நிற்கக்கடவர்; (அங்ஙனம் நின்றால் அந் நிலையானது), கேடு இல் - கெடுதல் இல்லாத, உயர்-உயர்ந்த, கதிக்கு - மோக்ஷ கதிக்கு, ஓட்டு - செலுத்துதலில், தவ - மிகுதியாக, ஊர்ந்து - மேலாகி, நிற் கும் - நிற்பதாகும்.

(க - ரை) நல்லோர் பிறர்க்கு வேண்டியவற்றைக் கொடுப்பது நன்று; கொடாமை தீது; பொருந்தாதவரோடும் பொருந்தியிருப்பது

நன்று; நற்கதியடைய விரும்புவோர் அதற்குரிய மார்க்கங்களைக் கேட்டு அவற்றின் வழி நிற்க; அங்ஙனம் நின்றால் அந் நிலையானது மோக்ஷ கதிக்குச் செலுத்துதலில் மேம்பட்டு நிற்கும் என்பதாம்.

(வி - ரை) ஈதல் மிக்க புண்ணியத்தை உண்டாக்குவதாதலின், அது நன்றெனப்பட்டது. ஈயாமை பாவத்தைத் தருதலான் அது தீதெனப்பட்டது. "நல்லாறெனினும் கொளறீது மேலுலகம், இல்லெனினு மீதலே நன்று." என்பது திருக்குறள். எத்தகையினரோடும் உறவாயிருப்பதால் கெடுதி யில்லை; விரோதமா யிருப்பதால் கெடுதி யுண்டு; ஆதலின், தீயர்களுடனும் சிநேகமாயிருந்தால் அவர்கள் நன்மையையே புரிவர். நன்மார்க்கங்களைக் கேட்டு அவற்றின் வழி நின்றால், அந்நிலை மோக்ஷவீட்டிற் கொண்டுபோய்ச் சேர்த்து விடுவது நிச்சயம். "உயர்கதிக்கே ஓட்டுத் தவநிற்கு மூர்ந்து" என மேல் வருதலால், அதற்கேற்ப 'கேட்டு' என்பதற்கு 'உயர்கதிக்கான மார்க்கங்களைக் கேட்டு' எனப் பொருளுரைக்கப்பட்டது. மேவு - முதனிலைத் தொழிற்பெயர்; இது, அது என்னும் முதல் வேற்றுமைச் சொல்லுருபோடு சேர்ந்து மேவது என வந்தது; அது சாரியை எனினுமாம்; ஓட்டு - தல்லீறு கெட்ட தொழிற்பெயர். தவ - மிகுதிப்பொருள் குறிக்கும் உரிச்சொல்.

சிறந்த வொழுக்கமும், கடை யொழுக்கமும்.

95. உண்ணிடத்து மொன்னார் மெலிவிடத்து மந்திரங்கொண்
டெண்ணிடத்துஞ் செல்லாமை தான்றலையே—யெண்
யுரைப்பூசல் கோற லுயர்தவமேற் கங்கைக் [ணி
கரைப்பூசை போற்றக் கடை.

(ப - ரை) உண் இடத்தும் - பிறர் ஆகார முண்ணுமிடத்திலும், ஒன்னார் - பகைவர், மெலிவு இடத்தும் - தளர்ச்சியுற் றிருக்குமிடத்தும், மந்திரம் கொண்டு - இரகசியமாகிய மந்திராலோசனை

யை மேற்கொண்டு, எண் இடத்தும்-பிறர் ஆலோசிக்கு மிடத்திலும், செல்லாமை - போகாதிருத்தல், தலை-சிறந்த வொழுக்கமாம், உரை- (பெரியோர் உரைக்கும்) நீதிச் சொல்லில், பூசல் - மாறுபடுதலையும் (அதாவது, பெரியோர் நீதி உரைக்கு மாறுபட்டு நடத்தலையும்), கோறல் - உயிர்க் கொலைபுரிதலையும், எண்ணி - மனதிற்குள்ளே இரகசியமாக நினைத்து, (செய்து), மேல்-மேலே (அதாவது வெளியில் பிறர் மதிக்குமாறு), உயர் தவம் - உயர்ந்த தவ வேடத்தை, போற்ற-ஒருவர் பேணிச் செய்ய, (அவர்), கங்கைக் கரைப்பூசை - புண்ணிய ஸ்தலமாகிய கங்கைக்கரையி லிருந்துகொண்டு நீதிக்கு விரோதமாக உயிர்க்கொலை செய்யும் பூனையாவர்; (அவர் அங்ஙனம் மறைந்தொழுகும் ஒழுக்கமானது), கடை - கடையாணதாம்.

(க - ரை) பிறர் உணவுண்ணு மிடத்தும், பகைவர் தளர்ந்த விடத்தும், பிறர் மந்திராலோசனை செய்யுமிடத்தும் செல்லாமை சிறந்தது; ஒருவர் மனதிற்குள் பெரியோர் நீதியுரைக்கு மாறபடுதலையும் உயிர்க்கொலை புரிதலையும் இரகசியமாக எண்ணிச் செய்து மேலுக்குத் தவவேடம் போற்ற, அவர், கங்கைக் கரையிலிருந்து நீதி தவறி உயிர் கொல்லும் பூனை யாவர்; அவர் செய்கை கடையானது என்பதாம்.

(வி-ரை) ஒருவர், பிறர் ஆகார முண்ணு மிடத்திற்குச் சென்றால், உண்போர் மனங் கூசுமாதலின், அவர் ஆகார முட்கொள்ளுதற் கிடையூ றண்டாகும்; பகைவர் மெலிந்த சமயத்தில் அவருடன் போருக்குச் சென்றால் அவர் எளிதில் அழிந்துபோவர்; ஆதலின், அது பாவச் செய்கையாம். பிறர் கூடி ஏதேனு மொரு பெருங் காரியத்தை முடித்தற்பொருட்டு இரகசியமாக ஆலோசனை செய்து கொண் டிருக்குமிடத்தில் வேறொருவர் சென்றால் அவர் காரியம் கெடும்; ஆதலின், அது கூடாத செய்கையாம். ஆதலின், இவ்விடங்களிற் செல்லாமை சிறந்த வொழுக்க மென்றார் ஆசிரியர். மேலுக்

குத் தவவேடம் பூண்டு, மனதிற்குள்ளே பெரியோர் நீதிவாக்கியங்களைத் தள்ளிக் கொலைத்தொழில் முதலியவற்றை எண்ணிச் செய்தல் மிகுந்த பாவச் செயலாம்; ஆதலின், அது கடை யெனப்பட்டது. கங்கைக் கரையிலிருக்கும் பூனை, புண்ணியதீரத்தி லிருப்பதென மனிதரால் உயர்வாகக் கருதப்படினும் அது நீதிக்கு விரோதமாய் உயிர்க்கொலையே செய்துகொண் டிருக்கும்; அதுபோல், மனதிற்குள் கொடுஞ் செய்கைகளை நினைத்துச் செய்து மேலுக்குத் தவவேடம் பூண்டொழுகுவோர் அவ் வேடத்தால், பிறரால் உயர்ந்தவரென மதிக்கப்படினும் இரகசியத்தில் பாவச் செயல்களைச் செய்துகொண்டிருப்பர். ஆதலின், அந்தக் கங்கைக்கரைப் பூனைக்கு ஒப்பிடப்பட்டார்.

மந்திரம் - இரகசியச் சொல். செல்லாமைதான் என்பதில், தான் - அசை; தேற்றப்பொருளில் வந்ததெனினுமாம்; அங்ஙனங் கொள்ளுமிடத்து 'செல்லாமைதான், என்பதற்குச் 'செல்லாமையே' எனப் பொருளுரைத்தல் வேண்டும். தலையே என்பதில் ஏ-அசை; தேற்றத்தில் வந்ததெனினுமாம். 'உரைப் பூசல் கோறல் எண்ணி மேல் உயர்தவம் போற்ற' எனக் கூட்டுக. இங்ஙனம் கூட்டி முடித்தல் கொண்டுகூட்டுப்பொருள்கோ ளெனப்படும். "யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை, ஏற்புழி யிசைப்பது கொண்டு கூட்டே." என்பது (நன் - பொது-௬௭.) சூத்திரம். பூசல் - போர்; உரைப் பூசல் - உரையோ டெதிர்த்தல்; அது சொல்லுக்கு மாறுபட்டு நடத்தலை யுணர்த்திநின்றது. பூசை - பூனை. போற்ற என்பதற்கு முன் ஒருவர் என்னும் எழுவாயும், கடை யென்பதற்கு முன் அவ் வொழுக்கமானது என்னும் எழுவாயும் வருவித்துரைக்கப்பட்டன. போற்ற - வினையெச்சம்; இது பூசையாவர் என்னும் வினைமுற்றோடு முடிந்தது. உண்ணிடத்துச் செல்லாமை, ஒன்னார் மெலிவிடத்துச் செல்லாமை, மந்திரங்கொண் டெண்ணிடத்துச் செல்லாமை, மேல் உயர்தவம் போற்றக் கங்கைக்கரைப் பூனையாதல், அவ் வொழுக்கம் கடையாதல் என ஐந்து கொண்டு முடிக்க.

இறந்த பின் உலகத்தாரால் அறியப்படும் உயர்குண முடையார்.

96. பத்தினி சேவகன் பொத்தில் கடுந்தவசி [இன்றி
பொத்தில் பொருட்டிறத்துச் செவ்வியான்—பொத்
வைத்தா ரதுவழக்குஞ் சான்றவர் தஞ்செம்மை
செத்தா லறிக சிறந்து.

(ப - ரை) பத்தினி - கற்புடையாள், சேவகன் - வீரன், பொத்து இல் - குற்ற மில்லாத, கடும் தவசி-கடிய தவமுடையான், பொத்து இல் - மறைத்தல் இல்லாத (அதாவது மறைக்கத் தகாத), பொருள் திறத்து-பிறர் பொருளைப் பாதுகாக்குந் தன்மையில், செவ்வியான் - செம்மையுடையவன், பொத்து இன்றி - பொய் யில்லாமல், வைத்தாரது - நீதி நெறிகளை ஏற்படுத்தி வைத்தவர்களுடைய, வழக்கும் - நல்ல வழக்கங்களும், சான்றவர்தம் - நிறைந்தவர் ஆகியவர்களுடைய, செம்மை - ஒழுங்கான தன்மையை, சிறந்து-(உலகத்தில் அவர்கள்) சிறப்புற்று, செத்தால் - இறந்தால், அறிக - அறிந்து கொள்க.

(க - ரை) பத்தினி, சேவகன், தவசி, பிறர் பொருளைப் பாதுகாப்பதில் செவ்வியான், பெரியோர்களுடைய நல் வழக்கங்கள் நிறைந்தவர் ஆகியவர்களுடைய ஒழுங்கான தன்மையை அவர்கள் இறந்தபின் தெரிந்துகொள்க என்பதாம்.

(வி - ரை) பத்தினி-கற்பொழுக்கங்களில் தவறாதிருக்கும் பதிவிரதை; சேவகன் - அரசர் முதலியவர்களிடத்தில் போர்வீரனாயமைந்து பகைவரை ஜெயித்து வீரத்தைச் சாதிப்பவன்; பொத்தில் கடுந்தவசி-பிறர் பழிக்கத்தக்க கெட்ட வொழுக்கங்களின்றி உலகப் பற்றுக்களைத் துறந்து சாமானியரால் சாதிக்க முடியாத கடின தவத்தை வைராக்கியத்தோடு செய்பவன்; பொத்தில் பொருளாவது-

பிறர் அடைக்கலமாக வைத்தால், அடைக்கலம் பெற்றவன் அபகரிக்கக் கருதி மறைக்கத்தகாத பொருள்; அதனிடத்துச் செவ்வியான் - அதன்பால் செம்மைக் குணம் காட்டுபவன்; அதாவது, அதனைத் தான் அபகரிக்காமல் அதற்குரியானிடத்தில் சேர்ப்பிக்கத்தக்கவன். பொத்திவைத்தலாவது - பொய்ம்மார்க்கமின்றி உண்மை மார்க்கங்களை ஏற்படுத்தி வைத்தல்; அதாவது, நீதிகளை நிலைபெறுவித்தல்; அச் செய்கை யுடையோர் உயர்ந்தோர்; அவருடைய வழக்கு - நீதியோடு கூடிய நடக்கைகள்; அவ் வழக்குச் சான்றவர் - அந் நடக்கைகளையுடைய வழக்கம் பொருந்தியவர்கள். இவர்கள் உலகத்திலிருக்கும் வரையில் இவர்களுடைய புகழ் அதிகமாகப் பரவாவிடினும் இவர்கள் இறந்தபின் எங்கும் வியாபகமாய் என்றும் நிலைபெற்று விளங்கும். மனிதருள் நல்லோராயினும் கெட்டோராயினும் அவர்கள் இறந்த பின்னரே அவர்களைப்பற்றி உலகத்தார் பலவாறு புகழ்ந்தும் இகழ்ந்தும் பேசுதல் உலகியல்பு "செத்தால் தெரியும் செட்டியார் வாழ்வு" என்னும் பழமொழியும் இதனாலேயே ஏற்பட்டது. ஆதலின், இவர்களுடைய, 'செம்மை செத்தாலறிக' என்றார் ஆசிரியர். இத்தகையினர் இறக்குங் காலத்தில், 'வாதனையற் றிறந்தான் பெருமையை என்சொல்லுவேன்' என்பதிற் கிணங்க வாதனையற்றிறப்பார்களாதலின், அச் சிறப்பை விளக்கற்பொருட்டு, 'சிறந்து செத்தால்' என்றார் ஆசிரியர். நல்லோரியல்பும் கெட்டோரியல்பும் அவர்கள் இறந்தபின் அறியப்படும் என்பது இச் செய்யுளின் உட்பொருளாம்.

பொத்து - குற்றம், பொய், மூடுதல் என்ற பொருள்களைத் தரும். வைத்தார் என்பதற்குமுன், 'நீதிநெறிகளை ஏற்படுத்தி' என்னுஞ் சொற்கள் இசை யெச்சமாக வருவித் துரைக்கப்பட்டன. வழக்கும் என்பதன் உம்மை-இறந்தது தழுவியது; முன்னுரைத்த விஷயங்களைத் தழுவி 'அவற்றோடு வழக்கும் சான்றவர்' என்று பொருள் விரித்தற் கேதுவாய் வந்தது.

இன்ன இன்னவற்றை விடுதல் அற மென்பது.

97. வழிப்படரல் வாயல் வருந்தாமை வாய்மை
குழிப்படரல் தீச்சொற்க ளோடு—மொழிப்பட்ட
காய்ந்து விடுதல் களைந்துயக் கற்றவர்
ஆய்ந்து விடுத லறம்.

(ப - ரை) உய்ய - நல்ல வாழ்வை அடையும்பொருட்டு, கற்றவர்-(அதற்குரியநன்மார்க்கங்களைக்) கற்றுணர்ந்தவர்கள், தீச்சொற்களோடு - தீய சொற்களைக் கூறுதலுடனே; வழி-ஜனங்கள் நடக்கும் வழியிற் சென்று, படரல் - பிறர்க்குத் துன்பமாதலும், (அதாவது, வழிப்பறிகொள்ளை செய்து பிறரைத் துன்பப்படுத்துதலும்); வாய் - பொருந்திய, அல் - இருட்டிற்கு, வருந்தாமை - வருந்தாமையும், (அதாவது, திருட்டு முதலிய துஷ்ட காரியங்களைச் செய்தற்கு இருட்டில் செல்வதில் வருந்தா திருத்தலும்); வாய்மை - சத்திய மானது, குழிப்பு - தாழ்வுபடுதலில், அடரல்-பொருந்துதலும், (அதாவது, சத்தியந் தவறி நடத்தலும்); மொழிப்பட்ட - (பெரியோர்) வார்த்தைகளில் அடங்கிய நீதிகளை, காய்ந்து - சினந்து வெறுத்து, விடுதல் - விடுதலும் (ஆகிய ஐந்தையும்), ஆராய்ந்து - ஆராய்ந்து பார்த்து, (இவைகள் தீயவைகளென் றுணர்ந்து), களைந்து விடுதல்-நீக்கி விடுதல், அறம் - தருமமாம்.

(க-ரை) வாழ்வடையத் தக்க நன்மார்க்கங்களைக் கற்றவர்: தீய சொற்களைப் பேசுவதையும், வழிப்பறி கொள்ளை செய்தலையும், துஷ்ட காரியங்களைச் செய்ய இருட்டிற் செல்லுதலையும், சத்தியந் தவறி நடத்தலையும், பெரியோர் உரைத்த நீதிகளைத் தள்ளுதலையும் நீக்கிவிடுதல் அறமாம் என்பதாம்.

(வி - ரை) படர் - துன்பம்; படரல் - துன்பமாதல்; வழிப் படரல் - வழியில் துன்பமாதல்; வழியில் துன்பமாதலாவது, வழிச்

செல்வோரை மறித்து அடித்து அவர் கைப்பொருளைப் பறித்துத் துன்புறுத்தலாம். அல்வருந்தாமை - இருட்டிற் கஞ்சாமை; இது, திருட்டு, கொலை முதலியவற்றைச் செய்யும் துஷ்டருடைய செய்கை. வாய்மை - சத்தியம்; குழிப்பு - தாழ்வு; அடரல் - பொருந்தல், நெருங்கல்; வாய்மை குழிப்பு அடர்தலாவது, சத்தியந் தவறவதில் சம்பந்தப்படல்; அதாவது, சத்தியத்தைக் கைவிடல். தீச்சொற்கள் - கெட்ட வார்த்தைகளையே பேசிக்கொண்டிருத்தல். மொழிப்பட்ட - பெரியோர் வார்த்தைகளிற் பொருந்தியவை; அவை நீதி மார்க்கங்கள். ஈண்டுக் கூறிய ஐந்து காரியங்களும் தீமையுடையன வாதலின், இவற்றை விடுதலே சிறந்த தருமமும், நல்ல வாழ் வடைதற் கேதுவுமாம். நல்ல வாழ்வடைதலாவது பிறவித் துன்ப மொழிந்து மோக்ஷ மெய்தி என்றும் அழியாச் சுகம் பெற்று வாழ்தலாம். மொழிப்பட்ட - வினையாலணையும் பெயர். இனி வழிப்படரல் - என்பதற்கு, 'கொள்ளை யடித்தற்கு வழியிற் செல்லுதல்' என்றும் பொருள் உரைக்கலாம். வாய்மை குழிப் படரல் - என்பதை, வாய்மை+குழி+படரல் - எனப் பிரித்து, வாய்மையானது தாழ்விற் செல்லுதலும் எனப் பொருள் கூறினும் அமையும்; படரல்-செல்லுதல். உய்யக் கற்றவர், வழிப் படரல் முதலியவற்றை ஆய்ந்து களைந்து விடுதல் அறம் எனக் கூட்டி முடிக்க; இங்ஙனம் முடித்துப் பொரு ளுரைப்பது கொண்டு கூட்டுப்பொருள்கோளின் பாற்படும்.

---

## பாயிரம்

### இந் நூலாசிரியர் பெயர் முதலியன

98. மல்லிவர்தோள் மாக்காயன் மாணாக்கன் மாநிலத்துப்
பல்லவர் நோய்நீக்கும் பாங்கினாற்—கல்லா
மறுபஞ்சந் தீர்மழைக்கை மாக்காரி யாசான்
சிறுபஞ்ச மூலஞ்செய் தான்.

(ப - ரை) மல் இவர் - மல் யுத்தத்தை விரும்புகின்ற, தோள்-புஜங்களையுடைய, மாக்காயன்-மாக்காயன் என்பவனுடைய, மாணுக்கன் - மாணுக்கனுகிய, பஞ்சம் தீர் - (தானியங்கள் கிடைத்தற்கரிய) சிறுவிலைக் காலத்தைத் தீர்த்துத் தானிய விளைவை யுண்டாக்கி நாட்டைச் செழிப்படையச் செய்கின்ற, மழை-மேகத்தை நிகர்த்த, கை-ஈகை பொருந்திய கையையுடைய, மா - சிறந்த, காரியாசான் - காரியாசான் என்பவன், மா நிலத்து - பெரிய இப் பூமியில், (வைத்தியனொருவன்), பல்லவர் - பலபேர்களுடைய, நோய் நீக்கும் - உடற்பிணியைத் தீர்க்கும், பாங்கினுல் - தன்மையினுல், (அதாவது) சிறு பஞ்ச மூலமென்னும் ஐந்து வேர்களினுல் பிணிகளைத் தீர்ப்பதைப் போல ஒவ்வொரு செய்யுளுக்கும் ஐந்து ஐந்து விஷயங்களைக் கூறி அவற்ருல் மாணிடரின் பிறவிப் பிணி நீங்குதலோடு), கல்லா மறு-மாணிடர்கள் நீதி நூல்களைக் கல்லாத குற்றமும், தீர்-நீங்குதற்குரிய, சிறுபஞ்சமூலம் - சிறுபஞ்சமூல மென்னும் இந் நூலை, செய்தான் - இயற்றினுன்.

(க - ரை) மாக்காயன் மாணுக்கனுகிய காரியாசா னென்பவன், சிறுபஞ்சமூல மென்னும் இந்நூலை, மாணிடர்க்குப் பிறவிப் பிணியும் அறியாமையும் நீங்குமாறு செய்தான் என்பதாம்.

(வி - ரை) இச் செய்யுளால், இந்நூலை இயற்றியவர் காரியாசான் என்பதும், அவர், மாக்காயனுர் மாணுக்கர் என்பதும், இந் நூலின் சிறந்த தன்மையும் விளங்குகின்றன. 'மல்லிவர் தோள் மாக்காயன்' என்றதனுல், மாக்காயனுர் கல்வித் தேர்ச்சியுடையவரே யன்றித் தேகக் கட்டுடைய வீர ரென்பதும் விளங்குகின்றது; மாக்காயன் என்ற பெயரும் இவருடைய உடல் வலிமைபற்றி வந்த காரணப்பெயராகவே யிருத்தல் கூடுமென்பது விளங்குகின்றது; மா - சிறந்த, காயன் - தேகத்தை யுடையவன். 'பஞ்சந்தீர் மழைக்கை மாக்காரியாசான்' என்றதனுல், காரியாசான், கலைவல்

னாரே யன்றிக் கொடைவள்ளலு மாவ ரென்பது விளங்குகின்றது; இவருக்கு வந்தமா என்ற அடை கல்விச் சிறப்பையும் கொடைச் சிறப்பையும் குறிக்க வந்தது. இவருடைய கை, வறுமையாளர்க்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்து அவர்களுடைய கஷ்டத்தை நிவர்த்தி செய்வதுபோல மேகமானது வறண்டுபோன உலகத்தில் மழையைச் சொரிந்து பயிர்களைச் செழிக்கச் செய்து பஞ்சத்தைப் போக்கக்கூடியதாதலின் அஃது தக்காரத்திற் குவமை கூறப்பட்டது. வைத்திய னொருவன் சிறுபஞ்சமூலங்களாகிய வேர்களால் பல பேருடைய பிணிகளைத் தீர்ப்பதுபோல, இந் நூலும் செய்யுள் தோறும் ஐவ்வைந்து விஷயங்களைக் கொண்டு மனிதரின் பிறவிப் பிணியையும், நூல்களைக் கல்லாத குற்றத்தையும் போக்கக் கூடியதாகலின், இதனை, 'பல்லவர் நோய் நீக்கும் பாங்கினால், கல்லா மறு தீர் சிறுபஞ்ச மூலம்' என்றார் ஆசிரியர். தீர்-என்பது தீபகமாக, 'பஞ்சந் தீர்' எனவும் 'மறுதீர்' எனவும் இரண்டிடங்களினுங் கூட்டப்பட்டது. சிறுபஞ்சமூலம் - இந் நூலுக்கு உவமையாகுபெயர். சிறுபஞ்ச மூலங்களின் விவரம் இந்நூலின் இரண்டாவது செய்யுளுரையிற் கூறப்பட் டிருக்கின்றது.

இச் செய்யுள், "ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை, நூற் பெயர் யாப்பே நுதலிய பொருளே, கேட்போர் பயனோ டாயெண் பொருளும், வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே" என்ற பாயிர இலக்கணங்களுட் சில பொருந்தி யிருத்தலால், "தன்னா சிரியன் தன்னொடு கற்றோன், தன்மா ணாக்கன் தகுமுறை காரனென், றின்னோர் பாயிர மியம்புதல் கடனே." என்றபடி அந் நால்வருள் ஒருவரால் கூறப்பட்டிருத்தல் கூடுமென்று ஊகிக்க இடந் தருகின்றது. இது, நூலின் முதலில் இருக்கத் தக்கதெனினும், பண்டைக் காலத்துக் கையெழுத்துப் பிரதிகளில் ஈற்றில் எழுதப்பட்டு அங்ஙனமே அச்சிடப்பட்டிருத்தல் கூடும்.

சிறுபஞ்ச மூலம் மூலமும் உரையும்
முற்றுப்பெற்றன.

---

FIRST EDITION] [1000 COPIES

அரிச்சந்திர புராண வசனம்: அரிச்சந்திர புராண மூலத்தை யனுசரித்துத் தமிழில் நூதனமாக வசனப்படுத்தப்பட்ட அரிய நூல்; இனிய நடையில் கதை விரிவாக அமைந்தது: விலை ரூபா 1-8-0

அருணசல புராண வசனம்: அடியார்களின் பாவத்தைப் போக்கும் திருவண்ணுமலை ஸ்ரீ அருணுசலேசுவரரின்மீது பாடப்பட்டுள்ள ஷெ புராணத்தின் கருத்தை எல்லோரும் அறிந்துணருமாறு இனிய நடையில் வசன ரூபமாக இயற்றப்பெற்றது: விலை ரூபா 1

பிரபோத சந்திரோதய வசனம் என்னும் மெய்ஞ்ஞான விளக்கம்: விலை ரூபா 1

பிரபுலிங்கலீலை வசனம்: கவிச் சக்கரவர்த்தியாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச ஸ்வாமிகளியற்றிய அரிய நூலின் தமிழ் வசனம்: விலை ரூபா 1

வேதப்பொருள் விளக்கம்: ருக், யஜுர், சாம, அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களிலுள்ள முக்கிய விஷயங்கள் அடங்கியது: விலை அணு 12. வேதப்பொருள் சார சங்கிரகம்: விலை அணு 4

மத விருக்ஷம்: உலகத்திலுள்ள பெரிய மதங்களின் சரித்திரமும் வரலாறும்: விலை ரூபா 2-0-0

பச்சையப்ப முதலியார் சரித்திரமும், அவர்மீது பல வித்வான்கள் பாடிய பாடல்களும் கீர்த்தனங்களும்: முதலியார் உருவப் படத்துடன்: விலை அணு 10

ஸ்ரீ பகவத்கீதை வசனம்: ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு உபதேசித்த திவ்ய கீதையின் தமிழ் வசனம்: விலை ரூபா 1-8-0

சைவசமய விளக்க வினவிடையும், சைவசமய ஆசௌச வினவிடையும்: விலை அணு 8

வீரசைவ வினவிடை: இதில் வீரசைவ மதத்தின் சமயாசார இலக்கணங்கள் யாவும் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன: அணு 5

மாதரொழுக்க இலக்கணம்: ஸ்திரீகள் நடந்துகொள்ள வேண்டிய முறைகள்: விலை அணு 3

ஸ்ரீ

# கணிமேதையார்

இயற்றிய

# ஏலாதி,

மஹா வித்வான்

**கோ. இராஜகோபாலப்பிள்ளையவர்கள்**

இயற்றிய

**உரையுடன்.**



இஃது
சென்னைப் பச்சையப்பன் காலேஜ்
தமிழ்ப் பண்டிதர்
கா. ர. கோவிந்தராஜ முதலியாரால்
பார்வையிடப்பட்டது.

**மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,**
**87, தம்புசெட்டி வீதி, சென்னை.**

**1924**

விலை அணா 6

ஸ்ரீ

# முகவுரை



ஏலாதி என்னும் இந்நூல் சங்கத்துத் தொகைநூற்க ளுள் ஒன்ருகிய பதினெண் கீழ்க்கணக்கினுள் ஒன்று; பதி னெண் கீழ்க்கணக்கு நூற்கள் இவை என்பதும், அவற்றின் இலக்கணமும் இதற்குமுன் வந்துள்ள திரிகடுக முதலிய நூற்களிற் கூறப்பட்டன. இந்நூல் கடைச்சங்க மருவிய நூற்களுள் ஒன்ருதலின் இந்நூலாசிரியரது காலம் அச் சங் கத்திற்குப் பிற்பட்டது அன்று என்பது நன்கு விளங்குகின் றது. இந்நூலின் தற்சிறப்புப்பாயிரச் செய்யுளால் இந்நூலா சிரியர் அருகசமயத்தவர் என்பது நன்கு விளங்கும். இந் நூலில் தற்சிறப்புப்பாயிரச் செய்யுள் ஒன்றும், சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றும், நூற்செய்யுட்கள் எண்பதுமாக எண்பத்திரண்டு செய்யுட்க ளிருக்கின்றன. இந்நூலின் பிரதிகள் ஒன்றின் ஈற்றில் "தமிழாசிரியர் மகனர்-மாக்காய னர் மாணக்கர்-கணிமேதையார் செய்த ஏலாதி முற்றிற்று" என்றிருத்தலின், இந் நூலாசிரியர் மாக்காயனர் என்பவ ருடைய மாணக்கர் என்று தெரிகின்றது. சிறுபஞ்சமூலம் என்னும் நூலின் ஈற்றிலுள்ள,

> "மல்லிவர்தோண் மாக்காயன் மாணக்கன் மாநிலத்துப்
> பல்லவர்நோய் நீங்கும் பாங்கினற்—கல்லா
> மறுபஞ்சந் தீர்மழைக்கை மாக்காரி யாசான்
> சிறுபஞ்ச மூலஞ்செய் தான்."

என்னும் சிறப்புப்பாயிரச் செய்யுளால் அந்நூலின் ஆசிரிய ராகிய காரியாசான் என்பவரும் இம் மாக்காயனர் மாணக்

கரே என்பது விளங்குகின்றது. இவற்ருல் இவ்விருநூலாசிரியர்களும் ஒருசாலை மாணுக்கர்கள் என்பது நன்கு விளங்குதல் காண்க. 'மல்லிவர்தேர்ண் மாக்காயன்' என்கிற விசேடணத்தால் அம் மாக்காயனுர் போர்வீரரா யிருந்தவர் என்பதும், இவ்விரு நூலாசிரியர்களுக்கும் ஆசிரியர் என்பதனுல் பெரும்புலவராய் விளங்கியவர் என்பதும் நன்கு விளங்குகின்றன. இந் நூலாசிரியர் கணிமேதாவியார் என்றும் வழங்கப்படுவர்.

மஹாவித்துவான் கோமளபுரம்-இராஜகோபாலப்பிள்ளையவர்கள் இந்நூலின் தற்சிறப்புப்பாயிரச் செய்யுள் ஒன்றும், நூற்செய்யுட்களில் முதலிலிருந்து நாற்பத்தொன்பது செய்யுளுமாகிய ஐம்பது செய்யுட்களுக்கே யுரை யியற்றியிருக்கின்றனர் எனத் தெரிகின்றது. அவற்றிற்கு மேல் உள்ள இந்நூலின் மற்றச் செய்யுட்களுக்கு அவர் உரை யியற்றியிருப்பதாகப் புலப்படவில்லை. ஆகையால், இந்நூலின் மற்றைய முப்பத்தொரு செய்யுட்களுக்கும், சிறப்புப்பாயிரச் செய்யுள் ஒன்றுக்கும் என்னு லியன்றுங்கு உரை யியற்றினேன். இதுபோன்ற பதினெண் கீழ்க்கணக்கு நூற்களும், அவற்றுள் சிலவற்றிற்கு மேற்படி பிள்ளையவர்கள் இயற்றிய உரையும் வெளிவந்து மாணவர்க்குப் பயன் செய்வனவாதல் வேண்டும் என்னுங் கருத்துட்கொண்டே இது செய்தேனுகையின், இது மீச்செயலெனவெண்ணி இதுபற்றி என்னைப் பெரியோர்கள் முனியா திருப்பார்களாகவென அவர்தங் கழலைப் பலவும் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்:

☞ கா. ர. கோ.

## சிறப்புப் பாயிரம்



இல்லறநூ லேற்ற துறவறநூ லேயுங்கால்
சொல்லறநூல் சோர்வின்றித் தொக்குரைத்து—நல்ல
அணிமேதை யாய்நல்ல வீட்டு நெறியுங்
கணிமேதை செய்தான் கலந்து.

(ப - ரை) நல்ல-சிறந்த, அணி மேதையாய்-அழகிய அறிவை யுடையாளே!, கணிமேதை - கணிமேதை என்னும் புலவர், இல் அறநூல் - இல்லறநூலும், ஏற்ற-(ஞானமடைதற்கு) உரிய, துறவு அறநூல் - துறவறநூலும் ஆகிய, சொல் - (உயர்ந்தானாகிய கடவுளாற்) சொல்லப்பட்ட, அறநூல் - இருவகை அறநூலின் பொருள்களையும், சோர்வு இன்றி-தளர்ச்சி யில்லாமல், தொக்கு உரைத்து-தொகுத்துக் கூறி, ஏயுங்கால் - ஏற்றவிடத்தில், வீட்டு நெறியும் - முத்தியுலகுக்குரிய (முத்தியுலகை யடைதற்குரிய) ஞானமாகிய வழியையும், கலந்து - உடன்கூட்டி, செய்தான்-இந்நூலை யியற்றியருளினர்.

(வி-ரை) சொல்லப்படு என்னும் செயப்பாட்டு வினைப்பொருளதாகிய சொல் என்பது அறம் என்பதோடு கூடி வினைத்தொகைநிலைத்தொடராயிற்று. மூன்றாவது அறநூல் என்பது அறநூலால் உணர்த்தப்படும் அறமாகிய பொருள்களை யுணர்த்தலின் கருவியாகுபெயர். ஏயுங்கால் - தெரிநிலைப் பெயரெச்சத்தொடர். சோர்வு-தொழிற்பெயர்; இதில் வு-விகுதி. இன்றி - எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம். ஞானமாகிய வழி ஞானமார்க்கம் எனப்படும். கணிமேதை-யாவருங் கணிக்கும் மேதையையுடையவர்; இது வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்

பெயர். கணித்தல் - மேலாக மதித்தல். மேதை - அறிவு. அணி மேதை என்பது அழகாகிய அறிவினையுடையாள் என்றுதலின் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர்; அன்றி (அழகு செய்யும்) அறிவினையுடையவள் எனக் கொள்ளின் இதுவும் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைப் பெயரேயா மென்க. வீட்டுநெறி - நான்கனுரு பும் பயனு முடன்றொக்க தொகைநிலைத்தொடர். இச் சிறப்புப் பாயிரச் செய்யுளால் இந் நூலின்கண் அறம் பொரு ளின்பம் வீடு என்னும் நான்கு பொருள்களுள் அறத்தின் பகுதிகளாகிய இல்லறம், துறவறம் என்னும் இரண்டும், வீடடைதற்குரிய ஞான நெறியும் கூறப்பட்டுள்ளன வென்பது நன்கு போதரும். இப் பாயிரத்தில் 'கணிமேதை' என்றதனுல் ஆக்கியோன் பெயரும், 'சொல்லறநூல் தொகுத்துரைத்து' என்றதனுல் வழியும், யாப்பும், 'இல்லறநூல் ஏற்ற துறவறநூல் சொல்லறநூல் தொகுத்துரைத்து' என்றதனுலும், 'வீட்டுநெறியுங் கலந்து' என்றதனுலும், நுதலிய பொருளும் வெளிப்படையாகக் கூறப்பட்டன. சிறப்புப் பாயிரத்திற் குரிய பொருள்கள் பதினென்றனுள் ஈண்டு வெளிப் படையாகக் கூறப்பட்டன போக மற்றவற்றுள் இதிற் குறிப்பாகக் கொள்ளத்தக்கன கொள்க.

சிறப்புப்பாயிரத்திற்குரிய பொருள்கள் பதினென்றுவன:— ஆக்கியோன் பெயரும், வழியும், எல்லையும், நூற் பெயரும், யாப் பும், நுதலிய பொருளும், கேட்போரும், பயனும், காலமும், களனும், காரணமும் ஆம்.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

ஸ்ரீ

# ஏலாதி

## மூலமும் உரையும்

ஏலம் என்னும் வடமொழிப் பெயரோடு ஆதியென்னும் வடமொழிப் பண்பாகுபெயர் இருபெயரொட்டுப் பண்புத் தொகைநிலைத்தொடராய்த் தீர்க்க சந்தி பெற்று நின்ற ஏலாதியென்பது ஏலம், இலவங்கம், சிறுநாவற்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு இவற்றால் செய்த சூரணத்தை யுணர்த்தலால் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர்; ஏலத்தை எடுத்துச் சொல்லியது மேற்கூறிய ஆறும் முறையே ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு வராகனெடை சேர்வது இம் மருந்தாகலின். இது உயிரோடு கூடிநின்ற மக்களுடலுக்கு உணவு செயல்களின் ஒவ்வாமையால் வரும் இருமல், சுவாசகாசம், மேலுயிர்ப்பு, காசமென்னும் பிணிகளை நீக்கி, அவ் வுடலைப் பெற்றோன் அதனை நெடுங்காலங் கொண்டு செலுத்துமாறு நலந்தருதல்போலச் செய்வனவுந் தவிர்வனவுமாகக் கூறும் அவ்வாறு பொருளா லமைந்த ஒவ்வொரு செய்யுளும் உணரவல்ல மக்களுயிர்க்குப் பேதைமையினு லுண்டாம் பிறவித்துன்ப நீக்கி, இம்மை, மறுமை, வீடுகளின் இன்பந் தருவதாதலின் அச் செய்யுளுக்கு உவமை யாகுபெயராய், அது அச் செய்யுள் பல தொக்க தொகுதியாகிய நூலுக்குச் சினையாகுபெய ராயிற்று; அச் செய்யுள்களால் அமைக்கப்பட்டது நூலாதலால் கருவியாகு பெயருமாம். இப் பெயர் மிகுதிபற்றி வந்த பெயரென்க.

## தற்சிறப்புப் பாயிரம்

### கடவுள் வணக்கம்

அறுநால்வ ராய்புகழ்ச் சேவடி யாற்றப்
பெறுநால்வர் பேணி வழங்கிப்—பெறுநால்
மறைபுரிந்து வாழுமேன் மண்ணொழிந்து விண்ணோர்க்
கிறைபுரிந்து வாழ்த லியல்பு.

(பதவுரை) அறு நால்வர் உம் - (மந்திரி முதலிய) இருபத்து நால்வரும், ஆய் புகழ் - குற்ற மில்லாத புகழ் அமைந்த, சேவடி - தனது சிவந்த பாதங்களாலிட்ட தொழிலை, ஆற்ற - செய்யாநிற்க, பெறு-(ஒழுக்கத்தின் பயனைப்) பெறுகின்ற, நால்வர் - (பிரமசாரி முதலிய) நால்வர், பேணி - விரும்பிய பொருளை, வழங்கி-கொடுத்து, பெறு - கற்றுணர்ந்தடைந்த, நால் மறை-நான்குவேத ஒழுக்கத்தை, புரிந்து - விரும்பி நடந்து, வாழுமேல் - ஒருவன் வாழ்வானாயின், மண் ஒழிந்து - பூமியினின்று நீங்கி, விண்ணோர்க்கு - தேவர்க்கு, இறை புரிந்து - அரசனால் விரும்பப்பட்டு, வாழ்தல் - (சுவர்க்கத்தில்) வாழ்தல், இயல்பு - உண்மையாம்.

(விசேடவுரை) மந்திரி முதலிய இருபத்து நால்வராவர்: மந்திரி, புரோகிதன், படைத்தலைவன், தூதன், ஒற்றன் என்னும் அரசனுக்குரிய கூட்டமாகிய ஐவரும்; மந்திரி, காரிய நடத்துவோன், சுற்றத்தான், வாயில் காப்பவன், நகரமாக்கள், படைத்தலைவன், குதிரைவீரன், யானைவீரனென்னும் அரசனுக்குத் துணையாகிய எண்மரும்; நட்பாளன், அந்தணன், மடைத்தொழிலாளன், மருத்துவன், சகுனத்தின் பயன் கூறுவோனென்னும் நீங்குதலில்லாத சுற்றமாகிய ஐவரும்; மந்திரி, நாடு, அரண், பொருள், படை, நட்பென்னும் அங்கமாகிய ஆறும் என்பவர். மந்திரி: கூட்ட

முதலிய நான்கிலும் இன்றியமையாதவ னாதலால் அந்நான்கினுங் கூட்டப்பட்டனன். படைத்தலைவனும் கூட்டத்திலும், துணையிலும் அன்னவ னென்க. அறுநால்வர் - மிகுதியினால் வந்த திணைவழுவமைதி. பிரமசாரி முதலிய நால்வராவார் - ஆசிரியனிடத்து ஓதலும் விரதம் நோற்றலுமாகிய ஒழுக்கமுடைய பிரமசாரி, இல்லற ஒழுக்கமுடைய இல்லறத்தான், இல்லை விட்டு வனத்துக்குத் தீயோடு சென்று மனையாள் வழிபாடு செய்யத் தவஞ் செய்யும் வானப்பிரத்தன், முற்றத் துறந்த யோக ஒழுக்கமுடைய துறவறத்தான் என்பவர். நால்வ ரென்பதற்குத் தென்புலத்தார், கடவுள், விருந்தினர், உறவினர் என வுரைத்தலுமாம். பாடபேதங் கூறி வேறு பொருள் உரைப்பாரு முண்டு; இங்குரைப்பின் பெருகும். பேணி-தொழிலடியாகப் பிறந்த பெயர்; பேண்-பகுதி, இ - செயப்படுபொருண்மை விகுதி. இறை-தொழிலடியாகப் பிறந்த பெயர்; இற-பகுதி (கடத்தல்), ஐ-வினைமுதற்பொருண்மை விகுதி. பகுதி ஈற்றகரக்கேடு கடைக்குறை; யாவற்றுக்கும் மேலாய் நிற்பவனென்பது பொருள்; திருமாலாகிய இறையினுடைய கூறுள்ளவன் அரசனுமாகலின் அரசனை 'இறை' என்றார். விகாரமின்றி, எப்போதுமுள்ளதாகலின் உண்மை இயல்பெனப்பட்டது. சேவடி என்பதில் செம்மை அடி யென்னும் உயிர்முதன்மொழிப் புணர்ச்சியில் ஈறுகெட்டு, ஆதி நீண்டு,முன்னின்ற மெய்யாகிய மகரம் வகரமானது; சேயடியென யகரமாதலு முண்டு; செ-பகுதியெனின்,எகரம் மெய்யோடு கூடி ஈறாகா தாதலால் அது குற்றமென்க; கலைலாலிடுந் தொழிலைச் சேவடி யென்றது ,காரண வாகுபெயர்; காலாலிடுந் தொழி லென்றது இழிதொழிலை;"காற்றொழி லென்று கருதற்க" எனப் பிறர் கூறலாலுங் காண்க.

(குறிப்பு) இச் செய்யுளுக்குப் பழைய உரை காணப்படாமையின் இதற்குப் பொருள் கூறவந்த ஒவ்வொருவரும் ஒவ்வொரு

விதமாகப் பொருள் கூறினர். அவருள் ஒருவர்மட்டும் இதனை அருகக்கடவுள் வணக்கமெனக் கொண்டு பொருள் கூறியிருக்கின்றனர். அங்ஙனங் கூறுதலே அமைவுடைத்தாம் என்பது இதனை உற்று நோக்குவார்க்கு நன்கு விளங்கும்; ஆதலின், இதற்கு அடியில் வரும் விதம் பொருள் கொள்ளுதலே தகுதியாகும் எனத் தோன்றுகின்றது.

(பதவுரை) அறு நால்வர்-இருபத்துநான்கு தீர்த்தகர்களின், ஆய் - யாவரும் ஆராய்ந்து தேர்தற்குரிய, புகழ்-புகழினையுடைய, சேவடி - செம்மையாகிய பாதங்களை, ஆற்றப்பெறும் - தாங்கப் பெற்ற, நால்வர்-நான்கு வகைத் தேவராசி புருஷர்கள், பேணி-காத்து, வழங்கி - அளிக்க, பெறும் - நாம் அடைந்த, நான்மறை - நாற்பயனையுந் தரும் வேதங்களினால் உணர்த்தப்படும் கடவுளை, புரிந்து - எப்பொழுதுஞ் சொல்லித் துதித்து, வாழும் - வாழுங்கள், மண் ஒழிந்து-(நீங்கள்) இப் பூமியை விட்டு நீங்கினால் (இறந்தால் என்பது), என்-(பிறகு நீங்கள் உய்வதற்காகச் செய்யக் கூடியது) யாதுளது? விண்ணோர்க்கு இறை-தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனுக்கும், புரிந்து வாழ்தல்-கடவுளைச் சொல்லித் துதித்து வாழ்வது, இயல்பு - கடமையாம்.

(விசேடவுரை) இருபத்துநான்குதீர்த்தகர்களாவார்:—ரிஷப தீர்த்தகர் முதலிய அவதார புருஷர்கள் இருபத்துநால்வர். நான்கு வகைத்தேவராசி புருஷர்களாவார்:-சக்கரவர்த்திகள் பன்னிருவர், பலதேவர்கள் ஒன்பதின்மர், வாசுதேவர்கள் ஒன்பதின்மர், பிரதி வாசுதேவர்கள் ஒன்பதின்மர் என்பவர்கள். இவர்கள் அருகக் கடவுளருளிய பன்னிரண்டு வேதங்களிற் சொல்லப்பட்ட கொல்லாமை முதலாகிய தருமங்களை உலகினர்க்கு எடுத்துச் சொல்லிப் பரவச் செய்தவர்களாதலின் 'நால்வர் பேணி வழங்கி' என்றார். அறு என்பது நால்வர் என்பதன் பகுதியாகிய நான்கு என்பதனைக்

கொண்டு முடிந்தது. அறுநான்கு - ஆறாகிய நான்கு என்றுதலிற் பண்புத் தொகைநிலைத்தொடர். புகழ்ச் சேவடி-இரண்டனுருபும் பயனுமுடன்தொக்கது. ஆற்றப்பெறு என்பது ஈண்டு ஒருசொல்லாய் முதனிலையாய் நின்று நால்வர் என்பதனோடு கூடி வினைத்தொகையாயிற்று; இது இறந்தகாலப் பெயரெச்சப் பொருளில் வந்த வினைத்தொகை; இதனை இரண்டு சொல்லாகக் கொண்டால் ஆற்ற என்னும் வினையெச்சத்தைத் தொழிற்பெயராக்கி ஆற்று தலைப் பெற்ற என்றுரைக்க. வழங்கி என்பது செயவெனெச்சத் திரிபு. நான்மறை என்பதில் நான்கு என்பதன் ஈறு கெட்டு நின்ற நால் என்பது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பயனை யுணர்த்தியது தொகைக்குறிப்பு. மறை என்பது கருவி யாகுபெயராய் மறையினால் உணர்த்தப்படுங் கடவுளை யுணர்த்தியது. மாந்தர் கடவுளை யுணர்தற்கு மறை துணைக்கருவியாக நிற்றலின் அஃது ஈண்டுக் கடவுளை யுணர்த்தியது கருவியாகுபெயரெனப்பட்டது. புரிதல்-எப்பொழுதுஞ் சொல்லுதல்; இஃது இப்பொருளுடையதாதலை "இருள்சேரிருவினையுஞ் சேரா விறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என்ற திருக்குறளின் விசேடவுரையில் 'புரிதல் எப்பொழுதுஞ் சொல்லுதல்' என்று பரிமேலழகர் கூறியதனாலறிக. மறை புரிந்து என்பதற்கு மறையிற் சொல்லப்பட்ட நெறிகளை விரும்பிச் செய்து என்றுரைத்தலுமாம். 'விண்ணோர்க் கிறை புரிந்து வாழ்த வியல்பு' என்பதற்கு 'விண்ணோர்க்கு இறை-தேவர்களுக்கெல்லாந் தலைவராகிய கடவுளை, புரிந்து - எப்பொழுதுஞ் சொல்லித் துதித்து, வாழ்தல் - வாழ்வது, இயல்பு - யாவர்க்கும் இயற்கையாம்' என்றுரைத்தலுமாம்.

தற்சிறப்புப் பாயிரம் முற்றிற்று.

---

## நூல்

1. சென்ற புகழ்செல்வ மீக்கூற்றஞ் சேவகம்
நின்ற நிலைகல்வி வள்ளன்மை—என்றும்
வழிவந்தார் பூங்கோதா யாறு மறையின்
வழிவந்தார் கண்ணே வனப்பு.

(ப-ரை) பூ கோதாய்-மலரை யணிந்த கூந்தலையுடையாளே!, சென்ற புகழ்-(யாவரும்) ஒப்புக்கொண்ட புகழும், செல்வம்-(பிறர்க்குப் பயன்படும்) செல்வமும், மீக்கூற்றம் - (யாவரும்) மேன்மையாகக் கொள்ளும் சொல்லும், சேவகம் - வீரத்தில், நின்ற நிலை - அசையாது நின்ற நிலையும், கல்வி - கல்வியறிவும், வள்ளன்மை-ஈகைத்தன்மையும், ஆறும்-ஆகிய இவ்வாறும், வழி வந்தார் - உயர் குடியிற் பிறந்து, மறையின் வழி-வேத நெறியில், வந்தார் கண்ணே-நடப்பவரிடத்திலேதான், என்றும் - எக்காலத்திலும், வனப்பு - அழகைப் பெறுவன ஆம்.

(வி-ரை) மற்றவரிடத்தில் இவ்வாறும் நிலைநிற்பன அல்ல; நிற்பினும் சில நாளே நின்று மாறுவனவாம். ஆதலின், வழிவந்தார் கண்ணே வனப்பைப் பெறுவன. ஏ-பிரிநிலை. செல்லல் - யாவரும் ஒப்புக்கொள்ளல்; "செல்லாவா நல்கூர்ந்தார் சொல்" என்பதனுலு முணர்க. மீக்கூற்றம் - பண்புத் தொகைநிலைத்தொடர். கூற்றம் - தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; கூறு-பகுதி, அம்-செயப்படு பொருண்மை விகுதி, பகுதி ஒற்றிரட்டலும், உகரக்கேடும் சந்தி; இது காரண இடுகுறிப்பெயராயினும், இங்கு இடுகுறி மாத்திரமாய் எழுத்தாலாகிய சொல்லை யுணர்த்திற்று. வள்ளன்மை - பண்புப்பெயர்; வள்-பகுதி, ள்-சந்தி, அல்-பகுதிப்பொருள் விகுதி, மை-மாட்சிமை யென்பதிற்போல வந்த விகுதிமேல் விகுதி. வழி-உயர்குடி. வந்தா ரென்னும் இரண்டில் முன்னது வினைமுற்று

வினையெச்சமான தென்றும், பின்னது வினையாலணையும் பெய ரென்றுங் கொள்க. பூங்கோதாய் - இரண்டாம் வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயர்; ஈற்றைகாரம் ஆயெனத் திரிந்தது; (நன்-பெயர்-சு - சகூ;) இது மகடூஉ முன்னிலை.

**2.** **கொலைபுரியான் கொல்லான் புலான்மயங்கான் கூர்த்த**
அலைபுரியான் வஞ்சியான் யாதும்—நிலைதிரியான்
மண்ணவர்க்கு மன்றி மதுமலிபூங் கோதாய்
விண்ணவர்க்கு மேலாய் விடும்.

(ப - ரை) மது மலி - தேன் நிறைந்த, பூ - பூவை யணிந்த, கோதாய் - கூந்தலையுடையாளே!, கொலை புரியான்-பிறர் புரியும் கொலைத்தொழிலை விரும்பாதவனும்; கொல்லான்-(தான் ஒருயிரை யும்) கொல்லாதவனும்; புலால்(-வேறொன்றின்) தசையை, மயங் கான் - அறிவு மயங்கித் தின்னாதவனும்; கூர்த்த - மிகுந்த, அலை- (பிறரை) வருத்துந் தொழிலை, புரியான் - செய்யாதவனும், வஞ்சி யான் - பொய்யொழுக்க மில்லாதவனும்; யாதும் - சிறிதும், நிலை திரியான்-(தான் மேற்கொண்ட) விரதத்தி னிலையினின்றும் மாறாதவனுமாகிய ஒருவன், மண்ணவர்க்கும் - மண் உலகத்தாருக் கும், அன்றி-அல்லாமல், விண்ணவர்க்கும்-தேவர்களுக்கும், மேல்- மேன்மையுள்ளவன், ஆய் விடும் - ஆகாமலிரான்.

(வி-ரை) பிறர் செய்யுங் கொலையை விரும்பாமை முதலிய அறுதொழிற்கும் வினைமுதல் ஒருவனே ஆதலால், இதனைப் பெயர்ச் செவ்வெண் என்க. கொலை - தொழிற்பெயர்; கொல் - பகுதி, ஐ - புடைபெயர்ச்சி விகுதி. அலை-முதனிலைப் பிறவினைத் தொழிற்பெயர்; அலைந்தான், அலைத்தானெனத் தன்வினை பிற வினைகளுக்குப் பொதுவாயினும், இங்கு முதனிலை பிறவினையாய்

நின்றது; தன்வினையாக வைத்துரைப்பினும் பொருந்தும். முன்னுள்ள உம்மை முற்றுப் பொருளோடு இழிவுசிறப்பில் வந்தது. பின்னுள்ள இரண்டில் முன்னது இழிவுசிறப்போடு எதிரதுதழீஇயதிலும், பின்னது உயர்வுசிறப்போடு இறந்ததுதழீஇயதிலும் வந்தன. நான்க னுருபிரண்டும் ஐந்தாவத னெல்லைப் பொருளன. மேல்-பண்பாகுபெயர். ஆய்விடும்-எதிர்காலச் செய்யுமென் முற்று; ஆ-பகுதி, ய்-சாரியை, விடு-துணிவுப்பொருண்மை விகுதி, அனைத்து மொருபகுதி, உம்-எதிர்கால வினைமுற்று விகுதி, உகரக்கேடு சந்தி; இது பெயரெச்சமே வினைமுற்றானது.

3. தவமெளிது தான மரிதுதக் கார்க்கேல்
அவமரி தாத லெளிதால்—அவமிலா
இன்பம் பிறழி னியைவெளிது மற்றதன்
துன்பந் துடைத்த லரிது.

(ப-ரை) தவம் எளிது - (யார்க்கும்) விரதஞ் செய்தல் எளியது; தானம் அரிது-(நல்லோர்க்குப்) பொருளீதல் அருமையுடையது; தக்கார்க்கு ஏல்-தகுதியுடையார்க்கானால், அவம் அரிது-குற்றஞ்செய்தல் அரிது; ஆதல் எளிது-நல்வழியில் சார்தல் எளியது; அவம் இலாத-குற்ற மில்லாத, இன்பம்-(முத்தியுலகத்து) இன்பம், பிறழின்-தவற நடப்பானாயின், இயைவு - (பிறப்பு) தொடர்தல், எளிது-எளியது; அதன் துன்பம்-பிறப்புத் தொடர்ச்சியினாலாம் துன்பத்தை, துடைத்தல் அரிது - நீக்குதல் அரிது.

(வி-ரை) கைவிட்டுப் பொருள் போகாமையினால் தவமெளிதும், கைவிட்டுப் பொருள் போகுதலால் தானம் அரிதுமாயின. பின் நின்ற அவம் என்றும் நிலைத்ததல்லாமல் தன்னின் ஒப்பதும், மிக்கது முடைமையாகிய குற்றம். இயைவு - தொழிற்பெயர்; இயை-பகுதி, வு-புடைபெயர்ச்சியை யுணர்த்தும் விகுதி. எளிது -

பண்படியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. எண்மை-பகுதி, து - ஒன்றன்படர்க்கை விகுதி, மையீறு கெட்டது சந்தி, இ-சாரியை. அரிது-இதுவும் பண்படியாகப் பிறந்த அவ் வினைமுற்று; பகுதி- அருமை; மற்ற உருப்பு மேலதனோடொக்கும்.

4. இடர்தீர்த்த லெள்ளாமை கீழினஞ் சேராமை
படர்தீர்த்தல் யார்க்கும் பழிப்பின்—நடைதீர்த்தல்
கண்டவர் காமுறுஞ்சொற் காணிற் கலவியின்கண்
விண்டவர் நூல் வேண்டா விடும்.

(ப-ரை) இடர் தீர்த்தல் - (பிறருக்கு நேரிட்ட) இடுக்கணை நீக்குதலையும்; எள்ளாமை-(பிறருடைய) பழியை எடுத்துப் பேசாமையையும்; கீழ் இனம் சேராமை - கீழ்மக்களது இனத்தைச் சேராமையையும்; யார்க்கும் - (வறியார்) யாவர்க்கும், படர் தீர்த்தல் - பசித் துன்பத்தை நீக்குதலும்; பழிப்பின் நடை - (அறிவுடையோர்) பழித்தலையுடைய நடையினின்றும், தீர்த்தல் - தன்னை நீக்குதலையும்; கண்டவர் - (தன்னை) எதிர்ப்பட்டவர், காமுறும் - விரும்பப்படுகின்ற, சொல் காணின் - சொல்லையும் (ஒருவன்) செய்வானாயின், கலவியின்கண் - (மனைவியோடு கூடியிருத்தலாகிய) இல்வாழ்க்கையினின்று, விண்டவர்-நீங்கிய முனிவர் செய்த, நூல் வேண்டா-நூல்கள் வேண்டாதன ஆய், விடும் - ஒழியும்.

(வி-ரை) இடர்தீர்த்தல் முதலிய ஆறையும் செய்பவனுக்கு முனிவர்கள் சொல்லிய நூலைக் கற்றலாவது, கற்பித்தலாவது வேண்டுவதில்லை யென்பதாம். கீழ் - பண்பாகுபெயர்; கீழினம் - ஒன்றன்கூட்டத் தற்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். எள்ளாமை-எதிர்மறைத் தொழிற்பெயர்; எள்-பகுதி, ள்-சந்தி, ஆ-எதிர்மறை விகுதி; அனைத்து

மொருபகுதி, மை-புடை பெயர்ச்சி விகுதி; உடன்பாட்டில் எள்ளின்மை, எள்ளுகின்றமை என வரும்; எதிர்காலத்தில் வாராது. காமுறும்: காமமென்னும் பெயரை வினைப்படுத்தற்கு உறு என்னும் உரியடியாகப் பிறந்த வினை முதனிலை புணர்ந்தபோது, அம் கடைக்குறையாய் நின்ற காமுறு-பகுதி, உம் - நிகழ்காலப் பெயரெச்ச விகுதி, உகரக்கேடு சந்தி. கலவி-தொழிற்பெயர். விண்டவர் - ஈறு திரிந்த வினையாலணையும் பெயர்; ஈறு திரியாதாயின் விண்டாரென வரும்; விள் - பகுதி. நூல் - உவமையாகுபெயர்; இதனை (நன்-பொதுப்பாயிரம்-சூ-உச, உரு) ஆல் உணர்க.

5. தனக்கென்று மோர்பாங்கற் பொய்யான் மெய்யாக்கும்
எனக்கென் றியையான் யாதொன்றும்—புனக்கொன்றை
போலு மிழையார் சொற்றேறுன் களியானேல்
சாலும் பிறநூலின் சால்பு.

(ப-ரை) தனக்கு என்றும் - தனக்கு எனவும், ஓர் பாங்கன் என்றும் - தன்னைச் சார்ந்தவனுக்கு எனவும், பொய்யான்-பொய் கூறுன்; மெய் ஆக்கும்-உண்மையையே சொல்லுவான்; யாது ஒன்றும் - யாதொரு பொருளையும், எனக்கு என்று-எனக்குரியதென, இயையான் - (அப் பொருளின்மேல்) அன்பு வையான்; புனம் கொன்றை - முல்லை நிலத்திலுள்ள கொன்றை மலரை, போலும்-ஒக்கும், இழையார் - ஆபரணங்களை யணியும் மாதர்களது, சொல் தேறுன் - சொல்லை உண்மை யென்று நம்பான்; களியான் எல் - (யாம் செல்வப் பொருளுடையோமென்று) செருக்குக் கொள்ளானேல் (அவனிடத்து), நூலின் சால்பு-அற நூல்களிற் சொல்லிய மேன்மையாகிய பொருள்களெல்லாம், சாலும் - வந்து நிரம்பும்.

(வி-ரை) தனக்கென்றும், தன்னைச் சார்ந்தவனுக்கென்றும் சொல்லுதலால் பொய் இரண்டு வகை; எனவே, இச் செய்யுளும்

ஆறு பொருளைக் கூறியதாயிற்று. பிற-அசைச்சொல். பாங்கன் - தோழன்; இது சார்ந்தவன் மேலது. இச்சொல்லி னீற்றில் நான் காம் வேற்றுமை தொகையாய் நிற்றலின், ஈற்று னகரம் திரிந்தது. முன்னுள்ள என்று மென்பதனை இதனோடுஞ் சார்த்தி யுரைக்க. கொன்றை-முதலாகுபெயர். கடையில் நின்ற ஏலென்பதனைப் பொய்யான் முதலியவற்றோடுங் கூட்டுக; இது கடைநிலைத்தீவகம். சாலும்-உரிச்சொலடியாகப் பிறந்த செய்யுமென் முற்று. சால்பு அத் தொழிற்பெயர்.

6. நிறையுடைமை நீர்மை யுடைமை கொடையே [மை
பொறையுடைமை பொய்ம்மை புலாற்கண்—மறையுடை
வேயன்ன தோளா யிவையுடையான் பல்லுயிர்க்கும்
தாயன்ன னென்னத் தகும்.

(ப-ரை) வேய் அன்ன தோளாய்-மூங்கிலை யொத்த தோளை யுடையாளே!, நிறை-(பிறர்பொருள் முதலியவற்றில் செல்லாமல்) மனத்தை நிற்கச் செய்தலை, உடைமை ஏ - உடையானாகுதலும்; நீர்மை-நற்குணத்தை, உடைமை ஏ-உடையானாகுதலும்; கொடை-(வறியவர்க்குப் பொருளைக்) கொடுத்தலை, உடைமையே-உடையானாகுதலும்; பொறை-(தனக்குத் தீங்கு செய்தவனுக்குத் தானுஞ் செய்யாமல்) பொறுக்குதலை, உடைமை ஏ - உடையானாகுதலும்; பொய்ம்மைக்கண் - பொய் கூறுதலிலும், புலாற்கண் - தசை உண்ணலிலும், மறை-(தன்னை) மறுத்தலை, உடைமை ஏ-உடையானாகுதலும், இவை உடையான்-ஆகிய இச்செயல்களையுடையான், பல் உயிர்க்கும்-பல உயிர்களுக்கும், தாய் அன்னன் - தாயை ஒத்த தன்மையான், என்னத்தகும் - என்று சொல்லுதல் தகும்.

(வி - ரை) இவனிடத்து யாவரும் அன்பு பாராட்டுதலே யன்றி, விலங்குகளும் அவ்வா றிருக்கு மென்பது. உடைமை என்

யன செயப்படுபொருள் குன்றாக் குறிப்புத் தொழிற்பெயர். நிறை- பிறவினைத் தொழிற்பெயர்; நில் - தன்வினை முதனிலை, று - பிற வினை விகுதி, இதன் புணர்ச்சியில் லகரங்கெட நின்ற நிறு-பகுதி, ஐ-புடைபெயர்ச்சி விகுதி, உகரக்கேடு சந்தி. கொடை, மறை-தன் வினைத் தொழிற்பெயர். எண்ணுப்பொருளதாகிய எகாரத்தை உடைமை யென்பவற்றி னீற்றிலெல்லாங் கொள்க. தொல் - இடை-நக-சூ: "எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும், எண் ணுக் குறித்தியலும் என்மனார் புலவர்." தேய்-வடி வுவமை. ஏழ னுருபைப் பொய்ம்மை யென்பதனோடுங் கூட்டுக.

7. இன்சொ லளாவ லிடமினிதூண் யாவர்க்கும்
வன்சொற் களைந்து வகுப்பானேல்—மென்சொல்
முருந்தேய்க்கு முட்போ லெயிற்றினாய் நாளும்
விருந்தேற்பர் விண்ணோர் விரைந்து.

(ப - ரை) முருந்து - மயிலிறகின் அடியை, எய்க்கும் - ஒத் திருக்கும், முள் எயிற்றினாய்-கூரிய பற்களையுடையாளே!, யாவர்க் கும் - எல்லோர்க்கும், நாளும் - என்றும், இன்சொல் - இன் சொல்லையும், அளாவல்-மனங்கலந்து உறவாடலையும், இடம்-தங்கு தற்கிடத்தையும், இனிது-இனிய பொருளையும், ஊண் - உணவை யும், வன் சொல்-கடுஞ் சொல்லை, களைந்து - நீக்கி, மெல் சொல்- மென்மையாகிய சொல்லையும், வகுப்பான் எல்-(ஒருவன்) கொடுப் பானாயின், விண்ணோர் - தேவர்கள், விரைந்து - விரைந்து வந்து, விருந்து ஏற்பர்-விருந்தினனாக ஏற்றுக்கொள்ளுவர்

(வி - ரை) இந்த அறங்களைச் செய்பவன் மறுமையில் விண் ணுலகத்தில் இன்பம் நுகர்வா னென்பது. இன்சொலாவது - தன்னை நோக்கி வந்தவர்களைக் கண்டமாத்திரத்தில் தன் மனத்தி லுள்ள மகிழ்ச்சியை வெளிப்படுக்குஞ் சொல்; மனத்தி னினிமை

யைச் சொல்லின்மேலேற்றியது ஒரு மரபுவழுவமைதி; ஆயினும், பண்புத் தொகைநிலைத்தொடரென்க. மென்சொலாவது - தன் பணிவை வெளிப்படுக்குஞ் சொல்; மேலே உரைத்தாற்போல உரைத்துக்கொள்க. மென்மை-பணிவு. போல்-அசை. விருந்து-பண்பாகுபெயர். இனிய பொருள்-பொன், ஆடை முதலிய பொருள்.

8. உடன்படான் கொல்லா னுடன்றூர்நோய் தீர்த்து
மடம்படான் மாண்டார்நூன் மாண்ட—இடம்பட
நோக்கும்வாய் நோக்கி நுழைவானேன் மற்றவனை
யாக்குமவர் யாக்கு மணைந்து.

(ப-ரை) உடம் படான்-(பிறர் செய்யுங் கொலைக்குத்) தான் உடன்படாமல், கொல்லான் - (தானும்) கொல்லாமல், உடன்றூர் நோய் - (பிணியால்) வருந்துகின்றவருடைய நோயை, தீர்த்து - (மருந்து முதலியவற்றைத் தந்து) தீர்த்து, மடம் படான்-அறிவில்லாச் செயலில் சேராமல், மாண்டார்-அறிவின் பெருமையுடையார் செய்த, நூல்-நூல்களை, மாண்ட - மாட்சிமைப்பட்ட தன்மையும் செயலும், இடம்பட - (தனக்குப்) பெருகும்படி, நோக்கும் வாய் - ஆராய்வதற்குரிய பெரியாரிடத்தில், நோக்கி - ஆராய்ந்து, நுழைவான் ஏல்-(அவை கூறிய ஒழுக்கத்தில்) ஒழுகுவானானால், அவனை-அவ் வறிவுடையானை, யாக்குமவர் - விட்டு நீங்காதவரை, அணைந்து - (மேற்கூறிய ஒழுக்கமெல்லாம்) கூடி, யாக்கும் - விட்டு நீங்குத லில்லை.

(வி-ரை) உடன்படாமை, கொல்லாமை, தீர்த்தல், மடம்படாமை, நோக்கல், நுழைதலென ஆறு பொருளமைந்து கிடத்தல் காண்க. யாத்தல்-கட்டுதல்; அது விட்டுப் பிரியாமை. மேற்கூறிய ஆறு செயலும், அவற்றை மேற்கொண்டு நடப்பவனை நெருங்கி

யிருப்பவர்களுக்கும் அவை தாமே வந்து அடையு மென்பது. உடன்றார் - இறந்தகால வினையாலணையும் பெயர்; உடல் - பகுதி, ற்-இறந்தகால இடைநிலை, ஆர்-பல்லோர் படர்க்கை விகுதி, லகரம் றகரமானது சந்தி, அது னகரமாதல் மெலித்தல்; இடம் - விரிவு. யாக்குமவர் - ஈறு திரிந்த எதிர்கால வினையாலணையும் பெயர்; யா-பகுதி, க்-சந்தி, கு-சாரியை, உம்-எதிர்காலவிடைநிலை, உகரக்கேடு சந்தி, அ-சாரியை, வ்-சந்தி, அர்-பல்லோர் படர்க்கை விகுதி; இதனை யாக்கும் அவர் எனப் பிரித்து இரண்டு சொல் என்பாருமுளர்; ஆய், மேய் இவ் வினையெச்சங்களில் விகுதியாய் நின்ற யகரமெய் ஆயான், மேயா னென்பவற்றில் இடைநிலையாய் நிற்றல் போல உம் விகுதி இடைநிலையான தென்க.

9. கற்றாரைக் கற்ற துணரா ரெனமதியார்
உற்றாரை யன்னண மோராமல்—அற்றார்கட்
குண்டி யுறையு ளுடுக்கை யிவையீந்தார்
பண்டிதராய் வாழ்வார் பயின்று.

(ப - ரை) கற்றாரை-கற்று வல்லாரை, கற்றது-(தாம்) கற்ற கல்விப்பொருளை, உணரார் என-அறியமாட்டா ரென்று, மதியார்-எண்ணார்; உற்றாரை - நட்பினரை, அன்னவண்ணம் - அப்படி, (நாம் அவர்மேல் அன்பு வைத்திருத்தல்போல நம்மேல் வைத்தில ரென்று) ஓராமல்-மதியாமல், அற்றார்கட்கு - துறவிகளுக்கு, உண்டி - உணவும் மருந்தும், உறையுள்-இருப்பிடமும், உடுக்கை-ஆடையும், இவை-ஆகிய இவற்றை, ஈந்தார்-கொடுப்பவர், பண்டிதர் ஆய் - (உலகரால்) பண்டிதரென மதிக்கப்பட்டு, பயின்று-(யாவரோடும்) பகை யில்லாமல், வாழ்வார் - உயிர் வாழ்வார்.

(வி-ரை) கற்றது - வினைமுதல்வினையைச் செயப்படுபொருளின்மே லேற்றிக் கூறிய வினையாலணையும் பெயர்; கல்-பகுதி, ற்-

இறந்தகால இடைநிலை, அ-சாரியை, து - ஒன்றன் படர்க்கை விகுதி. அன்னவண்ண மென்பது அன்னணமென மரீஇயது; இன்னண மென்பது மிது. அற்றார் - யான், எனது என்னு மிரு வகைப் பற்றும் நீங்கினார்; இதற்குப் பொருளற்றாரென வறியார்மே லேற்றிக் கூறினும் பொருந்தும். உண்டி உண்ணப்படுவதென் னும் பொருளில் தொழிலடியாகப் பிறந்த பெயர்; உண் - பகுதி, து-சாரியை, இ-செயப்படு பொருண்மை விகுதி, தகரம் டகரமாத லும், உகரக்கேடும் சந்தி. மருந்தும் உண்ணப்படுவதாதலின் உண்டி யெனப்பட்டது. உடுக்கை - தொழிலடியாகப் பிறந்த பெயர். உடு- பகுதி, க்-சந்தி, கு - சாரியை, உகரக்கேடு சந்தி, ஐ - செயப்படு பொருண்மை விகுதி; கை விகுதி யெனின் தொழிற்பெய ரென்க. உறையுள்-உள் புடை பெயர்ச்சி விகுதி யெனக்கொண்டு தொழி லாகுபெய ரென்க; இருமொழியாகக் கொள்ளின், உள் இடப் பெயராக வைக்கின், இத் தொடரை வினைத் தொகைநிலைத் தொட ரென்க.

10 செங்கோலான் கீழ்க்குடிகள் செல்வமுஞ் சீரிலா
வெங்கோலான் கீழ்க்குடிகள் வீந்துகவும்-வெங்கோல்
அமைச்சர் தொழிலு மறியல்மொன் றாற்ற
எனைத்து மறியாமை யான்.

(ப-ரை) செங்கோலான்-முறைசெய்யும் அரசனது, செல்வ மும்-செல்வப்பொருள் வளர்தலும்; கீழ்க்குடிகள்-(அவனது ஆணை யின்) கீழ் வாழுங்குடிகளது, செல்வமும்-செல்வப்பொருள் வளர்த லும்; சீர் இல்லாத-புகழில்லாத, வெம்கோலான் செல்வம் - முறை தவறுகின்ற அரசனது செல்வம், உக்கு வீவும்-அழிந்தொழிதலும்; கீழ்க்குடிகள்-(அவனது ஆணையின்) கீழ் வாழுங் குடிகள் செல்வம், உக்கு வீவும்-அழிந்தொழிதலும்; வெங்கோல்-முறை தவறுதலும்; அமைச்சர் உக்கு வீவும்-மந்திரிமார் அழிந்தொழிதலும்; தொழில்

உக்கு வீவும்-எடுத்த தொழில் முடியாமலொழிதலும், ஒன்று-(இவ்வாறுக்கும்) ஒரு காரணத்தை, எனைத்தும் - எவ்வளவும், அறியாமையான் - அறியாமையினுல், ஆற்ற - மிகுதியும், அறியலம்-அறியமாட்டோம்.

(வி - ரை) செல்வமு மென்பதைச் செங்கோலா னென்பதனேடும், உம்மையை நீக்கி வெங்கோலான் கீழ்க்குடிக ளென்பவற்ரேடும், வீந்துகவு மென்பதை அமைச்சர்தொழி லென்பவற்ரேடுங் கூட்டுக. இத்தொடரில் நிலைமொழி வருமொழிகளைப் பின்முன்னுக நிறுத்தி விகுதிகளைப் பிரித்துக் கூட்டி உரைக்க. அரசன் செய்யு முறை ஒரு பக்கத்தில் சாயாமல் செவ்விய கோல்போலுதலால் செங்கோல் உவமை யாகுபெயர்; வெங்கோல் அதற்கு மாருகிய கோல். உகவு-தொழிற்பெயர்; உகு-பகுதி, அ - சாரியை, வு-புடைபெயர்ச்சி விகுதி, உகரக்கேடு சந்தி. அமைச்சர் - பக்கத்திலுள்ளார்; இது அமாத்திரிய ரென்னும் வடமொழி. ஒன்று - எண்ணலளவையாகுபெயர். எனைத்தும்-உம்மை முற்றும்மை; எனைத்து-எத்தனைத்தென்பதன் மரூஉ. செங்கோலும், வெங்கோலுமே காரணமா யமைதலால், அறியல மொன்றென்றது புறம்பாகிய காரணத்தை.

11. அவாவறுக்க லுற்ருன் றளரானவ் வைந்தின்
அவாவறுப்பி னுற்ற வமையும்—அவாவருன்
ஆரு மவனுயி னங்களிற்றி னுட்டுண்டு
போகும் புழையுட் புலந்து.

(ப - ரை) அவா - விருப்பினை, அறுக்கல் உற்ருன்-முற்றுங் களையத் தொடங்கினவன், தளரான் - கலங்குதலில்லாதவனுகி, அவ் ஐந்தின்-அப்பொறிகளினது ஐம்புலங்களின், அவா-விருப்பை, அறுப்பின் - களைவானுனல், ஆற்ற-மிகுதியும், அமையும் - (துறவி

ஞெழுக்கம்) நிரம்புவான்; அவன் - அத் தொடங்கியவன், அவா - விருப்பு, அருன் ஆகும் ஆயின் - நீங்காஞனல், ஐங்களிற்றின் - ஐம்பொறிகளாகிய யானைகளினுல், ஆட்டு உண்டு-அலைப்புண்டு, புழையுள்-(நரகத்தின்) வாயிலில், புலந்து போகும்-துன்பமுற்றுச் செல்லுவான்.

(வி - ரை) இது துறவியைக் குறித்ததாதலால், அவா என்பது முன் துறந்து ஐம்புலங்களின்மேல் பழைய பழக்கத்திஞல் மீளவும் செல்லும் விருப்பம். அவ் - பலவின் படர்க்கைச் சுட்டுப் பெயர்; பொறிகள் செய்யுங் கொடுமையைப்பற்றி அவற்றின் பெயர்கூற அஞ்சி 'அவ்' என்ருர். பொறிகளாவன - மெய், வாய், கண், மூக்கு, செவி. ஐம்புலன்களாவன: - ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை. அவ்வைந்தின் என்பதற்குப் 'புலன், களாவேசம் (பெண்ணின்பம்), உடல், செல்வப்பொருள், மேம்பாடு என்பாரு முளர். ஐந்தின் அவாவறுத்த லாகிய தொழில் ஐந்தும், ஐங்களிற்றிஞல் புழையுட் போகுத லொன்றுமாகிய ஆறு பொருள் இச் செய்யுளி லமைந்துகிடத்தல் காண்க. ஆட்டு - முதனிலை திரிந்த தொழிற்பெயர். உண்ணல் - அநுபவித்தல். ஆட்டுண்டு, கொலையுண்டு, அடியுண்டு, கடியுண்டு என விகுதி பெற்ற தொழிற்பெயரோடும், முதனிலைத் தொழிற்பெயரோடும் உண்ணென்பது வாலால் இத் தொடரை இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடரென்க; ஒரு சொல்லெனக் கொண்டு செயப்பாட்டுவினை யென்னற்க.

12. கொலைக்களம் வார்க்குத்துச் சூதாடு மெல்லை
அலைக்களம் போர்யானை யாக்கு—நிலைக்களம்
முச்சா ரிகையொதுங்கு மோரிடத்து மின்னவை
நச்சாமை நோக்காமை நன்று.

(ப-ரை) கொலைக்களம் உம் - போர் செய்து கொல்லுதலை யுடைய இடத்தும், வார்க்குத்து உம்-நீர் நிலத்தைப் பிளக்குமிடத்தும்

இடத்தும், சூதாடும் எல்லை உம்-சூதாடுகின்ற இடத்தும், அலைக் களம் உம் - வருத்துகின்ற சிறைச்சாலை யிடத்தும், போர் யானை - போர் செய்யவல்ல யானைகளை, ஆக்கு - கொலை கற்பிக்கின்ற, நிலைக்களம் உம் - நிலையாகிய இடத்தும், முச்சாரிகை ஒதுங்கும் - யானை தேர் குதிரை இம் மூன்றும் சாரிகை யோடுகின்ற, ஓர் இடத்தும் - ஓரிடத்தும், இன்னவை-கொல்லுதல்முதல் சாரிகை யோடலீறாகிய இவற்றை, நச்சாமை - விரும்பாமையும், நோக்கா மை - போய்ப் பார்க்காமையும், நன்று - நன்மையைத் தரும்.

(வி-ரை) சென்று நோக்கினல் கொலைக்களத்தினிடத்தும், வாள் பயிலுமிடத்தும், யானைக்குக் கொலை பயிற்றுமிடத்தும், முச் சாரிகை யொதுங்குமிடத்தும் உடற்கு ஊறுண்டாம்; சூதாடுமிடத் துப் பழியும், பொருளிழவுக்குக் காரணமாகிய விருப்பும், சிறைச் சாலையினிடத்துப் பழியு முண்டாம்; ஆதலால் விரும்பாமையும், அதன் காரியமாகிய நோக்காமையும் நலந்தருவன வாயின. நன்று- பண்படியாகப் பிறந்த ஒன்றன் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று; நல் - பகுதி, று - ஒன்றன்படர்க்கை விகுதி, லகரம் றகரமானது சந்தி, அது னகரமானது மெலித்தல் விகாரம்; இது பன்மையி ஞெருமை வந்த வழுவமைதி. உம்மை கடைநிலைத் தீவகமாதலால் மேலவற்ரேடுங் கூட்டுக. அலை - முதனிலைத் தொழிற்பெயர், வார்க்குத்தென்பதில் குத்து என்னு முதனிலைத் தொழிற்பெயர் தொழிலாகுபெயர்.

**13.** விளையாமை யுண்ணாமை யார்டாமை யாற்ற
உளையாமை யுட்குடைத்தா வென்று—களையாமை
நூற்பட்டார் பூங்கோதாய் நோக்கி னிவையாறும்
பாற்பட்டாற் கொண்டொழுகும் பண்பு.

(ப - ரை) நூல் - நூலில், பட்டு - சேர்ந்து, ஆர் - நிரம்பிய, பூ-மலரை அணிந்த, கோதாய்-கூந்தலையுடையாளே!, நோக்கின் -

